


## முன்னுரை

சென்னையில் நடைபெற்ற தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியின் சாதாரணக் கூட்டம், 'பேரவை' என்று பெயரிட்டதாலோ என்னவோ, ஒரு மாநாடு போலவே நடந்து விட்டது! பந்தல் இருந்தது, கூட்டம் இருந்தது, கொடி யேற்றம் இருந்தது, ஊர் வலம் இருந்தது, சிற்றுண்டி இருந்தது, விருந்து இருந்தது, தீர்மானங்கள் இருந்தன, பேச்சுக்கள் இருந்தன!

நிதானப் போக்குடன் நடக்க வேண்டும் என்று நினைக்கும் சட்ட மன்ற உறுப்பினர்கள், 'ஊஹூம்... வேகம் போதவே போதாது' என்று துடிக்கும் காங்கிரஸ் இளைஞர்கள், 'எங்கே போராட்டம்?' என்று கேட்கும் கட்சித் தோழர்கள், உணர்ச்சி கொப்புளிக்கப் பேசும் மாணவர்கள் இவர்களையெல்லாம் சரிக்கட்டி, வழி காட்ட வேண்டிய பொறுப்பிலுள்ள காமராஜ், சுப்பிரமணியம் போன்ற தலைவர்கள் - அத்தனை பேரும் அந்தப் பேரவையில் கலந்து கொண்டார்கள்.

பாவம், காங்கிரசுக்கு தர்ம சங்கடமான நிலைதான்! மத்தியில் ஆளும் கட்சியாக இருக்கிறது. நம் மாநிலத்தில் எதிர்க்கட்சியாக இருக்கிறது. இந்த இரண்டு பொறுப்புக்களுடன் கூட, நாட்டின் ஒற்றுமையையும், ஜனநாயகத்தையும் காப்பதற்கு, பிற கட்சிகளுக்கு முன் உதாரணமாக இருக்க வேண்டிய பெரும் பொறுப்பும் அதற்கு இருக்கிறது. முதல் நாள் திரு சி. சுப்பிரமணியமும் இரண்டாவது நாள் திரு காமராஜும் கூறிய கருத்துக்கள் 69-தை விட 72-ஐப் பற்றி அவர்கள் கொண்டுள்ள கவலையை நன்கு வெளிப்படுத்தின.

மத்திய அரசு பலம் பொருந்தியதாக இருக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்திய சி. எஸ்., 'மாநில சுயாட்சி என்பது தெளிவற்ற கோரிக்கையாக இல்லாமல், திட்டவட்டமாக வரையறுத்து அறிவிக்கப்படவேண்டும்' என்று கூறினார். 'காங்கிரஸ், பிற கட்சிகளுடன் கூட்டு சேருவதைப் பற்றியும் தெளிவான கொள்கைகள் வகுக்கப்பட வேண்டும்' என்றும் வலியுறுத்தினார்.

'மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்குமிடையே நிலவ வேண்டிய உறவுமுறைகளைப்பற்றி பிரதம மந்திரி

முதலமைச்சர்களுடன் கலந்து பேச வேண்டும்' என்று காமராஜ் இந்த மாநாட்டில்தான் முதன் முதலாகக் கூறினர். 'மக்கள் எண்ணங்களைப் புரிந்து கொண்டு காங்கிரஸ் கட்சி தன் கொள்கைகளையும் திட்டங்களையும் மாற்றி யமைத்துக் கொண்டால்தான் அது மக்கள் ஆதரவை மீண்டும் பெற முடியும்' என்று 'உடைத்து'க் கூறி விட்டார். துடித்துக் கொண்டிருக்கும் இளைஞர்களுக்கு அரசியல் தலைவர்கள் சரியான வழி காட்டவில்லை யென்ருல், அவர்களை நிச்சயமாக வீட்டுக்கு அனுப்பி விடுவார்கள் என்று அவர் 'பச்சை' யாகச் சொல்லி விட்டார்.

## சிந்தனைக்குச் சில...

**சி. சுப்பிரமணியம்.**

''முன்பெல்லாம் கஷ்டங்கள் வந்தால் 'எல்லாவற்றுக்கும் கடவுளே பொறுப்பு!' என்று ஆண்டவன் மீது பழியைப் போட்டுத் தப்பித்துக் கொள்வது வழக்கம். அதை மூட நம்பிக்கை என்ருர்கள். இப்போது தி. மு. க. மந்திரிகள் எந்தக் கஷ்டம் வந்தாலும் 'டில்லியே பொறுப்பு!' என்று மத்திய அரசைக் காட்டி தப்பித்துக் கொள்ளப் பார்க்கிருர்கள். இதுவும் ஒருவிதமான மூட நம்பிக்கை என்பதை மக்கள் புரிந்து கொள்ள வேண்டும்.''

**ஈ. வெ. கி. சம்பத்.**

''எல்லோருக்கும் பி. யூ. சி. வரை இலவசக் கல்வி' என்ற காங்கிரசின் திட்டத்தை அன்று முதலமைச்சராக விருந்த அண்ணு ஏற்காமல் 'ஏழைகளுக்கு மட்டும்தான் இலவசக் கல்வி' என்று அறிவித்தார். ஆனல் காமராஜரோ, 'தன்னை ஏழை என்று நிரூபிக்க அதிகாரிகளிடம் சான்றிதழ் பெறுவதற்குக்கூட ஏழைகள் அவதிப்படுவார்கள். பணக்காரர்கள்தான் பணம் செலவழித்து 'ஏழை' என்று சர்டிபிகேட் வாங்கிப் பலன் பெறுவார்கள். எல்லோருக்கும் இலவசம் என்ருல், ஏழைகள் நிம்மதியாகப் பலன் பெறுவார்கள்' என்ருர். இதை அண்ணு ஒப்புக்கொள்ளவில்லை. ஆனல், புதிய அமைச்சரவை இந்த விஷயத்தில் 'அண்ணு வழி'யைப் பின்பற்ருமல் எங்கள் 'காமராஜ் வழி'யைப் பின்பற்றியதை வரவேற்கிருேம்.''

**எம். பக்தவத்சலம்.**

''நம் புதிய முதலமைச்சர், 'மதுவிலக்கு, காங்கிரஸ்காரர்களின் தலைவரான காந்தியடிகளின் திட்டம்; அதைச் சரியாக அமுல் நடத்த இருபது கோடி ரூபாய் மத்தியக் காங்கிரஸ் அரசு தர வேண்டும்' என்கிருர். காந்திஜிக்கு முன் தோன்றிய திருவள்ளுவரே கள் குடியை எதிர்த்திருக்கிருரே! திருவள்ளுவரின் வாரிசுகள் என்று சொல்லிக் கொள்பவர்கள் மத்திய சர்க்காருடன் வீணுகப் பேரம் பேசாமல், மது விலக்கை ஒழுங்காக அமுல்படுத்தி வள்ளுவரின் லட்சியத்தை நிறைவேற்ற வேண்டும்.''

## இளைய தலை முறை

இளமைத் துடிப்போடும், அரசியல் விவேகத்தோடும் அவ்வப்போது நல்ல

ஆணைக்குக் காத்திருப்பவர்கள்...



யோசனைகளையும் தீர்மானங்களுக்குத் திருத்தங்களையும் வெளியிட்டுக் கொண்டிருந்தார், முன்னாள் மாணவர் தலைவரும், இந்நாள் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி உறுப்பினரும், வழக்கறிஞருமான தஞ்சை ராமமூர்த்தி.

சுதந்திரப்போராட்ட காலத்து தீவிரத்தையும் வேகத்தையும் நினைவு படுத்திப் பேசினார் இன்னோர் இளைஞர். அவர்தான் திருநெல்வேலி மாவட்ட இளைஞர் காங்கிரஸ் கன்வீனர் திரு எஸ். கே. டி. ராமச்சந்திரன்.



வழிகாட்டிகள்

'சட்டமன்ற காங்கிரஸ் உறுப்பினர்கள் மந்திரிகளுக்குச் 'சுடச் சுட'க் கொடுப்பதில்லை' என்று அவருக்கு ஒரே கோபம்! அடேயப்பா! அனலையே கக்கி விட்டார்.

அதற்கு, அடக்கமாக, அதே நேரத்தில் அழுத்தந் திருத்தமாகப் பதிலளித்தார் திருமங்கலம் சட்டமன்ற உறுப்பினரான இளைஞர் திரு சித்தன். "பொறுப்புள்ள ஒரு எதிர்க்கட்சி எப்படி பார்லிமெண்டரி ஜனநாயக மரபுகளை மதித்து பண்புடன் பணியாற்ற வேண்டுமோ, அப்படி நாங்கள் அடக்கமாகப் பணியாற்றுகிறோம். பிற மாநிலங்களில் நடப்பது போல் காலணிகளையும் நாற்காலிகளையும் எடுத்து வீசி ஆர்ப்பாட்டம் செய்து அநாகரிகமாக நடந்து கொள்ள வேண்டும் என்று எங்களைத் தாக்கிப் பேசிய நண்பர் எதிர்பார்க்கிறாரா?'' என்று கேட்டார். நியாயந்தானே!

மதுரையில் நடைபெற்ற போலீஸ் அடக்குமுறை நிகழ்ச்சிகளைப் பற்றிய தீர்மானத்தை ஆதரித்துப் பேசிய இளைஞர் காங்கிரஸ் தலைவர் குமரி அனந்தன், கட்டபொம்மனை கர்ஜித்து, கண்ணகியாக சீறினார்.

மதுரை தியாகராஜர் கல்லூரியில் தேசிய கீதத்திற்கு நேர்ந்த அவமானத்தைக் கண்டிக்கும் தீர்மானத்தை ஆதரித்துச் சில மாணவர்கள் ஆவேசத்துடன் பேசினர்.

ஆனால், நாட்டுக்கே வழி காட்ட வேண்டிய பொறுப்புள்ள மூத்த கட்சியான காங்கிரஸ், கல்லூரியில் பயின்று கொண்டிருக்கும் மாணவர்களை அரசியலுக்கு இழுத்து, தன் கட்சிப் பேரவையில் பங்கு கொள்ளச் செய்தது சரியா?

## பின்னுரை

நாட்டில் நெருக்கடி தோன்றிய போதெல்லாம் காந்திஜி, சத்திய சோதனை மூலம் ஆத்ம சுத்தி செய்து கொண்டு சோதனைகளைச் சந்திப்பார்.

சோதனைகள் மலிந்த இந்த நேரத்தில், அரசியல் கட்சிகளுக்கு, குறிப்பாகக் காங்கிரசுக்கு அந்தக் காந்தியப் பாதையை உணர்த்தி யிருக்கிறார் காமராஜ். "முதலில் நம் பாதையைத் தெளிவாக்கிச் சுத்தப் படுத்திக் கொண்டு பயணத்தைத் தொடருவோம்!'' என்று அவர் குரல் கொடுத்திருக்கிறார். ஆனால், தேனாம்பேட்டையில் ஒலித்த குரல், டில்லியில் எதிரொலிக்குமா?

?

அகில இந்திய காங்கிரஸ் என்ன செய்யப் போகிறது?

# மூன்றெழுத்து...

ஈராயிரம் ஆண்டுகள் அன்னைத் தமிழகம் தவமிருந்து பெற்றெடுத்த தலை மகன்—

'சிங்க நடையும், சிங்காரத் தென்றல் நடையும் - பொங்கு கடல் நடையும், புரட்சிக் கவி நடையும் ஒரு சேரத் தன் உரை நடையால் கண்ட பூமான், தம்பிமார் படை மீது விழியோட்டி வெற்றி கொள்ளும் கோமான்—

பூமிப் பந்தில் தமிழர்கள் எங்கெங்கு இருக்கிறார்களோ - அங்கெல்லாம் அவர்களது இதயத்தில் தங்கச் சிம்மாசனம் போட்டு வீற்றிருக்கும் மன்னன் - சிந்தை, அணு ஒவ்வொன்றையும் சிலிர்க்கச் செய்யும் வகையில் நம்மையெல்லாம் 'தம்பீ' என்று அழைத்திட்ட அண்ணன் - பேரறிஞர் அண்ணா அவர்கள் நம்மை விட்டுப் பிரிந்து வங்கக் கடலருகில் நீங்காத் துயிலில் ஆழ்ந்திருக்கிறார்.

உருவ அளவில் நம்மை விட்டுப் பிரிந்தார் என்றாலும்-நம் உணர்ச்சியோடும், எழுச்சியோடும், ஊனோடும், உதிரத்தோடும், உயிர் மூச்சோடும், நாடித் துடிப்போடும் அண்ணா அவர்கள் இரண்டறக் கலந்து விட்டார்கள்.

தமிழில் மூன்றெழுத்துக்கு ஒரு சிறப்புண்டு.

மூவேந்தர்-முக்கொடி-முக்கனி என மும்முரசார்த்தவர் தமிழர்.

அவர் வாழ்ந்த தமிழ் 'வாழ்வு'க்கு மூன்றெழுத்து.

அந்த வாழ்வுக்கு அடிப்படையான அன்பு-மூன்றெழுத்து.

அன்புக்குத் துணை நிற்கும் அறிவு—மூன்றெழுத்து.

அறிவார்ந்தோர் இடையிலெழும் காதலுக்கு மூன்றெழுத்து.

காதலர்கள் போற்றி நின்ற கடும் வீரம் - மூன்றெழுத்து.

வீரம் விளைவிக்கின்ற களம் - மூன்றெழுத்து.

களம் சென்று காணுகின்ற வெற்றி—மூன்றெழுத்து.

அந்த வெற்றிக்கு நமையெல்லாம் ஊக்குவிக்கும் அண்ணா-மூன்றெழுத்து.

இன்று அவர் நம்மிடையே இல்லை. இந்தச் சொல்லைக் கூறும்போது எழுகின்ற துக்கத்திற்கும் எல்லை இல்லை.

அந்த 'எல்லையில்லாத் துக்கம்-துயரம் பற்றி' அண்ணன் கொடுத்த தமிழ் எடுத்துப் பாடுகிறேன்-ஒரு கவிதை:

அண்ணா என்ற சொல்லால்
அழைக்கட்டும் என்றே—அவர் அன்னை
பெயரும் தந்தார்.
அந்த அன்னைக் குலம் போற்றுதற்கு
ஔவைக்கோர் சிலை
அறம் வளர்த்த கண்ணகிக்கோர் சிலை
வளையாத நெஞ்சப் பாரதிக்கும்
வணங்காமுடிப் பாரதிதாசருக்கும் சிலை
வீரமா முனிவருக்கும் சிலை
கால்டுவெல், போப்புக்கும் சிலை
கம்பருக்கும் சிலை
தீரமாய்க் கப்பலோட்டிய தமிழர்க்கும் சிலை
திக்கெட்டும் குறள் பரப்ப
திருவள்ளுவர்க்கும் சிலை
பத்துச் சிலை வைத்ததனால்—அண்ணன்
தமிழின்பால் வைத்துள்ள பற்றுதலை உலகறியும்
அந்த—அண்ணனுக்கோர் சிலை
சென்னையிலே வைத்தபோது......
ஆட்காட்டி விரல்மட்டும் காட்டி நின்றார்...
ஆணையிடுகின்றார் எம்
'அண்ணா' என்றிருந்தோம்.
அய்யகோ! 'இன்னும்
ஓராண்டே வாழப் போகிறேன்' என்று அவர்
ஓர் விரல் காட்டியது இன்றன்றோ புரிகிறது!

## முதலமைச்சர் மு. கருணாநிதி



எம் அண்ணா......இதய மன்னா......
'படைக்கஞ்சாத் தம்பியுண்'டென்று
பகர்ந்தாயே;
எமைவிடுத்துப் பெரும் பயணத்தை
ஏன் தொடர்ந்தாய்?
உன் கண்ணொளியின் கதகதப்பில்
வளர்ந்தோமே;
எம் கண்ணெல்லாம் குளமாக
ஏன் மாற்றி விட்டாய்?
நிழல் நீதான் என்றிருந்தோம்;
நீ கடல் நிலத்துக்குள்
நிழல் தேடப் போய் விட்டாய்
நியாயந்தானா?
கடலடியில் இருக்கின்ற முத்தெல்லாம்
முத்தல்ல;
நான்தானடா நன்முத்து எனச் சொல்லி
கடற்கரையில் உறங்குதியோ?
நாத இசை கொட்டுகின்ற
நாவை ஏன் சுருட்டிக் கொண்டாய்?
விரல் அசைத்து எழுத்துலகில்
விந்தைகளைச் செய்தாயே; அந்த
விரலை ஏன் மடக்கிக் கொண்டாய்?
கண் மூடிக்கொண்டு நீ சிந்திக்கும்
பேரழகைப் பார்த்துள்ளேன்......
இன்று—
மண்மூடிக் கொண்டுன்னைப் பார்க்காமல்
தடுப்பதென்ன கொடுமை!
கொடுமைக்கு முடிவு கண்டாய்;
எமைக் கொடுமைக்கு ஆளாக்கி
ஏன் சென்றாய்?
'எதையும்தாங்கும் இதயம்வேண்டு'மென்றாய்
இதையும் தாங்க ஏதண்ணா எமக்கிதயம்?
கடற்கரையில் காற்று வாங்கியது
போதுமண்ணா!

எழுந்துவா எம் அண்ணா!
வர மாட்டாய், வர மாட்டாய்;
இயற்கையின் சதி எமக்குத் தெரியுமண்ணா...
நீ இருக்கு மிடந்தேடி யான் வரும் வரையில்
இரவலாக உன் இதயத்தைத் தந்திடண்ணா...
நான் வரும்போது கையோடு கொணர்ந்து
அஃதை உன் கால் மலரில்
வைப்பேன் அண்ணா!

# மாயவரம் பைனான்ஷியல் கார்ப்பொரேஷன் லிமிடெட்

(1947ல் பப்ளிக் லிமிடெட் கம்பெனியாக இணைக்கப்பட்டது)

Regd. Office : மாயவரம்

அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் ரூ. 5,00,000

செலுத்திய மூலதனமும் ரிசர்வ் நிதிகளும் ரூ. 1,75,217

சீட்டில் ஈடுபடுத்தப்பட்ட தொகை ரூ. $2\frac{3}{4}$ கோடிக்கு மேல்

## எங்கள் பிக்மி சிட் ஸ்கீம்

எல்லோருக்கும் உகந்த, உரிய ஸ்கீம்

**மாதச் சந்தா ரூ. 5-00 தான்**

தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு மெம்பர்

**ரூ. 500-00 கடனாகப் பெறலாம்**

(இக்கடனை மாதம் ரூ. 5/- வீதம் 100 மாதத்தில் உளவடைக்கத் தகுதி உண்டு)

இவர்களுக்கும் 9% இலாபமும் உண்டு

குலுக்குதலில் பலனடையாத மெம்பர்கள் அடியிற்கண்ட ஏதேனும் ஒரு Slab முடிவில் withdraw செய்துகொண்டு அதற்குரிய 9%

இலாபத் தொகையுடன்
செலுத்திய தொகையையும் பெறலாம்

| முதல் Slab | | 2-வது Slab | | 3-வது Slab | | 4-வது Slab | |
|---|---|---|---|---|---|---|---|
| 23 மாதத்தில் | | 43 மாதத்தில் | | 61 மாதத்தில் | | 77 மாதத்தில் | |
| செலுத்திய சந்தா தொகை | பெறும் தொகை | செலுத்திய சந்தா தொகை | பெறும் தொகை | செலுத்திய சந்தா தொகை | பெறும் தொகை | செலுத்திய சந்தா தொகை | பெறும் தொகை |
| ரூ. 115/- | ரூ. 125/- | ரூ. 215/- | ரூ. 250/- | ரூ. 305/- | ரூ. 375/- | ரூ. 385/- | ரூ. 500/- |

20 பைசா ஒட்டிய நீளமான கவருடன் மற்ற விவரங்களுக்கு விண்ணப்பிக்கவும்.

மாயவரம்
7—3—69

R. கல்யாணசுந்தரம்,
மானேஜிங் டைரக்டர்.

# அறிஞர் அண்ணாவின் அன்பு இதயம்

பேரறிஞர் அண்ணா அவர்கள் அழுது கொண்டே குழந்தையாகப் பிறந்தபோது, அவர் வீட்டிலுள்ளவர்களெல்லாரும் சிரித்துக் கொண்டே வாரியணைத்து வரவேற்றனர்; அவர் சிரித்துக் கொண்டே மறையும் போது, நாட்டிலுள்ளவர்களெல்லாம் தேம்பித் தேம்பி அழுது கொண்டே வாரிக் கொடுத்து விடை பெற்றனர்.

பொதுவாக இந்தியாவின், குறிப்பாகத் தமிழகத்தின் கோடானுகோடி மக்களின் உள்ளங்களைத் தம் அறிவுத் திறனாலும், ஆற்றல் வலிமையினாலும், பண்பாட்டுச் செறிவினாலும், செயல் நுட்பத்தினாலும் கொள்ளை கொண்டு, எல்லாருடைய இதயங்களிலும் நீங்காத, நிறைந்த ஓர் இடத்தைப் பெற்றவர் அறிஞர் அண்ணா அவர்கள்.

வசதி, வாய்ப்பு, அதிகாரம், ஆதிக்கம், பட்டம், பதவி, தோட்டம், துரவு, காடு, மேடு, மாட மாளிகை, கூடகோபுரம், கோட்டை கொத்தளம், பணம் பகட்டு போன்றவற்றை எவரும் எங்கும் எளிதிலோ, அன்றி சிறு பெரு முயற்சியிலோ பெற்றுவிட முடிகிறது.

அவற்றை நேர்வழியிலும் பெறுகிறார்கள்; குறுக்கு வழியிலும் பெறுகிறார்கள்; கோணல் வழியிலும் பெறுகிறார்கள். ஆனால், ஒருவர் அவ்வளவு எளிதில் பெற முடியாத விலை மதிக்க முடியாத பொருள் பிறருடைய இதயமேயாகும்.

வசதி படைத்த பெரும் பணக்காரர் ஒருவர் எட்டு அடுக்கு மாளிகையில், உயரத்திலே உள்ள நிலா முற்றத்தில், பஞ்சணை பொருத்திய மலர்ப்படுக்கையில், பக்கத்தில் இருவர் வெண்சாமரம் வீச, மூவர் கால் பிடிக்க, நால்வர் கை பிடிக்கப் படுத்திருந்தாலும் அவரைச் சுற்றிலும் நின்று பணியாற்றுபவர்கள் பெரும்பாலும் என்ன எண்ணிக் கொண்டு பணியாற்றுவார்கள்?

'இவன் எப்போது ஒழிவானோ, நாம் எப்போது மன அமைதி பெறுவோமோ!' என்று எண்ணிக்கொண்டு தான் அடிமை வேலை செய்வார்கள்.

எவ்வளவு மிக்க வசதியுடையவராகவும், எவ்வளவு பெரிய பணக்காரராகவும் இருந்தாலும், பக்கத்திலிருந்து ஓயாது ஒழியாது பணியாற்றுபவர்கள் இதயத்திலே கூட கடுகளவும் இடம் பெற முடியாமல் வாழ்க்கையைக் கடத்திக் கொண்டு போகிறவர்கள் எத்தனை எத்தனையோ பேர்கள் இருக்கிறார்கள்!

தம் கீழே வேலை செய்பவர்களின் இதயத்தில் இடம் பெற முடியாத அதிகாரிகள், பக்கத்து வீட்டார் இதயத்தில் இடம் பெற முடியாத குடும்பத்தினர், தந்தை இதயத்தில் இடம் பெற முடியாத தனயன், இதயத்தில் இடம் கிடைக்காத தந்தை என்றவாறு, பிறர் இதயத்தில் இடம் பெறாமலும், பெற முடியாமலும் தவிப்பவர்கள் உலகில் கோடானு கோடி மக்கள் இருக்கிறார்கள்.

உடைமையை, ஆளை, வேலையை, அதிகாரத்தை, பட்டத்தை, பதவியை, வாக்குச் சீட்டைக் கூட விலை கொடுத்து வாங்கிவிட முடிகிறது பலரால்; ஆனால் பிறருடைய இதயத்தை எவராலும் விலை கொடுத்து வாங்கிவிட முடிவதில்லை. ஓர் இலட்ச ரூபாயை நீட்டி, ''உன் இதய அன்பை என்னிடம் என்றென்றும் வை'' என்று ஒருவர் கேட்டாலும், தொகையைப் பெற்றுக் கொண்டவன், தொகை கொடுத்தவரை வாயார வாழ்த்தினாலும், 'ஒரு இலட்சம் ரூபாய்தானே தந்துள்ளான், கஞ்சப் பயல். இவன் கொள்ளையடித்து வைத்துள்ள கோடிக் கணக்கான ரூபாய்களிலே இன்னும் நான்கைந்து இலட்சம் தரக் கூடாதா?' என்று இதயத்தால் எண்ணவே செய்வான்.

இரா. நெடுஞ்செழியன். எம்.எல்.ஏ.,

எவரும் எளிதில் பெற்று விட முடியாத இதயங்களை, பேரறிஞர் அண்ணா அவர்கள் எளிதாகவும் பெற்றார்கள்; ஏராளமாகக் கோடிக் கணக்கிலும் பெற்றார்கள். அதனால் தான் அவர் 'செயற்கரிய செய்த பெரியார்' என்று எல்லோராலும் பாராட்டப் பெறுகிறார்கள்.

பேரறிஞர் அண்ணா அவர்களின் பெயரையும், புகழையும், அருமையையும், பெருமையையும், பண்பையும், போக்கையும் அறியாதவர்களும் தெரியாதவர்களும் நாட்டில் எங்கணும் இல்லை. அவரை நினைத்து நினைத்து நெக்குருகாத உள்ளம் இல்லை; அவருடைய புகழையும், பெருமையையும் பற்றிப் பேசாத நா இல்லை. நாட்டின் நல்லவர்களெல்லாம் தொழுதேத்தும் ஒளியாக அவர் திகழ்கிறார்.



அறிஞரும் — நாவலரும்...

கோடானுகோடி மக்களின் இதயத்தில் இடம் பெற்ற பேரறிஞர் அண்ணா அவர்களின் அன்பு இதயத்தில் இடம் பெற்றிருந்த தம்பிமார்களில் தக்க ஓர் இடத்தை நான் பெற்றிருந்தேன் என்பதை எண்ணுந்தோறும், பூரிப் போடும், பெருமித உணர்வோடும் பேரின்பம் பெறுகிறேன்.

பேரறிஞர் அண்ணா அவர்கள் எல்லாரிடத்திலும் அன்பு காட்டுவார்; பற்று வைத்திருப்பார்; மதிப்பு செலுத்துவார்; ஆனால், ஒரு சிலரோடு மட்டுந்தான் பழகுவார். 'நவில் தொறும் நூல் நயம் போலும் பயில் தொறும் பண்புடையாளர் தொடர்பு' என்ற வள்ளுவப் பெருந்தகையாரின் இலக்கணத்தில் காணும் பண்புடையாளர் தொடர்பினால் ஏற்படும் நயத்தை, பேரறிஞர் அண்ணா அவர்களோடு நெருங்கிப் பழகினவர்கள்தாம் நன்கு அறிவார்கள்.

தம்மோடு நெருங்கிப் பழகும் தம்பிமார்களுக்கு ஊக்கம் தந்து, ஆக்கம் பயந்து, அவர்களையெல்லாம் உரிய துறைகளில் ஆளாக்கிவிடும் பாங்கு அறிஞர் அண்ணா அவர்களிடத்தில் மிகச் சிறப்பாகவும், செம்மையாகவும் அமைந்திருந்தது.

**1937**-ம் ஆண்டில்நான் தஞ்சை மாவட்டம் பட்டுக்கோட்டை கழக உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போதுதான், அவருடைய சொல்வன்மையைப் பிறர் சொல்லக் கேட்டுப் பூரித்துப் போனேன்.

*1938*-ல்தான் முதன் முதல் அவர் எழுத்தாற்றலை 'விடுதலை' தலையங்கங்களின் மூலம் கண்டு வியப்படைந்தேன்.

*1938*-ல் சென்னைக் கடற்கரையில் நடைபெற்ற இந்தி எதிர்ப்புக் கூட்டம் ஒன்றில் அறிஞர் அண்ணா அவர்கள் பேசியபோதுதான் அவரை முதன் முதலாகக் கண்ணாரக் கண்டேன்; அவரது இனிய பேச்சைக் காதாரக் கேட்டேன்.

*1943*-ம் ஆண்டில்தான் அறிஞர் அண்ணா அவர்கள் பட்டுக்கோட்டையில் பேசிய கூட்டத்தில், அவர் பேசுவதற்கு முன்னால் மாணவன் என்ற முறையில் பேசினேன்.

1943-ல் அறிஞர் அண்ணா அவர்களை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு வரவழைத்து அவரை ஆங்கிலத்திலும் தமிழிலும் பேச வைக்க முயன்றவர்களில் நானும் முக்கியமான ஒருவனாக இருந்தேன். அப்பொழுதுதான் பல்கலைக் கழக விருந்தினர் விடுதியில் அவரை மூன்று நாட்கள் தங்கவைத்து அவரோடு உரையாடி மகிழும் வாய்ப்பும், தெளிவு பெறும் வாய்ப்பும் எனக்கும், தோழர் அன்பழகன், செழியன் போன்றவர்களுக்கும் ஏற்பட்டன.

1944-ம் ஆண்டு மே திங்களில் ஈரோட்டில் நடைபெற்ற இளைஞர் மாநாட்டிற்கு அறிஞர் அண்ணா அவர்களின் அழைப்பை ஏற்றுச் சென்றேன். அந்த மாநாட்டிற்கு அறிஞர் அண்ணா அவர்கள் தலைமை தாங்கினார்கள். நான் கொடியேற்றும் பணியினை ஆற்றினேன்:

1944-ம் ஆண்டிலிருந்து 1955-ம் ஆண்டு வரையில் நானும், எனது இளவல் செழியனும் தங்கி யிருந்த செம்புத்தாசுத் தெரு, கார்னர் எஸ்டேட் சி-30-ம் எண் அறையிலும், அடுத்தடுத்து மாறிய வீடுகளிலும் சென்னைக்கு வரும்போதெல்லாம் வந்து எங்களுடன் நாட் கணக்கில் தங்கியிருந்து, பல்வேறு பொருள்கள் பற்றி உரையாடுவார்.

அவரது உரையாடல்கள் எங்களுக்கு மிகுந்த தெளிவையும், இனிமையையும் ஊட்டும். அவரது உரையாடல்களில் அறிவின் செறிவும், பொருள் தெளிவும், நகைச்சுவையும், கேலி, கிண்டல் குறிப்புக்களும் நிறைந்து காணப்படும்.

1949-ல் தி.மு.கழகம் கண்டு, அறிஞர் அண்ணா அவர்கள் பொதுச் செயலாளர் ஆனவுடன், என்னைக் கொள்கை பரப்புக்கான துணைச் செயலாளராக ஆக்கினார்கள். 1955-ல் கழகப் பொதுச் செயலாளர் பொறுப்பினை ஏற்றுக் கொள்ளுமாறு அன்புக் கட்டளையிட்டார்கள். 1961-ல் கழகத்தின் அவைத் தலைவர் பொறுப்பினை ஏற்றுக் கொள்ளுமாறு பணித்தார்கள்.

1962-ல் சட்டமன்றப்பேரவை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப் பட்டபோது என்னை எதிர்க் கட்சித் தலைவர் பொறுப்பினைத் தாங்கும்படியாகக் கூறினார்கள். 1967-ல் அவரது அன்புக் கட்டளையை ஏற்று அவரது அமைச்சரவையில் இடம் பெற்றேன்.

அறிஞர் அண்ணா அவர்கள் உடல் நலம் பெற வேண்டும், முன்பு போல் நாட்டிற்குப் பணியாற்ற வேண்டும் என்ற பேரவாவோடு மருத்துவமனையில் நானும், ஏனைய நண்பர்களும் இரவு பகலாக ஏக்கத்தோடு நல்ல நிலையை எதிர்பார்த்திருந்தோம்.

ஆனால் அறிஞர் அண்ணா அவர்கள் தம் கடமையைச் செய்து விட்ட களிப்பு தேங்கிய முகத்தோடு, மீளா விடை பெற்று, சென்னைக் கடற்கரையில் மீளாத் துயில் கொள்ளத் தொடங்கி விட்டார்.

எந்தப் பேரறிஞர் அண்ணா அவர்கள் என்னைப் போன்றவர்களையெல்லாம் ஆளாக்கி விட்டார்களோ, அந்த அறிஞர் அண்ணா வகித்து வந்த முதலமைச்சர் பொறுப்பிலிருந்து கொண்டு, அவரது இறுதிப் பயணத்தை நடத்தி, பிப்ரவரி 3-ம் நாளிலிருந்து, பிப்ரவரி 9-ம் நாள் வரையில் துக்க நாள் கொண்டாடவேண்டிய நிலைக்கு ஆளானேமே என்பதை எண்ணி எண்ணி என் உள்ளம் ஆற்றொணாத் துக்கத்திலும், துயரத்திலும் ஆழ்ந்தது.

பேரறிஞர் அண்ணா அவர்களோடு சென்ற இருபத்தைந்து வருட காலம் நெருங்கிப் பழகி, அவரது அன்பையும், ஆதரவையும், அரவணைப்பையும் பெற்ற நான், அவரது அன்பு இதயத்தில் ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றிருந்தேன் என்பதுதான், என் வாழ்நாள் முழுவதும் எனக்குப் பூரிப்பையும், பெருமையையும், பெருமிதத்தையும் தருவதாகும்.

என்னைக் கழகப் பொதுச் செயலாளராக 1955-ல் அறிஞர் அண்ணா அவர்கள் ஆக்கியபொழுது, 'திராவிட நாடு' இதழில் அவர் என்னைப் பற்றி எழுதிய எழுத்துக்களிலிருந்து, அவரது அன்பு இதயத்தில் என்னை எப்படிப்பட்ட இடத்தில் வைத்திருந்தார் என்பதை நான் அறிந்து கொண்டேன்.

''நாவலர் நெடுஞ்செழியன் இப்பொழுது நமக்குப் பொதுச் செயலாளர்.''

''தோழர் நெடுஞ்செழியன் இந்தப் பொறுப்பை ஏற்க வேண்டும் என்று இரண்டாண்டுக் காலமாகவே என் உள்ளத்திலே வளர்ந்த வண்ணம் இருந்த எண்ணம்.''

''இந்த எண்ணம் எனக்குத் தோன்றிய நாள் தொட்டு, நான் தோழர் நெடுஞ்செழியனை இந்தப் பொறுப்புக்குப் பக்குவப்படுத்துவதாக எண்ணிக் கொண்டு அவருடைய இல்லத்தை என் இருப்பிடமாக்கிக் கொண்டேன்.''

(பல பிரச்னைகளில்) ''என் கருத்து யாது என்பது பற்றி உரையாடி எடுத்துக் காட்ட முடியும் என்ற எண்ணத்தால் உந்தப்பட்டு, அவர் வீட்டுச் 'சைவ'த்தைத் தாங்கிக் கொண்டிருந்தேன்.''

''நமது கழகத்தை அதன் கண்ணியம் கெடாத வகையில் மட்டுமல்ல, வளரும் வகையில் நமது புதிய பொதுச் செயலாளர் நடத்திச் செல்வார் என்ற உறுதியை என்னால் நிச்சயமாக அனைவருக்கும் அளிக்க முடியும்.''

''நண்பரின் திறம் இருக்கிறதே; அது கண்டு நான் வியப்புறுகிறேன்.''

''என்னிடம் இல்லாத, நான் விரும்பாததாய் அல்ல, இயலாததால், ஓர் அருங் குணம் அவரிடம் உண்டு: கண்டிருப்பீர்கள்.''

''ஓயாது உழைப்பது! எப்பொழுதும், எங்கேயும், எதையாவது, எப்படியாவது செய்து கொண்டே இருப்பது!''

''என்னாலே இதைக் கண்டு ரசிக்க முடியும்—ஆனால் என்னை அந்நிலைக்கு மாற்றிக் கொள்ள இயலவில்லை... பொதுப் பிரச்னைகளைப் பற்றி, தோழர் நெடுஞ்செழியன் எப்போதும் காரிய மாற்றிக் கொண்டே இருக்கும் இயல்பினர்.''

''நேரம் வீணாகி விட்டது என்று கூறத்தக்க போக்கிலே அவர் இருந்ததை நான் கண்டதே இல்லை.''

''சிறையில் மூன்று திங்கள் ஒரே அறையில் தங்கி இருந்தோம்...பலபல கனவுகள்—விழித்தபடி — நான் கண்டு கொண்டிருப்பேன். அவர்? —வேலை! வேலை! வேலை! ஏதாவது செய்தபடி இருப்பார்.''

''இந்த அருங்குணத்தை நாம் நன்றாகப் பயன்படுத்திக் கழகத்தை மேன்மையுறச் செய்து கொள்ள வேண்டும்.''

''தோழர் நெடுஞ்செழியனை, பெரியார் தமது மேற்பார்வையில் வைத்திருந்து பார்த்தார்—அவரால் யார் மீதும் குற்றம் காண முடியும்— ஆனால், தோழர் நெடுஞ்செழியனிடம் அவராலும் ஒரு குறையைக் கூட கண்டறிந்து கூற இயலவில்லை.''

''அத்தகைய பணியாளர் நமக்குக் கிடைத்திருக்கிறார்.''

அறிஞர் அண்ணாவின் விரிவான கட்டுரையில் காணப்படும் மேற்கண்ட சில சொற்றொடர்களும், 1956-ல் திருச்சியில் நடைபெற்ற மாநில மாநாட்டில் தலைவர் தேர்தலை வழி மொழிந்து பேசிய அறிஞர் அவர்கள் —

''தம்பீ வா! தலைமை ஏற்க வா! ஆணையிடு —உன் ஆணைக்குக் கட்டுப்பட்டு நடக்கிறோம்!''

என்று கூறிய சொற்களும் என் வாழ்நாள் முழுவதும் மறக்க இயலாதவை. என்றும் பெருமிதம் பயப்பவை.

எல்லாருடைய இதயத்திலும் இடம் பெற்றிருந்த அறிஞர் அண்ணா அவர்களின் அன்பு இதயத்தில் நானும் தக்க ஓர் இடத்தைப் பெற்றிருந்தேன் என்பதே அவர் அறிவுறுத்திய கடமை - கண்ணியம் - கட்டுப்பாட்டின் வழி, என்னை அழைத்துச் செல்ல அடிப்படையாக அமைகிறது. வாழ்க அறிஞர் அண்ணாவின் புகழ்!

---

அட்டைப் படத்திலுள்ள **அண்ணாவின்** வண்ணப் படத்தை எடுத்தவர்:
**— ஏ. சுந்தரம்.**

# அண்ணாவின் பெருந்தகைமை

'தோன்றிற் புகழொடு தோன்றுக' என்னும் வள்ளுவர் வாக்குக்கு இலக்காக மக்களிடையே தோன்றி, 'அன்பின் வழியது உயிர் நிலை அஃதிலார்க்கு என்பு தோல் போர்த்த உடம்பு' என்னும் உண்மை தெளிந்தவராய் வளர்ந்து, 'வசை யொழிய வாழ்வாரே வாழ்வார், இசையொழிய வாழ்வாரே வாழாதவர்' என்னும் குறிக்கோளுடன் திகழ்ந்து, வையத்து வாழ்வாங்கு வாழ்ந்த தகைமையால் வானுறையும் தெய்வத்துள் வைத்து மக்கள் போற்றும் தனிப் பெருந் தகைமையுடையவராய், கடலெனத் திரண்ட நாட்டு மக்களின் தாங்கொணாத் துயரம் பெருக்கிய கண்ணீர் வெள்ளத்தில் மிதக்கின்ற தெப்பமெனத் தமது இறுதிப் பயணத்தைக் கண்டார் நமது தமிழினச் செம்மலும் இணையற்ற பண்பாளருமான அறிஞர் பெருந்தகை அண்ணா அவர்கள்.

இதுகாறும் வரலாறு கண்டிராத துயரக் காட்சியை, அவரது இன்னுயிரைத் தனது நல்லுயிராகவும் மூச்சாகவும் பேச்சாகவும் கொண்டு வாழ்ந்த தமிழகம் கண்டது.

'கொடிய நில நடுக்கந்தான் விளைந்ததுவோ? புயல் வெள்ளந்தான் விளைத்தது இந்த அழிவோ! எரிமலை வெடித்துக் குமுறியதோ? என்னே இத்துயர்! வெங்கொடுமைச் சாக்காட்டில் விளையாடும் வீரத் தோள்கள் எல்லாம் வெற்றுத் தோளாயினவோ? இனி பேச்சும் எழுமோ! மூச்சுந்தான் செயல்படுமோ! ஏக்கந்தான் இனி ஆளுமோ! இத்துயர் என்றுதான் மாளுமோ? இனி தமிழகந்தான் மீளுமோ?' என்று ஆடவரும் பெண்டிரும் ஏங்குமாறு, அத்தனை மக்கள் உரையிலும், நினைவிலும், உள்ளத்திலும் ஒளியாக நிறைந்திருந்த அறிஞர் அண்ணா ஓய்வு கொண்டு விட்டார்.

ஓர் ஆற்றல் மிக்க சொற்பொழிவாளரோ, திறன் மிக்கஎழுத்தாளரோ, ஒரு தன்னிகரற்ற நடிகரோ, அன்றி ஓர் அரசியல் தலைவரோ, யாவரேயாயினும் இந்தத் தனி நிலையை-மக்கள் உள்ளத்தில் அண்ணா பெற்றிருந்த ஒப்பற்ற இடத்தைப் பெறுதல் இயலாததாகும். இத்தகு ஆற்றல் அனைத்தும் அறிஞர் அண்ணாவிடம் திரண்டிருந்தன என்பதால் மட்டும் இந்தப் பெருநிலை வாய்த்தது என்று துணிதல் இயலாது.

அவரது ஆற்றல்கள் நாளும் வளர்ந்து, மக்களிடையே தனிச் செல்வாக்கை வளர்த்து, மக்கள் பேராதரவு பெருகி, ஒரு தலைவராக அரசியல் படிக்கட்டின் உச்சியில் ஏறி, தமிழகத்தின் மாண்புமிகு முதல் அமைச்சராக அமர்ந்திருந்த தகைமையாலேயே மக்களின் உள்ளக் கோயிலில் அண்ணாவுக்கு இந்த வழிபாடு கிடைத்ததென்றும் கொள்ளவியலாது.

நாளுக்கு நாள் மக்கள் அவரை அறியவும், அவர் கருத்தை ஏற்கவும், ஆதரித்துப் பாராட்டிப் போற்றவும், அவரது அறிவு, ஆற்றல், உழைப்பு, திறமை, தொண்டு, தலைமை ஆகியவை துணையாயின எனினும் அவரது இயல்பும், பண்பும், கனிவும், சால்புமே மக்களின் அன்புத் தெய்வமாக அவரை உயர்த்தின என்பது கருதற்பாலது.

அன்பின் திருவுருவம், அடக்கத்தின் பிறப்பிடம், ஆர்வக் கொள்கலம், இரக்கத்தின் விளை நிலம், பொறுமையின் சிகரம், பண்பின் பெட்டகம் என்றெல்லாம் போற்றுதற்குரிய சிறப்பியல்புகள் அவரது வாழ்க்கையில் மெல்லப் பயின்று அவரிடம் படிந்தவையாகும்.

அண்ணா அவர்கள் எளிய குடும்பத்தில் பிறந்து ஏழைமையை நுகர்ந்தவர். பிற்பட்ட சமூக மக்களிடையே வளர்ந்து, அவர்தம் துன்பத்தில் பங்கு கொண்டவர். உழைப்பாளிகளுடன் கலந்து நின்று அவர்தம் ஏக்கத்தை உணர்ந்தவர். இதனால் தன்னைச் சூழ்ந்துள்ளவர்களிடமும் நாட்டு மக்களிடமும் பரிவும் பற்றும் பிறந்தது.

க. அன்பழகன். எம்.பி.,

குழந்தைப் பருவத்திலேயே அச்சங் கலந்த அடக்கமும் - கட்டுப்பட்டுச் செயற்படும் இயல்பும், எதனையும் கூர்ந்து நோக்கி அறியும் திறனும் அவரிடம் அரும்பின.

பள்ளிப் பருவத்தில் கல்வியில் நாட்டமும், பிறரை மதிக்கும் இயல்பும், பலரொடும் நட்புப் பாராட்டும் மனமும் அவரிடம் முகிழ்த்தன.

கல்லூரி நாட்களில், பல்வேறு திறப்பட்ட அறிவு ஏடுகளில் ஆர்வமும், நூல் நிலையங்களையே நாடிப் பயிலும் வேட்கையும், ஆழ்ந்த சிந்தனையும், ஆராய்ந்து உண்மை காணும் திறனும் அவரிடம் மலர்ந்தன.

ஆசிரியப் பணியாற்ற முற்பட்டு பொதுப்பணியில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டது முதல் இளையோரை ஊக்குவித்தலும், எளியோருக்குத் துணை நிற்றலும், பெரியோரை மதித்தலும், தக்கோரைப் போற்றுதலும், மாற்றாரை இகழாமையும் அவரிடம் வளர்ந்தன.

முன்னேற்றக் கழகங் கண்டது முதல் பொறுப்பு உணர்ச்சி அவரை ஆட் கொண்டது. 'கடமை, கண்ணியம், கட்டுப்பாடு' —இவை அவரது செயல் மூச்சாக அமைந்தன.

முதலமைச்சரான அண்ணா-அதனை ஜனநாயகத்தால் கிடைத்த பேறு என்று மட்டும் கொள்ளாமல், ஜனநாயகம் என்னும் மரபுக்கும், முறைகட்கும் ஏற்ப எல்லாரையும் மதிக்கவும், எவரது கருத்தையும் எளிதில் ஒதுக்காது எண்ணிப் பார்க்கவும், எல்லாருக்கும் ஏற்றது தனக்கும் ஏற்றதாகும் என்று ஏற்கவும் முன் வந்தார். பதவியில் உயர்ந்த நிலை பெற்றபோது, தனது உள்ளத்தின் பரந்த பொது நோக்கத்தால் அதனினும் அவர் உயர்ந்தார்.

தமிழ் நாட்டின் முதலமைச்சர் என்னும் நிலைக்குரிய மதிப்பே அன்றி, இந்தியா முழுவதும் மதிக்கப்பட்ட ஒரு தேசியத் தலைவராகக் கொள்ளப்படுதற்குரிய தகுதியை - ஜனநாயகத்தை ஒரு மனப்பான்மையாக மேற்கொண்டது மூலம், குடி தழுவிய கோலாட்சி நிலைத்தற்கும் செம்மைப்படுதற்கும் அவர் எடுத்துக் காட்டானார்.

பிறர் கருத்தை மதிப்பினும் தம் கருத்தில் உறுதிப்பாடும், மாற்றார் கருத்தை உட்கொண்டும் தம் கொள்கையை நிலை நாட்டும் திறனும் அவரிடத்தில் நிறைந்திருந்தன. அதனாலேயே—மாற்றார் தோட்டத்து மல்லிகை என்பதாலேயே அது மணம் கமழாது என்று அவர் கருதியதில்லை. அவரது அந்தத் தெளிவுதான் - அரசியலில் காங்கிரசுடன் மாறுபாடு கொண்டிருந்த போதிலும், சுதந்திரம் கிடைத்த நாளில் தலைவர் பெரியார் அதனைத் துக்க நாள் என்று கண்டனம் எழுப்பிய போதும், அந்த விடுதலையைக் கொண்டாட வேண்டும் என அண்ணா முற்பட ஏதுவாயிற்று.

அறிஞரும் பேராசிரியரும்



உத்தமர் காந்தி அண்ணலின் உயர் நோக்கத்தைப் போற்றி - அவர் மறைந்த போது வானொலியில் அண்ணா நிகழ்த்திய உரை அவரது ஈடு பாட்டை நாட்டவர்க்குப் புலப்படுத் தியது.

சீனாவின் அத்து மீறிய படையெடுப்பு நிகழ்ந்தபோது அண்ணா நிகழ்த்திய உரையும், விடுத்த வேண்டுகோளும், இந்தியாவின் பொதுப் பாதுகாப்பிலும் சுதந்திரத்தை நிலைபெறச் செய்வதி லும் அவர் கொண்டிருந்த ஆர்வத்தை வெளிப்படுத்தின. அதன் தொடர் பாகவே இந்திய நாட்டின் பொது நன் மைக்கும், வலிவுக்கும் ஊறுகி விடக் கூடாது என்பதுடன், ஜனநாயக உரி மைகளை நிலைபெறச் செய்வது மூலமே தென்னக மக்களின் தாழ்நிலையை மாற்றியமைக்க முடியும் என்பதையும் கருத்திற்கொண்டு நாட்டுப் பிரிவினைக் கொள்கையைக் கை விடுவதாகவும் அறிவித்ததனை யாவரும் அறிவர்.

ஆட்சிப் பொறுப்பேற்ற பின்னரோ மது விலக்குக் கொள்கையைக் கை விடாது காத்துச் செயல்படுத்தி வந்ததும் - அவரது உயர்ந்த நோக் கைப் புலப்படுத்தும்.

ஜனநாயக முறை கெடாது, ஆட்சி மாற்றம் காண்பதற்கு வேண்டும் வலி மையை மக்கள் பெறுவதற்குக் கருவி யாகுமாறு, தனியார் உரிமையை வலி யுறுத்தும் சுதந்திராக் கட்சி, மற்றும் பொதுவுடைமைக்கட்சி ஆகியவற்றை ஓரே அணியாக நிற்கச் செய்து, மாறு பாட்டைக் குறைத்து, மக்கள் வாக்கு எதிர்க் கட்சிகளிடையே சிதறுது செய்த ஆற்றலை நாடு மறக்காது.

மாநில ஆட்சியின் நியாயமான உரிமைகட்கும், கிடைக்க வேண்டிய வருவாய்கட்கும் மத்திய அரசுடன் வாதிடுகின்ற தலைவராக இருந்த போதும், உறவு நிலை கெடாமலும் வெறுப்பும் கசப்பும் வளராமலும் உரிமை கோரும் அறிஞராக விளங்கி ஞர் என்பது, இந்தியப் பேரரசின் பிரதமரும், ஏனைய அமைச்சர் களும் ஆற்றிய நல்லுரைகளால் விளங்கும்.

இந்தி ஆதிக்க எதிர்ப்பாளராகவே நாட்டுக்கு அறிமுகமாகி, பலப்பல அறப் போராட்டம் நடத்தி, பல முறை சிறைத் தண்டனை பெற்று, விடு தலையாகி, நாடறிந்த இந்தி எதிர்ப்பு அணியின் தலைவராகவும், தமிழகத்தின் முதலமைச்சராகவும் விளங்கிய நிலை யிலும் - இந்திய அரசு ஆட்சி மொழிக் கொள்கையில் அநீதி விளைவித்து, ஆத் திரம் மூட்டிய வேளையில் தமிழக சட்ட மன்றத்தைக் கூட்டி மாணவர்க்கு இரு மொழித் திட்டமே போதும் என்று ஒரு மனதாகத் தீர்மானம் நிறைவேற்றி - இந்தி எதிர்ப்பைச் சட்டப்படி நிலை நிறுத்தியதோடன்றி, மத்திய அரசுடன் போர் தொடுக்காத பெருந்தன்மையையும் நாடறியும்.

நாட்டு மக்கள் கொந்தளித்துக் கிளம்பும் போது அதைக்கிளறிவிட்டுப் பெரு நெருப்பு ஆக்காமலும், உரிமை விளக்கு அணைந்து விடாமலும் காக் கும் தன்னிகரற்ற அறப்போர் வீரராக விளங்கி வந்தார்.

தமிழகத்தில் வாழ்ந்து வரும் பிற மொழி பேசும் மற்ற மாநில மக்கள் யாவரும், அண்ணாவின் ஆட்சியில், கொள்கையாலும் நடை முறையாலும் தங்கள் உரிமை வாழ்வுக்குப் பாது காப்பு உள்ளதை உணர்ந்து பாராட் டும் நிலை பெற்றுர். பிற மாநிலங் களில் சிவசேனை போன்ற இயக்கங் களால் தமிழ் மக்கள் கொடுமைக்கு ஆளான நிலையில், தமிழ் நாட்டில் எதிர்ப்பு உணர்ச்சி ஓர் இயக்கமாக உருவாகாதவாறு, பொறுப்பு உணர்ச்சி யுடன் தடுத்து வைத்தார்.

உண்மையான பகுத்தறிவை வளர்க் கும் சமூக சீர்திருத்தவாதியாக விளங் கினும், ஆத்திக உணர்வுடையோர் மனம் புண்பட அவர் இடம் தந்த தில்லை.

புரட்சி மனப்பான்மையுடையோர், தம் ஆக்கக் கருத்தை ஏற்ற போதிலும் வன்முறையைத் தூண்டுவதற்கு ஒருப் பட்டதில்லை. மாருக வன்முறையால் எதிர்பார்க்கும் பயனை - நன்முறை யால் நிறைவேற்ற உறுதியுடன் செயல்பட்டார்.

அண்மைக் காலத்தில் - தம்மை ஒரு கட்சித் தலைவனுகக் கொள்ளும் நிலையி லிருந்து - நாட்டு மக்கள் அனைவருக் கும் தலைவனுக அமையும் நிலையில், தமது பேச்சு-நடை முறை-கொள்கை அனைத்தையும் உருவாக்கிக் கொண் டார்.

ஆத்திகரும் நாத்திகரும், முத லாளிகளும் - தொழிலாளிகளும், உயர் வகுப்பாரும் தாழ்த்தப்பட்ட வரும், அறிஞர்களும் பாமரரும்,

நகரத்தாரும், கிராமத்து மக்களும், ஆளுங் கட்சியினரும் மாற்றுக் கட்சியினரும் அண்ணுவிடம் பழகினும், அவர் கருத்தைக் கேட்பினும், 'அவர் நடுநிலையுடையவர், நியாயத்தின் பக்கம் நிற்பவர், நம்மை வெறுக்காதவர், அவர் அன்புள்ளத்தில் நமக்கும் இடம் உண்டு' என்று உறுதி கொண்டு போற்றும் வண்ணம் திகழ்ந்தார்.

இந்தியாவில் ஏற்பட வேண்டிய ஜனநாயக மரபு வளர்ச்சிக்கும், திருத்தப்படவேண்டிய அரசியல் சட்டக் கோட்பாடுகட்கும் திசை காட்டும் கலங்கரை விளக்கமாக நின்ருர்.

தமிழன் மாட்சி, உலகுணரத் துணையானுர். திருக்குறள் நெறியினது அருமையைப் பிற நாட்டவரும், வேற்று மொழியினரும் அறிந்து போற்ற ஏதுவானுர். தமிழகத்திற்கு - தமிழனின் நெடுநாளைய ஏக்கம் நீங்க, 'தமிழ் நாடு' என்னும் பெயர் சூட்டி மகிழ்ந்தார். வட திசையின் வல்லாண்மை மிக்காரெல்லாம் தென்னகத்தை ஒதுக்கியும், தென்னகத் தலைவர்களைப் புறக்கணித்தும் வந்த நிலையையும் நினைப்பையும் மாற்றி வைத்தார்.

இவ்வாறு இந்தியாவின் பல்வேறு அரசியல் தலைவர்களின் கவனத்தையும் கருத்தையும் கவர்ந்து, பிறநாட்டு நல்லறிஞர் பாராட்டையும் பெற்று விளங்கிய அண்ணு அவர்கள், தோற்றத்திலோ எளிய உடை, கனிந்த பார்வை, பரந்த நெற்றி, முறுவல் காட்டும் முகம், உயரமில்லாத உருவம் கொண்டோராகவே கண்டவரது உள்ளம் கொள்ளை கொண்டார்.

எவரிடத்தும் அன்பு கலந்த பேச்சு, நண்பர்களிடையேகேலி கலந்த நகைச்சுவை, மாற்ருரிடம் இனிய உரையாடல், மேடையில் அடுக்கி வரும் அழகு தமிழ்க் கருத்துப் பொழிவு, ஆங்கிலத்தில் எடுப்பான விளக்க உரை ஆகியவை அவரது உரையைக் கேட்டோர் காதுகளைக் குளிரச் செய்தவை.

ஆழமான கருத்து, எளிய நடை, தொடுப்பான விளக்கம், அழகான உவமைகள், துண்டுக் கதைகள், மாற்ருரையும் மனம் மாற்றும் சான்றுகள் ஆகியவை அவர்தம் எழுத்துக்களைப் பயின்ருேரை அவரிடம் ஈடுபடச் செய்தவை.

காலத்துக் கேற்ற கருத்து - புதுமை தழுவும் போக்கு- பொருத்தமான



"என் கடிகாரத்திலே பத்து மணி ஆவுது... இது 6-5 காட்டுதே.. ஓடல்லே போலேருக்கு.."

"சேச்சே!.. நேத்தெல்லாம் 6 மணி தான் காட்டிக்கிட்டு இருந்தது.. இப்போ 6-5 காட்டுதே.. 5 நிமிஷம் ஓடித்தானே இருக்கணும்!"

பாத்திரப் படைப்பு - பின்னிப் பிணைந்த கதையமைப்பு, தாமே ஏற்று நடிக்கும் எடுப்பான வேடம் - இவை யாவும் கலை உலக மறுமலர்ச்சிக்கு அவரது காணிக்கை.

கடுஞ் சினமும், வெகுண்ட சொல்லும், தண்டித்தலும் வெறுத்தலும் அவர் அறியாதவை. அவர், எத்தகைய அன்பு நீர் பாய்ச்சி, ஆயிரமாயிரம் தம்பிமார்களையும் தோழர்களையும் ஒரே குடும்பமாக உருவாகச் செய்தார் என்பதை எண்ணுவோர், அவரது உள்ளத்தில் - எத்தனை இலட்சக் கணக்கானவர்களுக்கு இடம் வைத்திருந்தார் என்பதை எண்ணி வியக்காமலிரார்.

தமிழர் தலைவராகி, இந்தியாவின் காவலராகி, மனித குல வழி காட்டியாகும் சிறப்பினை - அவரது உள்ளத்தால் - பண்பால் — அன்பால் அவர் எய்தினுர். இவ்வாறு, உயர்ந்த மனிதராக வாழ்ந்து, நம் உள்ளத்திலெல்லாம் நிறைந்த அண்ணன் நினைவு எக்காலமும் வாழ்வதாகும்! வளர்க அவரது புகழ்!

# வியப்பூட்டும் அரசியல்வாதி!

'தைரியமாகவும், விரைவிலும் பிரச்னைகளில் முடிவெடுக்கும் தலைவர்கள்தான் அரசியலில் வெற்றி பெறும் தலைவர்கள்' என்று பெரிதும் கூறப்படுகிறது. ஆனல், அண்ணுவின் வாழ்க்கை இதற்கு நேர்மாருனது.

எந்தப் பிரச்னையையும் அதிக பட்சம் எந்த அளவுக்கு ஒத்திப் போட்டு 'தப்ப' முடியுமோ அந்த அளவுக்கு ஒத்திப் போடும் வழக்கத்தைக் கொண்ட அண்ணு அவர்களின் அரசியல் வாழ்க்கை, மக்கள் மதிப்பீட்டில் மிக வெற்றிகரமான ஒன்ருக அமைந்தது, பலருக்கும் வியப்பூட்டும்.

மாநிலத்து அரசியலில் மிக உயர்ந்த பதவியும், மக்கள் மத்தியில் பெரிய பேரும் பெற்றிருந்த நிலையில் உலகை நீத்த அண்ணுவின் அரசியல், தனிப்பட்ட வகையில் வெற்றிகரமானது என்பதில் இரு கருத்துக்கிடமில்லை. அவரது அரசியலால் நாடும், மக்களும் எந்த அளவு பயனும், பலமும் பெற முடிந்தது என்பது என்றுமே சர்ச்சைக்குரியதாகத்தான் இருக்க முடியும்.

எனக்கு நன்கு நினைவிருக்கிறது; சுமார் 23 ஆண்டுகளுக்கு முன் தூத்துக்குடியில் பெரியார் அவர்கள் தலைமையில் திராவிடர் கழக மாநில மாநாடு நடைபெற்றது.

திரு நெடுஞ்செழியன் தனது 'மன்றம்' பத்திரிகையில், 'கழகத்தில் ஜனநாயக முறைகளைப் பெரியார் அனுமதிக்காது, சர்வாதிகாரப் போக்கில் செல்கிருர்' எனக் கண்டித்து எழுதினர். அடிக்கடி அண்ணு அவர்களோடு உட்கார்ந்து நாங்கள் பேசியவற்றின் உணர்ச்சியை அவர் எழுதிக் காட்டி விட்டார்.

அப்பொழுது திராவிடர் கழகத்தில் எல்லோரும் பெரியாரைப் பின்பற்றினர்கள் என்பதைவிட வழிபட்டு வந்தனர் என்று கூறுவதே பொருத்தமாகும். எனவே, நெடுஞ்செழியனுக்கு எதிராகப் பலத்த கண்டனம் கிளம்பிற்று.

அந்த நேரத்தில்தான் தூத்துக்குடி மாநாடும் வாய்த்தது. மாநாட்டுக்கு நெடுஞ்செழியன் வந்தால் விரசமான சம்பவங்கள் நிகழக்கூடும் என்ற நிலையிருந்தது. அண்ணு அவர்கள் 'அம் மாநாட்டுக்குச் செல்ல வேண்டாம்' என நெடுஞ்செழியனுக்குக் கூறிவிட்டார்.

தூத்துக்குடி மாநாட்டுக்குச் சில நாட்கள் முன் கூட்டியே திருச்சிக்கு அண்ணு வந்தார். நானும் சென்றேன்.

திருச்சியில் அப்போது எங்கள் இனிய நண்பர் சாம்பு அவர்களின் வீட்டில்தான் தங்குவது வழக்கம். பெரியார் முகாம், வேதாசலம் வீட்டில்; எங்கள் முகாம், சாம்புவின் வீட்டில். ''ஒன்று, நெடுஞ்செழியனையும் மாநாட்டுக்கு வரச் செய்து, அவருக்கு ஏற்படும் விளைவுகளை நாம் அனைவரும் ஏற்க வேண்டும். அல்லது 'நாம்' அனைவருமே (கூடிப் பேசியவர்கள்) தூத்துக்குடிக்குச் செல்லக் கூடாது'' என்று நான் பிடிவாதம் பிடித்தேன். காரணம், ''எழுதியது அவர் என்ருலும், கருத்து நம் அனைவரின் பொதுக் கருத்து. அதற்கான பொறுப்புக்கள் அனைத்தையும் நாம் ஏற்ருக வேண்டும்'' என்பது எனது வாதம்.

மாநாட்டைப் பகிஷ்கரிக்கும் முடிவுக்கு அவரால் எளிதில் வர முடியவில்லை. 'பகிஷ்கரிப்பதற்கான காரணத்தை விவரமாக எழுதிக் கொடு' என்று என்னிடம் எழுதி வாங்கினர். 'போவதில்லை' என்று முடிவாயிற்று என்பதை விட, அந்த முடிவுக்கு அவரை நான் துரத்தியதாகவே தென்பட்டது.

திராவிட முன்னேற்றக் கழகம் தொடங்குவதற்கு ஒன்றரை ஆண்டுக்கு முன்பே, குடந்தையில் திராவிடர் கழக நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் ஒன்று நடந்தது. அப்பொழுது ஓ. பி. ராமசாமி ரெட்டியார் முதல் மந்திரி.

அக் கூட்டத்திற்கு அண்ணுவும், விடுதலை குருசாமியும், நானும் காரில்

ஈ.வெ.கி. சம்பத்

சென்றபோது, ''திராவிட நாடு பிரிவினை இனியும் கேட்பது சரியா'' என்று அண்ணா சலிப்போடு பேசினார். கிரிப்ஸ் மிஷன் வந்தபோது அவர்கள், ஜின்னாவின் பாகிஸ்தான் பிரச்னையில் காட்டிய அக்கறையை, திராவிடஸ்தானில் காட்டவில்லை. ''ரயில் தப்பி விட்டது. இனியும் அதைத் தொடர்ந்து கோருவது அர்த்தமில்லாதது'' என அவர் வாதங்களை அடுக்கினார்.

''எந்த ஒரு இலட்சியத்தையும் நம்மால் முடியுமா முடியாதா என்ற கோணத்தில் பார்ப்பதை விட, நியாயமா, நியாயமில்லையா என்ற கோணத்தில்தான் பார்க்க வேண்டும். திராவிட நாடு பிரிவினை வேண்டும் என்பதில் அவசியமும், நியாயமும் இருந்தால், கிரிப்ஸ் கொடுக்காமல் போய் விட்டார் என்பதற்காக கோரிக்கையை விட்டு விடுவதா'' என உக்கிரமாகக் கேட்டேன்.

அவர், அமெரிக்காவில் தென் மாநிலங்கள் பிரிவினை கோரிப் போராடித் தோற்றதைக் கூறினார்.

''அது நியாயத்தின் அடிப்படையில் எழுந்த கோரிக்கை அல்ல. நீக்ரோக்களை அடிமைகளாக வைத்துக் கொள்ள ஒரு நாடு வேண்டுமென்று கேட்டார்கள். அது தோற்றதுதான் நியாயம். நம்முடைய திராவிட நாடும் அது போல் அநியாயமான கோரிக்கையா?'' என்றேன். எனது கேள்வியை ஏனோ பயங்கரமாகக் கருதினார் அண்ணா.

அன்றே அவருக்குப் பிரிவினை மிகவும் அநியாயமான கோரிக்கை என்று நன்கு தெரிந்திருக்க வேண்டும். அதுவும் அப்பொழுது அது சுத்தமாக இன அடிப்படையில் கிளப்பப்பட்ட நேரம். 'பிரிவினை முடியாது என்பதை விட 'கூடாது' என்று அவருக்கு அன்றே புலப்பட்டிருக்க வேண்டும்' என்றுதான் நினைக்கிறேன்.

ஆனால், அதை முடிவாக்கி நிலையெடுக்க அவர் பெரிதும் தயங்கி, மீண்டும் திராவிட நாட்டுப் பிரிவினைக்குப் புதுப் புது 'நியாயங்களை' சோடித்துத் தரும் பிரதம தளபதியாகப் பெரியாருக்கு விளங்கி வந்தார்.

புதிதாக தி. மு. க. வைத் தொடங்கியபோது கூட, பெரியார் சொன்ன அனைத்தையும் மேலும் தீவிரமாகச் சொல்லவும், நிறைவேற்றவுமே இக்கட்சி என்றுதான் கட்சியின் அடித்தளத்தைப் போட்டார்.

பின்னர், தி. மு. க.வில் காலத்தால் இயற்கையாகப் பெரியாரின் பல கொள்கைகளின் காரம் குறைந்து, எடையும் மெலிந்த போது, அந்தப் போக்கிற்கு உடன் வந்து ஊக்கமளிப்பதில் முன் நின்றார்.

*1959-60*-ல் திராவிட நாடு பிரிவினையைக் கை விட வேண்டுமென கடுமையான நிலையெடுத்த போது என்னிடம் வாதாடாமல், மறுக்காமல், ''ஆறு மாதத்தில் மாநாடு-அதில் தீர்மானம்-நான் பிரேரேபிக்கிறேன்-நீ ஆமோதிக்கிறாய்-சரிதானே'' என்றார் அண்ணா. கூடவே வந்து என்னை டில்லிக்கு அனுப்பினார்.

**சொல்லின் செல்வரும் — அறிஞரும்**





சம்பத் — அண்ணு

பின் அம் முடிவைக் கட்சிக்குச் சொல்லத் தயங்கினுர்; பின்வாங்கினுர். அதனுல் அவருக்கு மிகவும் பிரியமான தம்பியான (அரசியல் தம்பியல்ல!) என்னைப் பலியிட நேரிட்டமைக்குப் பெரிதும் வருந்தினுர்.

பின்னர் நான் கட்சியிலிருந்து வெளியேறி ஏறத்தாழ மூன்று ஆண்டுகள் எனது தோழர்களும், நானும் (த.தே.க.) கல்வீச்சுக்கும், காலித்தனங்களுக்கும் இடையே நாடு முழுவதும் சுற்றிச் சுற்றி 'திராவிட நாடு பிரிவினை கோரிக்கை விவேகமான ஒன்றல்ல; தமிழருக்கு அதனுல் தீமையே 'விளையும்' என்று விளக்கங்கள் கூறிய பின் தி. மு. க.வினர் அனைவரும் விளக்கம் பெற்று விட்டனர் என்று உறுதி செய்து கொண்டு, அவரும் ஒரு நாள் ''திராவிட நாடு கோரிக்கையை, கைவிட்டுவிட்டேன்'' என்று கூறி, அடுத்த அடி எடுத்து வைத்தார்!

இவை யெல்லாம் அவரைக் குறை கூறச் சொல்லப்படுவன அல்ல. விளைவுக்குப் பின் விளக்கம் கொடுத்தே பெரும் அரசியல் தலைவராக எழ முடிந்ததென்பது, அவருக்கு முன்னும் எவராலும் முடிந்ததில்லை; அவருக்குப் பின்னும் இனியொருவரால் முடியவும் முடியாது. இங்குதான் அவரது தனிப்பட்ட இயல்புகளின் பல சிறப்புக்களும், [illegible]ய்ப்புக்களும் நம் கண்முன் எழுகின்றன.

இயக்கத்தில் சிறந்ததோர் இடத்தைப் பிடிக்க வேண்டுமென்பது அவரது ஆசை. அவரது நாடகங்களில் சில, மிகவும் அற்புதமானவை. அவர் ஒரு தலை சிறந்த நடிகர். அவரது நடிப்பாற்றலுக்கு ஈடு இணை இவ்வுலகில் காண்பது மிகவும் அருமை.

இவ்வுண்மைகள் பலருக்குத் தெரியாது. காரணம், அவருக்குச் சிறிதும் பிடிக்காத, அவரது இயல்புகளுக்குச் சிறிதும் பொருந்தாத அரசியலில் அவருக்குக் கிடைத்த வெற்றிகள், அவரது உண்மையான சிறப்புக்கள், திறமைகள் பலவற்றை மறைத்து விட்டன என்றே கூற வேண்டும்.

ஆனுல் அவரது மறைவிற்குப் பிறகு, பல்வேறு துறைகளிலும் அண்ணு அவர்களின் உண்மையான திறமைகள், ஆற்றல் இவற்றின் படைப்புக்கள் ஆகியவற்றைத் தமிழகத்து மக்கள் அனைவரும் அறிந்து கொள்ளுவர் என்பது உறுதி.

# சிறிய மூளையும்...



# பெரிய அறிவும்.!

'ஆண்களின் மூளையை விடப் பெண்களின் மூளை சிறியது!'-காதலில் தோல்வியுற்று பெண் இனத்தையே வெறுக்கும் யாரோ ஒருவர் சொன்ன பேச்சல்ல இது. நூற்றுக் கணக்கான மண்டைகளைத் திறந்து பார்த்து, ஆராய்ந்து உலகப் புகழ் பெற்றவரான டாக்டர் பி. ராமமூர்த்திதான் இப்படிச் சொன்னார். ஆண் மூளையின் சராசரி எடையை விடப் பெண் மூளையின் எடை பத்து கிராம் குறைவாம். பெண்களை வெறுப்பவர்கள் இதைக் கேட்டவுடன் சந்தோஷத்தில் மூழ்கி விடக் கூடாது. 'மூளை சிறியதாக இருந்தாலும் ஆண்களைவிடச் சிறந்த அறிவாளிகள் பெண்களிடையே இருப்பது கண்கூடு' என்ற உண்மையையும் அவர் எடுத்துக் காட்டினார். ஆகையால் ''மூளையின் அளவுக்கும் அறிவின் தரத்திற்கும் சம்பந்தமில்லை'' என்றார் அவர்.

சமீபத்தில் பிரிட்டிஷ் கவுன்சில் ஆதரவில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் டாக்டர் ராமமூர்த்தி பேசுகையில் மனித மூளை பற்றிய சில ரசமான உண்மைகளைக் கூறினார்:

''ஒரு சாதாரண மூளையில் 50 கோடி முதல் 80 கோடி வரை செல்கள் உள்ளன. நாம் உட்கொள்ளும் பிராண வாயுவில் மூன்றில் ஒரு பகுதியை மூளை மட்டும் எடுத்துக் கொண்டு விடுகிறது. கஷ்டமான கணக்குப் போடுவது போன்ற ஆழ்ந்த சிந்தனையில் ஈடுபட்டிருக்கும் பொழுது 60 சத விகிதம் பிராண வாயுவைக் கூட அது உபயோகிக்கிறது.

''கைகளோ, கால்களோ, தலையோ சதா நடுங்கிக் கொண்டேயிருக்கச் செய்யும் 'ஷேகிங் பால்ஸி' என்ற நோய், மூளையின் ஒரு பகுதி கெட்டுப் போவதால் ஏற்படுகிறது. ஒரு நீண்ட ஊசியை மூளைக்குள் செலுத்தி, கெட்டுப் போன பகுதியை மின்சாரத்தால் அழித்து விடுவதன் மூலம் அந்த நோயைக் குணப் படுத்தலாம். சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில், சென்ற ஐந்து வருஷங்களில் இத்தகைய ஆபரேஷன்கள் ஐந்நூறு வரை நடந்திருக்கின்றன.

''நிதானமிழத்தல், அடங்காப் பிடாரித்தனம், பலாத்காரம் செய்யும் மனப்பான்மை முதலியவற்றையும் மூளை ஆபரேஷன் மூலம் குணப்படுத்த முடியும். ஆனால், அறிவுக் குறைவான ஒருவரின் அறிவை, ஆபரேஷன் மூலம் பெருக்க முடியாது. நான் விஞ்ஞானியாகையால் இதை அசாத்தியமென்று ஒப்புக் கொள்ள மாட்டேன். ரசாயன சாஸ்திரம் ஒரு வேளை இதைச் சாதிக்கக் கூடும். இருதயத்திற்குப் பதில் செயற்கை இருதயம் பொருத்தப்படும் அற்புதத்தை நம் வாழ் நாளிலேயே கண்டாலும் காணலாம்; ஆனால், செயற்கை மூளை பொருத்துவது இப்போதைக்கு நடக்குமென்று தோன்றவில்லை.''



டாக்டர். பி. ராமமூர்த்தி

தகவல்: கேயெம்.



# நீங்கள் கேட்டவை...

மராத்திய மாநிலத்து—கல்யாண் பகுதியில் இருந்து எம். ராமச்சந்திரன் பிள்ளை என்ற வாசகர் எழுதிய கடிதத்தால், சென்னை வானொலி நேயர்களுக்கு நல்ல பலன் ஒன்று கிடைத்தது. வாசகரின் கடிதம் இது:

''நேயர்கள் விரும்பும் திரைப்படப் பாடல்களை 'நேயர் விருப்பம்' நிகழ்ச்சிகளிலும், நிலையத்தாரால் ஒலிபரப்பப்படும் சினிமாப் பாடல்களைத் 'திரைப்பட இசை' என்ற நிகழ்ச்சிகளிலும் வானொலி மூலம் கேட்க முடிகிறது. ஆனால், நேயர்கள் விரும்பும் கர்நாடக சங்கீத இசைத் தட்டுக்களை வானொலி மூலம் கேட்டு மகிழ்வதற்கு மட்டும் வாய்ப்பில்லை. இதற்காக வானொலி நிலையத்தார் 'நேயர் விருப்பம்' நிகழ்ச்சிகளைத் திரைப்பட இசை, கர்நாடக இசை என இரு பிரிவுகளாக்கி ஒலிபரப்பினால் மிகவும் நன்றாக இருக்கும்.''

வாசகரின் இந்த ஆலோசனையைச் சென்னை வானொலி நிலைய டைரக்டரிடம் காட்டினோம். வாசகரின் ஆலோசனையை டைரக்டர் உடனே ஏற்றார்.

**''கர்நாடக சங்கீதத்தை விரும்பிக் கேட்கும் நேயர்களின் எண்ணிக்கை நிறைய இருக்கக் கூடும் என்றே தெரிகிறது. ஆகவே, உங்கள் வாசகரின் ஆலோசனைப்படி திரைப்பட இசை அல்லாத, நேயர்கள் விரும்பும் கர்நாடக சங்கீத இசைத் தட்டுக்களைக் குறிப்பிட்ட நேரத்தில் ஒலிபரப்ப ஆவன செய்யப்படும்'' என்று பதில் கூறினார் டைரக்டர்.**

மாயவரத்தைச் சேர்ந்த சூரிய நாராயணன் எழுதிய கடிதம்:

''சென்னை திருச்சி வானொலி நிலையங்களில் நிகழ்ச்சிகளுக்கு இடையே நிலைய வித்துவான்களின் மெல்லிசை ஒலிபரப்பாகி, அரை குறையாக நின்று விடுகின்றன. அந்த இசை அக்காடியன், புல்புல்தாரா, ஜலதரங்கம், மௌத் ஆர்கன், வயலின், சித்தார் இவற்றால் வாசிக்கப்படும்போது மிகவும் ரசிக்க முடிகிறது. இப்படி அரைகுறையாக முடிந்துவிடும் மெல்லிசையை, அப்படிச் செய்யாமல் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒலிபரப்பினால் என்ன?''

டைரக்டர் அளித்த பதில்:

**''மெல்லிசை இப்போது கூட ஒரு குறிப்பிட்ட நேரத்தில் ஒலிபரப்பாகிக் கொண்டுதான் இருக்கிறது. நிகழ்ச்சிகளுக்கு இடையே வாசகர் கேட்கும் அந்த மெல்லிசைகளை, அப்போது முழுவதுமாகக் கேட்கலாம்!''**

அருப்புக்கோட்டையைச் சேர்ந்த என். சேகர் எழுதியிருப்பது:

''கிரிக்கெட் போட்டியை மிக விரும்பி ரசிப்பதற்கென்று பலர் இருக்கிறார்கள். திருச்சி, சென்னை வானொலி நிலையம், வெளிநாடுகளில் நடக்கும் கிரிக்கெட் போட்டிகளை ஒலிபரப்பினால் என்ன? சிலோன் வர்த்தக ஒலிபரப்புத் துறையில் ஆஸ்திரேலியாவுக்கும், மேற்கு இந்தியத் தீவுகளுக்கும் இடையே நடக்கும் போட்டியை ஒலிபரப்பி வந்தனர். இதை நமது வானொலி நிலையமும் பின்பற்றக் கூடாதா?''

டைரக்டர் அளித்த பதில்:

**''உலகில் நடக்கும் எல்லா கிரிக்கெட் போட்டிகளையும் ஒலிபரப்புவது என்றால், அதற்கென்று தனியாக ஒரு அலையோசை ஒதுக்க வேண்டியது தான்! அது நம்மால் இயலாது. தவிர எல்லா நேயர்களுக்கும் அது பிடிக்கும் என்றும் சொல்ல முடியாது. ஆகவே இது சாத்தியம் இல்லாததும், அவசியமில்லாததும் ஆகும்.''**



உங்கள் பக்கம்

# ஜி-11 கொண்ட சிந்தால்
# இப்பொழுது
# அதிக நறுமணமும்
# நுரைவளமும் கொண்டுள்ளது




## உங்கள் நன்மைக்காக
## இரண்டு சைஸ்களில் கிடைக்கிறது

புதிய மீடியம் (மத்திய) சைஸ் சிந்தால் உங்கள் பட்ஜெட் டுக்குப் பொருத்தமானது. இந்த சோப், எல்லா விதங்களிலும் சொகுசுமிக்கது—எனினும் மலிவானதுதான்.

அதிக நறுமணம்—ஆழ்ந்த மணம், நீடித்திருப்பது. அதிக நுரை—மென்மையும், வளமையும் கூடியது. சிந்தாலுக்கே உரிய, ஒப்பற்ற ஜி-11 உங்களை நாள்முழுவதும் புத்துணர்ச்சியுடன் வைத்திருக்கிறது.



CINTHOL

INTERPUB/GS/16A TAM

12




உப்பிலியின் காட்சி சாலைக்கு அன்று முழுக்காட்டு நடந்து கொண்டிருந்தது. வாரத்துக்கு ஒரு தடவை எப்போது உப்பிலிக்கு அந்த வெறி தோன்றுமென்று சொல்ல முடியாது. அந்த வெறி அவனுக்குத் தோன்றி விட்டால், வேறு எந்த விஷயத்திலும் அவன் கவனத்தைத் திருப்ப முடியாது. கிணற்றிலிருந்து இரண்டிரண்டு வாளியாகத் தண்ணீர் எடுத்து வந்து எல்லா இடத்திலும் கொட்டி அலம்பி விட்டுச் சுத்தம் செய்வான். கிளிக் கூண்டு, மைனக் கூண்டு, கவுதாரிக் கூண்டு எல்லாவற்றுக்கும் தண்ணீர் அபிஷேகம் செய்து அவன் சுத்தம் செய்யும் போது, அந்தப் பறவைகள் போடும் கூச்சலைக் கேட்டு அவனுக்குச் சிரிப்பு வரும்.

''வாரத்திலே ஒருநாள் மேலே கொஞ்சம் தண்ணி பட்டா என்ன ஆயிடும்? மழையிலே நனையறமாதிரி நினைச்சுக்கங்களேன்'' என்று சிரிப்பான்.

புனுகுப்பூனையும் அப்படித்தான். அது குறுக்கும் நெடுக்கும் நடந்து நடந்து தழும்பேறிப் போயிருந்த மரக் கூண்டை உப்பிலி சுத்தம் செய்யும்போது அது சீறுசீறென்று சீறும். வேடிக்கையாக அதன் மேல் தண்ணீரை அள்ளித் தெளிப்பான், உப்பிலி. பற்கள் எல்லாம் வெளியே தெரியும்படியாக மேலுதட்டைச் சுளித்துக் கொண்டு அது அவனைப் பார்த்து உறுமும்.

''அட, யாருமே தேச்சு விடாமே உன் பல்லெல்லாம் எப்படிப் பளிச்சினு இருக்கு!'' என்று சிரித்துக் கொண்டே மேலும் அதன் மேல் தண்ணீரை வாரி இறைப்பான் உப்பிலி.

கூண்டை அலம்பி முடிந்ததும் அதற்கு உரிய ஆகாரத்தை அதற்கென்று ஏற்பட்ட வட்டில் வைத்துக் கூண்டுக்குள் நகர்த்துவான் உப்பிலி. அதை மோந்து கூடப் பாராமல் புனுகுப் பூனை மறுபடியும் முன்னும் பின்னும் நடை பயில ஆரம்பிக்கும்.

''சரி, நான் பார்த்தா நீ சாப்பிட மாட்டாயாக்கும். நாள் முழுவதும் நான் இங்கேயே உக்காந்திருந்தா என்ன செய்வே? பட்டினி கிடப்பயா?'' என்று சிரித்துக் கொண்டே உடும்புக் கூண்டை நோக்கிச் சென்றான் உப்பிலி.

உடும்பைப் பற்றி உப்பிலிக்குக் கவலை இல்லை. அவன் வாளி வாளியாகத் தண்ணீரைஅதன் மேல் ஊற்றிய போதும் அது கூண்டின் நெருக்கமான கம்பியின் குறுக்கே தான் பிடித்த பிடியை இன்னும் உறுதியாக்கிக் கொண்டு கட்டை போல் அசைவற்றுக் கிடந்தது.

''உடும்பா, சும்மாவா! உன்னை எப்படித்தான் பிடித்துக் கொண்டு வந்தேனோ, எனக்கே ஆச்சரியமாயிருக்கு!'' என்று கூறியவாறு உப்பிலி வெள்ளை முயல்களும் வெள்ளை எலிகளும் குடியிருந்த கூண்டுகளைச் சுத்தம் செய்து விட்டு அவற்றுக்கு முள்ளங்கிக் கீரையும் சர்க்கரைவள்ளிக் கிழங்கும் ஆகாரமாகப் போட்டு அவை சாப்பிடுவதையே ரசித்துப் பார்த்துக் கொண்டு நின்றான். ஒரு வெள்ளை முயலின் காதுகளைப் பிடித்துத் தூக்கி அதன் சிவப்புக் கண்களைக் கூர்ந்து நோக்கினான்.

''இந்தக் கண்களாலே நீ எப்படித்தான் பாக்கறே? எல்லாம் செக்கச்

செவேல்னுதானே தெரியும் உனக்கு?'' என்று கொஞ்சலாகக் கேட்டவாறு அவன் முயலைக் கீழே விட்டு விட்டு, மாடப்புரையில் ஒண்டிக் கொண்டு உட்கார்ந்திருந்த தேவாங்கைக் கையில் எடுத்து அதன் முதுகைத் தடவிக் கொடுத்தான்.

''ஏன்தான் இப்படிக் கூனிக்குறுகி இருக்கயோ? என்ன சாப்பிட்டாலும் நீ இப்படித்தான் இருப்பே, இல்லையா? நீ அழகில்லேன்னு எல்லோரும் சொல்ருங்களே, அதுக்காகவா எப்போதும் இப்படிப் பயந்த மாதிரிப் பாக்கறே? அவங்களுக்கு என்ன தெரியும்? என் கண்ணுக்கு நீ எவ்வளவு அழகா இருக்கே தெரியுமா? பட்டு மாதிரி உன் உடம்பும், பூப்போல இருக்கற இந்தக் கைகால்களும், முகத்திலே இந்தச் சுருக்கங்களும் எல்லாமே அழகாகத்தான் எனக்குத் தோணறது. உன் முகத்தைப் பார்த்தா, பழுத்த ஞானியோட முகத்தைப் பார்க்கிற மாதிரி இருக்கு'' என்று அந்தத் தேவாங்கை முகத்தோடு முகம் சேர்த்து வைத்துக் கொண்டு கொஞ்சினான்.

''உப்பிலி! உப்பிலி!''

நளினாவின் குரலைக் கேட்டு உப்பிலி ஆவலுடன் அவள்பக்கம் திரும்பினான். அவசர அவசரமாக மாடிப்படி ஏறி வந்ததால் நளினாவுக்கு மூச்சு வாங்கிக் கொண்டிருந்தது. முகம் சிவந்திருந்தது.



தேவாங்கை மாடப்புரையில் விட்டு விட்டு மலர்ந்த முகத்துடன் அவள் அருகே வந்தான் உப்பிலி.

''உப்பிலி, நான் பரீட்சையிலே பாஸ் செய்துட்டேன், அதுவும் முதல் வகுப்பிலே'' என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினாள் நளினா.

உப்பிலி சற்று ஏமாற்றத்துடன் அவளைப் பார்த்தான்.

''அவ்வளவு பெரிய படிப்புப் படிச்சிருக்கே! முதல் வகுப்பிலேதானா உன்னைப் போட்டிருக்காங்க'' என்று கேட்டான் வெகுளித்தனமாக.

''ஐயோ உப்பிலி, அப்படி இல்லேடா! முதல் வகுப்புன்னா நல்ல மார்க்கு வாங்கி யிருக்கேன்னு அர்த்தம்'' என்றாள் நளினா. ''அப்பா சொல்படி படிச்சு, பரீட்சை எழுதிப் பாஸ் செய்தாச்சு. பட்டம் வாங்கினப்பறம் என்ன செய்யப் போறேனோ எனக்கே தெரியலே'' என்றாள் ஒரு பெரு மூச்சுடன்.

''ஏன் நளினா, உன் படிப்பை எனக்குக் கத்துக்குடேன்.''

''உனக்கு இந்தப் படிப்பெல்லாம் தேவையா என்ன? இதிலெல்லாம் உன் மனசுதான் படியுமா? உடம்பு தான் வணங்குமா?'' என்றாள் நளினா.

''மனசு படியாதுதான். ஆனா, உடம்பு வணங்காதுன்னு மட்டும் சொல்லாதே. உடம்பு வணங்காமலா இன்னிக்கு இந்தக் காட்சிசாலை வேலியெல்லாம் இப்படிப் பளிச்சின்னு அலம்பி விட்டிருக்கேன்!''

''ஏன்? அன்னிக்கு ரங்கு வீட்டிலே கிணத்திலே இறங்கி வாளியை





''எதுக்காகக் காருக்கு இவ்வளவு எண்ணெய் புடிச்சுக்கிருங்க?...''

''நீ, சுத்த நாட்டுப் புறத்தாஞ இருக்கியே......முன்னுடி ரெண்டு விளக்கு, பின்னுடி ரெண்டு விளக்கு எரியுதே, அதுக்குத்தான்!...''

---

எடுத்துக் குடுக்கச் சொன்னதும், மறுபேச்சு இல்லாம கிணத்திலே குதிச்ட்டியே, அதையும் சேத்துச் சொல்லு!''

''பின்னே, சொல்றியே?''

''அட உப்பிலியே, உன்னைப்போலே வெகுளியை நான் பார்த்ததே இல்லே. ரங்குவோட சித்தி சொன்னதுக்காக அவங்க வீட்டிலே அப்படியெல்லாம் தான் வேலே செய்வாங்களா?''

''ஏன், செய்யக் கூடாதா?''

''அவங்க வீட்டிலே உனக்கு என்ன வேலேன்னு கேக்கறேன். அதுவும் ரங்குவோட சித்தி தனியா இருந்த போது நீ அங்கே போனதே தப்பு, தெரியுமா?''

''வீட்டிலே வேறே யாரும் இல்லேன்னு எனக்கு எப்படித் தெரியும் நளினு? தன்னேட பிறந்த நாளுக்குக் கட்டாயம் வரணும்னு ரங்கு சொல்லியிருந்தான். காட்டிலேருந்து திரும்பி வரபோதுதான் நெனேப்பு வந்தது. சட்டுனு அவங்க வீட்டுக்குள்ளே போயிட்டேன். என்னேப் பார்த்ததும் ரங்குவோட சித்தி என்னேப் பின்கட்டுக்கு வந்து ஊஞ்சலில் உக்காரச் சொன்னு. அப்படியே போய் உக்காந்திட்டேன். அதிலே என்ன தப்பு சொல்லு.''

''சரி உப்பிலி, அன்னிக்கு நடந்ததென்னமோ நடந்து போச்சு. இனிமே நீ எப்பவுமே அங்கே போகக் கூடாது! தெரிஞ்சுதா?''

''நான் ஏன் போகப் போறேன்? ரங்குவோட அடுத்த பிறந்த நாளுக்கு இன்னும் ஒரு வருஷம் இருக்கே; அப்பப் பார்த்துக்கலாம்.''

''ஐயோ, உப்பிலி! ஏன்தான் இப்படி வெகுளியாயிருக்கியோ?'' என்று சிரித்தாள் நளினு.

வாயிலில் ஜல் ஜல் என்று ஜகடைச் சத்தம் கேட்டது.

''அடேடே, தாத்தா வாக்கிங் புறப்பட்டுட்டாப்பலே இருக்கே'' என்று கூறிக் கொண்டே மொட்டை மாடிக்குச் சென்ற நளினு, கைப் பிடிச் சுவரில் சாய்ந்து வெளியே குனிந்து பார்த்தாள்.

தாத்தா மட்டும் வரவில்லே; அவருடன் நளினுவின் தந்தை நீலகண்டனும் வந்து கொண்டிருந்தார்.

''உங்கப்பா மட்டும் வெறுங்கையோட வராரே; அவரும் தாத்தா மாதிரி ஜகடை கோத்த வாக்கிங் ஸ்டிக் ஒண்ணேத் தரையிலே உருட்டின படியே வந்தா இன்னும் பொருத்தமாயிருக்குமே!'' என்று சிரித்தான் உப்பிலி.

''கேலியா செய்யறே? தாத்தா கிட்டே சொன்னு உன்னே லேசிலே விட மாட்டார் தெரியுமா?''

''வாக்கிங் ஸ்டிக்காலேயே நாலு சாத்துவாராக்கும். சாத்தட்டுமே! தாங்கிக்கும் இந்த உடம்பு!'' என்று மீண்டும் சிரித்தான் உப்பிலி.

நளினு கீழே இறங்கிச் சென்ருள். உப்பிலியும் அவளேத் தொடர்ந்து கீழே சென்ருன்.

அவ்விருவரும் தம்மை நோக்கி வருவதைப் பார்த்த சத்தியமூர்த்தி ஜகடையைத் தரையில் ஒரு தட்டு தட்டிவிட்டு நின்ருர்.

''நளினு நீயும் வாயேன். நொண்டிப் பாலம் வரைக்கும் போய்க் கொஞ்ச நேரம் காத்தாட உக்காந்துட்டு வரலாம்'' என்று கூறினுர்.

''நானே உங்ககூட வரதாத்தான் இருந்தேன்'' என்ருள் நளினு.

அவர்களுடன் கூடவே தெரு மூனைத் திருப்பம் வரை சென்று விட்டு உப்பிலி வீட்டுக்குத் திரும்பி வந்து மாடிப்படி ஏறவிருந்தவன், உள்ளே கூடத்தில் தன் தாயாருடன் யாரோ பேசிக் கொண்டிருக்கும் குரல் கேட்டு நின்றான்.

''ஏதம்மா, உனக்குக் கூட உக்காந்து ஊர்க் கதை பேச நேரமிருக்கா என்ன?'' என்று கேட்டுக் கொண்டே அவன் கூடத்தின் நிலைப்படி அருகே வந்து நின்றபோது, கூடத்தில் அவன் தாயாருடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்த காஞ்சனா திகைப்புடன் நிமிர்ந்து அவனைப் பார்த்தாள்.

''ஊர்க் கதை பேசலேடா உப்பிலி. என்னிக்கும் வராத காஞ்சனாதான் இன்னிக்குத் தன்னோட கதையைச் சொல்ல என்னைத் தேடி வந்திருக்கா'' என்றாள் ஆண்டாளு.

''கதை கேக்கறயா? கேளு, கேளு'' என்று சிரித்துக் கொண்டே உப்பிலி அப்படியே திரும்பி மாடிப்படி ஏறிச் சென்று விட்டான்.

''சொல்லு, காஞ்சனா. உன் கதையைக் கேக்கறதுக்கே பரிதாபமாயிருக்கு. சின்ன வயசிலே அப்பா அம்மாவை இழந்திட்டு அண்ணாவோட ஆதரவிலேதான் வளந்தேன்னு சொன்னயே, அண்ணா உன்னை சரியாக் கவனிச்சுக்கலையா?'' என்று கேட்ட ஆண்டாளு, கால்களை நீட்டியவாறு சுவரில் சாய்ந்து உட்கார்ந்துகொண்டபடியே, ''காலெல்லாம் ரத்தம் கட்டினாப்பலே இருக்கு. கொஞ்சம் பிடிச்சுவிடு காஞ்சனா'' என்றாள்.

ஆண்டாளுவின் கால்களை அமுக்கியவாறே காஞ்சனா பேசினாள்: ''அண்ணா எவ்வளவு தூரம் என்னைக் கவனிச்சுக்க முடியும் மாமி? அவனுக்கு நல்ல மனசுதான். ஆனா, மன்னிக்குத்தான் ரொம்ப பொல்லாத மனசு. அவளைச் சொல்லியும் குத்தமில்லே. அண்ணாவுக்கு அப்படி ஒண்ணும் தாசில் உத்தியோகமில்லையே! சின்ன வயசிலிருந்தே நாடகப் பயித்தியம் பிடிச்சு அலைஞ்சு, கடைசியிலே அதுவே தொழிலா நிலைச்சுப் போச்சு. அப்பப்போ ஏதாவது நாடகத்திலே ஏதாவது உதிரி வேஷத்திலே நடிக்கறத்துக்கு சான்ஸ் கிடைக்கும். பணம் என்ன பிரமாதமா கிடைச்சிடும்! அண்ணா கைச் செலவுக்குப் போக மாசம் நூறு நூத்தைம்பது தேறினாலே அதிகம். அந்த வருமானத்திலே ரெண்டு குழந்தைகளோட போராடினபடி மன்னி குடும்பம் நடத்தறதே பெரிய பாடாத்தான் இருக்கு. போறாக் குறைக்கு என்னையும் வச்சு பராமரிக்கறது எப்படிச் சாத்தியம்? இல்லாக் கொடுமையாலே ஏற்பட்ட ஆத்திரத்தை எல்லாம் மன்னி என் மேலே தான் காட்டுவா. நான் என்ன செய்ய முடியும், சொல்லுங்க? மன்னிக்கு ஒரு வீட்டு வேலை பாக்கி வைக்காமே அவ்வளவையும் நானே செய்வேன். ஆனா, நான் என்ன செய்தாலும் மன்னிக்குத் திருப்தி இருக்காது. சோத்துக்குக் கேடா வந்திருக்கேன்னு சீறிச் சீறி விழுந்தபடியே இருப்பா.''

''ஏன் காஞ்சனா, நீ ஏதோ படிச்சிருக்கே இல்லையா?''

''படிச்சு வாழ்ந்தேன். உழைச்சு உழைச்சு ஓடாப் போனாலும் படிப்பை விடக் கூடாதுன்னுதான் படிச்சேன். ஆனா, ஊர்வாய் சும்மாயிருந்தாத் தானே. மதுரையிலே நாங்க குடியிருந்த கீக்கிடமான சந்திலே வம்புக்குக் கேக்க வேண்டாம். எந்த வேளையிலே பொறந்தேனோ, மத்தது ஒண்ணும் சரியாயில்லாட்டாலும் உருவம்



ஓட்டலில் சாப்பிட்ட ஒருவர்: ''இன்னிக்கு எனக்குப் போட்ட சாப்பாட்டிலே பதினைஞ்சு கல்தான் இருந்தது...!'' என்றார் கோபமாக!

''ரொம்ப மன்னிக்கணும்! இங்கே அளவு சாப்பாடுதான். கூடப் போட முடியாது!'' என்றார், பில் வாங்கிக் கொண்டிருந்த முதலாளி!

சொல்லிக் கொண்டு அங்கே வந்து கூடற கூட்டம் இருக்கே, அப்பப்பா! ஒவ்வொருத்தரும் பார்வையாலேயே என்னைக் கொன்னுடற மாதிரி இருக்கு எனக்கு. ரங்குவோட அப்பா ஒரு பரமார்த்தி. அதெல்லாம் புரிஞ்சுக்கக் கூடத் தெரியலே அவருக்கு. அத்தனை உதவாக்கரைகளையும் பக்தி மார்க்கத்திலே திருப்பி விட்டுட்டதா நினைச்சுப் பெருமைப் பட்டுக் கொண்டிருக்கார். அந்தத் தோரணையிலே அவர் பேசற போது எனக்கு எப்படிப் பத்தி எரியறது தெரியுமா?''

''கண்ருவிதான்! இவ்வளவெல்லாம் இருந்தும் நீ பொறுமையைக் கை விடாமே முக மலர்ச்சியோட இருக்கயே, அதுக்காக உன்னை எவ்வளவு கொண்டாடினுலும் தகும் காஞ்சனு'' என்ருள் ஆண்டாளு. சற்றுப் பொறுத்துக் கேட்டாள்:

''பட்டணத்திலேருந்து தாமு வந்திருக்கான் போலேருக்கே.''

''ஆமாம். ரெண்டு வருஷமா எட்டிப் பாக்காமே இருந்து இப்போ திடீர்னு என்ன தோணித்தோ, தகவல் கூடக் குடுக்காமே புறப்பட்டு வந்திருக்கான். அவன் வராமலே இருக்கானேன்னு என் மனசை அரிச்சுக் கொண்டிருந்த வேதனை ஒரு வழியாத் தீர்ந்துதுன்னு நெனைச்சேன். ஆனு, என்ன பிரயோஜனம்? அவன் வந்து ஒரு வாரமாகப் போறது. இதுவரைக்கும் என் கூட ஒரு வார்த்தை கூடப் பேசலே. நான் இருக்கற பக்கம்கூடத் திரும்பிப் பார்க்கலே. எப்பவாவது தற்செயலா நான் அவன் எதிரே போயிட்டாலும் முகத்தைத் திருப்பிக் கொண்டு போயிடருன்.''

இப்படிக் கூறும் போதே காஞ்சனுவுக்கு விம்மல் வெடித்து விடும் போல் ஆகி விட்டது.

அவளுடைய துக்கத்தைப் பார்த்து ஆண்டாளுவின் பெரிய மனசு பொங்கி வந்தது. பாசத்துடன் காஞ்சனுவை அணைத்துக் கொண்டாள்.

''நீ வருத்தப் படாதே காஞ்சனு. எனக்குத் தெரிஞ்ச வரைக்கும் தாமு சுபாவத்திலே தங்கக் கம்பிதான். இப்ப என்னமோ வேளைக் கோளாறு அவன் மனசை எப்படியெப்படியோ ஆட்டி வச்சு வேதனை செய்யறது போலேருக்கு. சீக்கிரம் அவன் உன்னுேட அருமையைப் புரிஞ்சுக்குவான்'' என்று தேற்றிஞள்.

''ரங்கு சரியாயிருக்கான் இல்லையா?''

''ரங்குவாலேதான் நான் சந்தோஷமாயிருக்கேன். சித்தி சித்தின்னு உரிமையோட அவன் பாசம் காட்டினதிஞலே தான் நான் ஒரு ஆளா வளைய வரேன் அந்த வீட்டிலே'' என்று கூறிய காஞ்சனு, கண்ணீரைத் துடைத்துக் கொண்டு எழுந்தாள்.

''என்னமோ என்னுேட ஆத்தாமையை யெல்லாம் உங்ககிட்டே சொல்லிக்கணும்னு தோணித்து. இப்பத்தான் என் மனசிலேருந்து கொஞ்சம் கனம் இறங்கிஞப்பலே இருக்கு'' என்ருள்.

அவளுடன் கூடவே எழுந்த ஆண்டாளு அவளை மீண்டும் அன்புடன் அணைத்துக் கொண்டு, ''இத பாரு காஞ்சனு, நான் உனக்குத் தாயாரி மாதிரி. உனக்கு எப்போ மனசுக்குக் கஷ்டமாயிருந்தாலும் என்கிட்டே வந்திடு'' என்று பரிவுடன் கூறிஞள்.

காட்சிசாலை வேலை யெல்லாம் முடிந்து, இரண்டு கைகளிலும் இரண்டு காலி பக்கெட்டுகளை எடுத்துக் கொண்டு கீழிறங்கி வந்த உப்பிலி, அப்போதுதான் கூடத்து வழியே அவ்விருவரையும் கடந்து சென்ருன். தாயார் கூறிய வார்த்தைகள் அவன் காதிலும் விழுந்தன. சட்டென்று நின்று அவன் அவர்களைத் திரும்பிப் பார்த்தான். ''ஏம்மா, ரங்குவோட சித்திக்கு நீ தாயார் மாதிரின்னு சொன்னியே, நான் இனிமே இந்தச் சித்தியைச் சித்தின்னு கூப்பிடறதா, அக்கான்னு கூப்பிடறதா?'' என்று கேட்டான்.

''இதென்னடா கேள்வி! நீ எப்படிக் கூப்பிட்டாலும் காஞ்சனுவுக்குச் சந்தோஷமாத்தான் இருக்கும்'' என்ருள் ஆண்டாளு.

''அப்படின்னு எனக்கும் சந்தோஷம் தான்!'' என்று சிரித்துக் கொண்டே கிணற்றடியை நோக்கி நடந்தான் உப்பிலி.

(தொடரும்)

## 12 சந்தானம் வந்ததுண்டா?

"போன வாரம் திங்கட் கிழமை நானும் அந்தப் படத்தைப் பார்த்தேன் ஸார். அதற்காக இங்கே வந்தேன்.

"அது ஆலந்தூர் தியேட்டரில் நடந்தது. படம் பன்னிரண்டுக்கு முடிகிறது. அங்கிருந்து நளினா வீடு திரும்ப பன்னிரண்டே கால் ஆகி இருக்கலாம். அந்த நள்ளிரவில், நளினாவுக்கு ரொம்பத் தூக்கம் என்று சொல்லும்போது, சந்தானம் முக்கால் மணி நேரம் பேசிக் கொண்டிருந்திருக்க முடியாது. பன்னிரண்டரை மணி சுமாருக்கு அவர் வெளியே வந்திருக்க வேண்டும்...."

"எஸ். நீ சொல்வது ஒரு பாயிண்ட்" என்று யோசனை செய்தவர், "நளினா சொன்னதை அப்படியே எடுத்துக் கொண்டாலும் மணி ஒன்று... கடிகாரம் கால் மணி வேகமாக ஓடுகிறது...அதாவது பன்னிரண்டே முக்கால் சரியான நேரம்."

"நீங்கள் நளினாவைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"

"நல்ல பெண்தான். ஆனால், சந்தானத்துக்காக எதுவும் செய்வாள் அவள். அவளிடமிருந்து நாம் அதிக உதவி எதிர்பார்க்க முடியாது."

"சந்தானத்தை நாம் சந்தேகிப்பதாகச் சொல்ல வில்லையே?"

"அதனால் தான் இவ்வளவு தூரமாவது தகவல் தெரிந்தது. அதுவும் நீயும் நானும் யாரென்று தெரியாததனால்தான்..சரி, நீ செங்கற்பட்டுக்குத் திரும்பலாம். இன்றைக்கு சினிமா பார்க்க உமக்குப் பர்மிஷன் இல்லை!"

காலையில் எழுந்து காப்பி குடிக்கு முன் பணிக்கர் செய்தித்தாளின் முகத்தில்தான் விழிப்பது வழக்கம். அன்று அவர் செய்தி நிருபர் முகத்தில்தான் விழிக்க வேண்டி இருந்தது!

"நீங்கள் காப்பி குடித்தாலும் சரி, கஞ்சி வெள்ளம் குடித்தாலும் சரி அதில் நானும் பங்கு போட்டுக்கொள்வது என்று வந்து விட்டேன்" என்று சொல்லிக் கொண்டு வந்து சேர்ந்தான் சந்திரன்.

"சரி. உன் வேலையிலும் எனக்குப் பங்கு கிடைக்குமா?"

"என்ன ஸார், இது?"

"நீ டைரக்டர் சந்தானத்தைப் பேட்டி காணப் போகிறாய். நானும் கூட வரப் போகிறேன்."

"அப்புறம்?"

"பாரேன். நீ சந்தானத்தை 'பிக்ஸ்' பண்ணிக் கொண்டு எனக்குப் 'போன்' செய்யேன்."

பிற்பகல் மூன்று மணிக்கு அவருக்குப் 'போன்' வந்தது.

"உடனே போகலாமா? இப்போது தான் சந்தானம் திரும்பி வந்திருக்கிறார். இரவு மறுபடி பெங்களூர் போகிறாராம்!"

## மாயாதேவி

**— செல்வி**

"எஸ். நீ வீட்டுக்கு வா. நான் அதற்குள் தயாராக இருக்கிறேன்" என்று கிளம்பினார் பணிக்கர்.

இருவருமாகப் போனபோது, டைரக்டர் சந்தானம் ஒரு வங்காளிக் கதை மொழி பெயர்ப்பு, ஒரு சினிமா கனவுக் காட்சிக்கு வேண்டிய ஜோடனை, கொடைக்கானலில் பதிவான 'டுயட்' பாட்டு—இவற்றிற்கு நடுவே திணறிக் கொண்டிருந்தார். எதிரே இருந்த இடத்தில் பணிக்கர்,





**''ஒரு தம்ளர் தண்ணி இருந்தா எங் கம்மா கடஞ வாங்கிக்கிட்டு வரச் சொன் ஞங்க... சாயந்திரமா திருப்பித் தந்துட றேன்னு சொன்ஞங்க...!''**

சரிகை மேல் அங்கவஸ்திரத்தை மடியில் போட்டுக் கொண்டு உட் கார்ந்தார்.

''ஒரு இண்டர்வியூ—'' என்ருன் சந்திரன்.

''நீங்க வந்ததிலேயே தெரிஞ்சு போச்சே?''

''எஸ். மாயாதேவியைப் பற்றி உங் கள் கருத்து என்ன?''

'சட்'டென்று நிமிர்ந்து உட்கார்ந் தார் சந்தானம். ''எதற்காக அது?''

''ஒரு கட்டுரை, முக்கியமான பலர் கருத்தையும் சேர்த்துத் தயார் செய் கிருேம். தயாரிப்பாளர் செட்டியார்.. முன்ஞள் தயாரிப்பாளர் சோமசுந் தரம்...''

''நான் எதுவும் சொல்லுவதற் கில்லே.''

''நீங்கள் சொல்லலாம், மனது வைத்தால் - கடைசி நாளன்றுகூட நீங்கள் அவர்களுடன் பேசிக் கொண் டிருந்திருக்கிறீர்கள்..''

''என்ன ஸார் இது? யார் சொன் னது அப்படி?''

''நீங்கள் புதன்கிழமையன்று அவர் களோடுதானே வெளியே போயிருந்த தாகக் கேள்விப் பட்டேன்?''

''ஓ!'' என்று சிரித்தார் சந்தானம். ''யாரோ ஒரு அரைகுறை உளறி இருக்கிருன். நான் போய் வந்தது புதுமுகமாகப் போகிற ஒரு நடிகையு டன். ஒரு சினிமாவுக்குப் போனேம்.''

''அப்புறம்?''

''அப்புறம் என்ன? வீட்டுக்கு வந் தேன், தூங்கினேன், எழுந்திருந்தேன்; காலேயில் பேப்பரைப் பார்த்தபோது தான் தெரியும், கொலே நடந்த இரவு, அந்த இடத்துக்கு அவ்வளவு சமீபத் தில் நான் இருந்திருக்கிறேன் என்று.''

''இடம் மட்டும் இல்லே. அதே நேரத்தில் கூட!'' என்று குறுக்கிட் டார் பணிக்கர்.

''இல்லேயே! நான் வீட்டுக்கு வந் தாயிற்றே! மிஸ். நளிஞவுக்குக் கூடத் தெரியுமே!''

''நான் அன்றைக்குப் பன்னிரண்டே முக்கால் மணிக்கு நீங்கள் அந்தத் தெருவில் நடந்து வந்ததாக ஒரு ஜோசியம் சொல்கிறேன்.''

''ஸார் யார்? உங்கள் பத்திரிகை யில் ஜோசிய பலன் எழுதுகிற நிருபரா?''

''இல்லே, இல்லே. ஒரு 'ப்ரெண்ட்''' என்று சிரித்துக் கொண்டான் சந்திரன்.

''பின்னே எப்படி அவ்வளவு உறுதி யாக அந்த ஜோசியம் சொல்லுகிருர்?''

''மகாலிங்கநகர் பெட்ரோல் பங் கில், அந்த இடத்திலிருந்து ஒரு பர் லாங்கு தூரத்தில், நீங்கள் அன்று இரவு ஒன்றரை மணிக்குப் பெட்ரோல் போட்டீர்கள். சரிதாஞ? நீங்கள் வீட்டுக்குப் போய் விட்டு மறுபடியும் பெட்ரோல் போட அவ்வளவு தூரம் திரும்பி வர நியாயம் இல்லே...''

''ஸார் என்ன? உங்கள் பத்திரிகை யில் துப்பறியும் படக் கதை எழுது கிறவரா?''

''மிஸ்டர் சந்தானம்! புதன்கிழமை இரவு, அக்டோபர் மாதம் முப்பத் தொன்றும் தேதி, நள்ளிரவுடன் முடிகிறது. இரவு ஒரு மணிக்கு மகாலிங்கநகர் பெட்ரோல் பங்கின் ரிஜிஸ்தரில், நவம்பர் மாதம் முதல் தேதி, முதல் முதலாகப் பெட்ரோல் போட்டுக் கொண்டவராக, உங்கள் பெயர், கார் இரண்டும் அங்கே பதி வாகி இருக்கிறது. அப்போது மணி ஒன்றரை. இவற்றைச் சரி பார்த்துக் கொள்ள நீங்கள் விரும்புகிறீர்களா?''

''நீங்கள் யாருன்னு தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.''

''போலீஸ் சூபரின்டெண்டண்ட் பணிக்கர்'' என்று கையைக் குலுக்க அவர் புறமாக நீட்டிஞர் பணிக்கர்!

(தொடரும்)



பிரபல சமையல் கலைஞர் திருமதி பிரமீளா லால் தமது விசேஷப் பக்குவ முறை ஒன்றை உங்களுக்கு உதவுகிறார்.

# பிரவுன் & போல்ஸன்

## கஸ்டர்டு பவுடர்

## உபயோகித்து சாக்கோ மூஸ் செய்து பார்த்திருக்கிறீர்களா?

இன்சுவை ததும்பும், மென்மையான சாக்கோ மூஸ் உங்களுக்குக் கிடைக்கும்.



பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர் மென்மையானது, செழுமையானது, சத்தானது. பிளனி, ஐஸ் க்ரீம், ட்ரிபிள் போன்ற பலவகைப் புட்டிங்குகளையும், பழவகைத் தின பண்டங்களையும் தயாரிக்க அது எப்போதும் கைவசமிருக்கட்டும். தனியே, ஜெல்லி, ப்ரூட் ஸாலட்டுகளுடன் சேர்க்கும்போது இன்சுவை பெருகும். பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர் அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப் பட்டது.




**பக்குவ முறை:**

- 2 டேபிள் ஸ்பூன் பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடர் (ப்ளெயின்)
- 2 டேபிள் ஸ்பூன் கோகோ
- ½ லிட்டர் பால்
- 4 டேபிள் ஸ்பூன் அல்லது தேவையான சர்க்கரை.
- சில துளிகள் வெனில்லா எஸென்ஸ்
- 25 கிராம் டேவிஸ் ஜிலடின்
- 125 திரவ கிராம் பாலேடு

1. பிரவுன் & போல்ஸன் கஸ்டர்டு பவுடரையும் கோகோவையும் கிண்ணம் பாலில் கலக்கவும்; எஞ்சிய பாலை கொதிக்க வையுங்கள். 2. கொதிக்கும் பாலை கஸ்டர்டு பவுடர் கலவையில் விட்டுக் கிளறவும் 3. அதை ஒரு பாத்திரத்தில் திருப்பிக் கொட்டி இரண்டு நிமிஷ காலத்துக்கு வேகவிடவும், அடிக்கடி கிளறியவண்ணம். 4. சர்க்கரையையும் எஸ்ஸென்ஸையும் சேர்த்து, சற்றே குளிர வைக்கவும். 5. ஆறு மேஜைக்கரண்டி வெந்நீரில் கரைத்த ஜெலடினை சேர்க்கவும். 6. கட்டியாகும் வரை பாலேட்டை கலக்கி, கலவையுடன் சேர்க்கவும். 7. எண்ணெய் தடவிய அச்சில் ஊற்றவும்; இறுகும் வரை விட்டு வைக்கவும்.

பக்குவ முறைகள் அடங்கிய இலவசமான செட் ஒன்றை எனக்கு ஆங்கிலம்/இந்தி/வங்காளம்/தமிழ்/தெலுங்கு மலையாளம்/குஜராத்தி மராத்தி/கன்னடம் மொழியில் தயவு செய்து அனுப்பவும்.

பெயர்

முகவரி

இக் கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புக:

கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1 பி.ஆர்

AV-3

**உங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமான்களையே உபயோகியுங்கள்!**

இதுபோல் இன்னும் பல உணவு வகைகளைத் தயாரித்து உங்கள் குடும்பத்தினரை மகிழ்விக்கலாம். பின்வரும் இதழ்களைக் கவனித்து வாருங்கள்.

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ், வாட்பி ரோடு, பம்பாய்-1. (பி.ஆர்)



ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்.
பாரி & கம்பெனி, டேர் ஹவுஸ், மதராஸ் 1.
மற்றும் அவர்களது கிளைகள்

# அமரர் அண்ணா

## வாழ்க்கை நிகழ்ச்சிகளின் சுவையான தொகுப்பு

### தொகுத்து அளிப்பவர்: அடியார்

பல்லவர்கள் பாராண்ட பூமியின் தலைநகராக ஒரு காலத்தில் விளங்கிய காஞ்சிபுரத்தில் வரகு வாசல் தெருவில் ஒரு சிறுவன் புழுதி மண்ணில் நின்று கொண்டிருக்கிறான்.

சிறிது நேரம் நின்று கொண்டிருந்தவன் சுற்று முற்றும் பார்த்து விட்டு 'விடுவி'டென வீட்டிற்குள் ஓடி வருகிறான்.

அதைப் பார்த்த அவனது சிற்றன்னை மறுபடியும் தூக்கிக் கொண்டு வந்து புழுதி மண்ணில் விடுகிறார்.

''அட ராஜா! நீயோ குள்ளமாய் இருக்கிறாய்! நீ வளர வேண்டுமானால் கால் புழுதி மண்ணில் பட வேண்டும். 'மண் பட்டால்தான் வளர முடியும்' என்று பெரியவர்கள் சொல்வார்கள். என் கண்ணல்ல? என் துரையல்ல? கொஞ்ச நேரம் நில்லப்பா!'' என்று கூறிவிட்டு, மண்ணில் பையனது கால் படியுமாறு வைத்து விட்டுத் திரும்பி வீட்டிற்குள் சென்றார், அந்தப் பையனின் சிற்றன்னையார்.

சிறிது நேரம் நின்றிருந்த பையன் மீண்டும் திரும்பித் திரும்பிப் பார்த்து விட்டு 'விடுவி'டென வீட்டிற்குள் ஓடி விடுகிறான்.

அவன் ஓடி வருவதைப் பார்த்த சிற்றன்னை கோபத்தோடு ''நான் சொல்லிக் கொண்டே இருக்கிறேன்; நீ திரும்பவும் வந்து கொண்டே இருக்கிறாயே!'' என்று கேட்க - கண்களைத் தேய்த்துக் கொண்டு புழுதி மண்பட்ட காலைக் காட்டி— மழலை மொழியில் ''தொத்தா - தொத்தா! அழுக்கு அழுக்கு!'' என்று கெஞ்சினான் சிறுவன்!

ஆனந்தம் மேலிட, அந்தச் சிறுவனைத் தூக்கி முத்தமிட்டு ''என் ராஜா! அழுக்கு காலில் படுதா? அண்ணாதுரையல்லவா? துரை மாதிரியே பேசுகிறான்! என் கண்ணு; என் துரை!'' என்று மாறி மாறிக் கன்னங்களில் முத்தமாரி பொழிந்தார் - அண்ணாவின் தொத்தா (சிற்றன்னையார்)!

அண்ணா முதலில் கல்வி கற்க சேர்ந்ததும் பச்சையப்பன் ஆரம்பப் பாடசாலை; அவர் பட்டம் பெற்றதும் பச்சையப்பன் கல்லூரிதான்.

ஆரம்பப் பாடசாலையில் அவரைச் சேர்க்கும் போது அவருக்குச் சடை பின்னிப் பூச்சூட்டித்தான் அனுப்புவார்கள்.

அவரைப் பெண் போலவே பாவித்து, தலை சீவுவது மட்டுமல்ல; அவரை அழைக்கும் போது கூட ''வாடா;



போடா;'' என்று கூருமல் ''வாம்மா; போம்மா!'' என்றே வீட்டிலுள்ளோர் சொல்லி அழைப்பார்கள்.

பள்ளிக்கூடத்துப் பையன்கள் எல்லாம் கிராப்புத் தலேயோடு இருக்கவும் தான் மட்டும் 'சடை பின்னி'க் கொண்டு இருப்பதையும் கண்டு அண்ணுவுக்கு ஒரு மாதிரியாக இருந்தது.

பள்ளிக்கூடம் விட்டு அவர் வரும் போது அவரை அழைத்துச் செல்ல வந்த தொத்தாவிடம் இதைச் சொல்ல நினைத்தார் அண்ணு.

எதையும் பக்குவமாகச் சொல்பவராயிற்றே! அதனல் தொத்தாவிடம் பக்குவமாக விஷயத்தை ஆரம்பித்தார்:

''தொத்தா''.

''என்னம்மா - கண்ணு''.

''எத்தனை மார்க் வாங்கியிருக்கேன் பாரு'' என்று சிலேட்டை நீட்டினர் அண்ணு!

''நீயே சொல்லு; எத்தனை மார்க்கு, கண்ணு?'' என்று சிலேட்டைப் பார்க்காமல் அண்ணுவின் வாயிதழ்களையே பார்த்தார் தொத்தா.

''நூற்றுக்கு நூறு'' என்ருர் அண்ணு பெருமையாக.

''அப்படியா - என் ராஜா- எல்லாத்திலேயும் கெட்டிக்காரன்'' என்று முத்தம் கொடுத்துப் பாராட்டினர்.

இது தான் சமயம் என்று அண்ணு விஷயத்தை ஆரம்பித்தார்.

''தொத்தா! அந்தப் பசங்களைப் பாரு! எல்லாரும் கிராப் வைச்சுகிட்டு இருக்காங்க! எனக்கு மட்டும் இதுவா?'' என்று சடையை இழுத்துக் காட்டினர் அண்ணு!

ஒரு நிமிடம் திகைத்துப் பிறகு-பரவசமடைந்த தொத்தா ''கண்ணு! நாளைக்கே உனக்குக் கிராப் வெட்டி விடச் சொல்றேன்!'' என்று கூறி விட்டு, 'சின்ன வயசாயிருந்தாலும் என் துரை எவ்வளவு பக்குவமாகத் தனது கஷ்டத்தைச் சொல்கிருன்' என்று பூரித்துப் போனர்.

✶

**ப**ள்ளிப் பிராயத்தில் அண்ணு அவர்கள் வகுப்பறையில் என்றுமே துடுக்குத்தனம் காட்டியதில்லை.

அமைதியாக வகுப்பறையின் ஓரத்திலுள்ள இருக்கையில் அமர்ந்து, கவனமாகப் பாடத்தைக் கேட்பார்.

ஆசிரியர், பாடங்களை முடித்த பிறகு ''ஏதாவது சந்தேகம் இருக்கிறதா?'' என்று கேட்பார். பையன்கள் எழுந்து சந்தேகத்தைக் கேட்பார்கள். அண்ணுவுக்கும் சந்தேகம் இருக்கும். ஆனல், நாலுபேர் நடுவில் எழுந்து சந்தேகம் கேட்பதற்கு அவருக்குக் கூச்சம்! தவருகக் கேள்வி கேட்டு விட்டால், ஆசிரியர் மனம் புண் படுமே என்பதில் ஏற்பட்ட ஓர் அடக்கம்!

அதற்காக அவர் சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ளாமலும் விடமாட்டார்.

வகுப்பறை முடிந்து பையன்கள் எல்லோரும் கலைந்து சென்ற பிறகு-ஆசிரியரைத் தனியாகச் சந்திப்பார்.

''சார்.''

''சொல்லு - அண்ணுதுரை?''

''ஒரு சந்தேகம் சார்.''

''உனக்குச் சந்தேகமா? நீதான் கிளாசிலேயே 'பஸ்ட்' ஆயிற்றே, சொல்லு! சொல்லு!''

சந்தேகத்தைச் சொல்லுவார் அண்ணு. ஆசிரியர் திகைத்துப் போய் ''அடாடா! இதைச் சொல்ல மறந்து விட்டேனே! சரியான சமயத்தில் கேட்டாய்! நாளை வகுப்பில் விளக்கி விடுகிறேன்'' என்பார்.

இவ்விதம் ஆசிரியர்கள் மனம் நெகிழ்ந்து பாராட்டுகிற அளவில் அவர் பள்ளிப் பிராயத்தைக் கழித்தார்.

✶

**ப**ள்ளிப் பிராயத்தில் அவர் புத்தகங்கள் படிப்பதில் மட்டுமல்ல - காஞ்சிபுரத்தில் அன்றும் - இன்றும் சிறப்பாக இருக்கும் நெசவுத் தொழிலைக் கற்பதிலும் ஆர்வம் காட்டினர்.

அன்ருெரு நாள் வெகு நேரம் அண்ணு வீடு திரும்பவில்லை. தொத்தாவுக்கு இருப்பிடம் கொள்ளவில்லை. அங்கு மிங்கும் அலைந்து அண்ணுவைத் தேடினர்.

அண்ணுவோ ஒரு நெசவாளியின் வீட்டில் நெசவு வேலைக்கு உதவி செய்து கொண்டிருந்தார். அதன் நுட்பங்களைக் கூர்ந்து கவனித்துப் பயின்று கொண்டிருந்தார்;



'தளபதி அண்ணுதுரை' என அறிமுகமான போது அண்ணு!

ஊரெல்லாம் தேடி அலைந்த தொத்தா ஓய்ந்து போய் வீட்டில் அமர்ந்தார். மெதுவாகத் தலையை நீட்டி உள்ளே வந்தார் அண்ணு.

''எங்கப்பா போனே?'' - என்று கவலையும் கோபமும் தொனிக்க தொத்தாவும் - அண்ணுவின் அன்னை யாரும் கேட்டார்கள்.

''நெசவு நடக்குதே, அங்கே போனேன்.'' என்று வெகு சாவதான மாக அண்ணு கூறினுர்.

''கஷ்டப்பட்டுப் படிக்க வைக்கிறோம். நீ நெசவுக்கா போறே?'' என்று கேட்டார் தொத்தா.

'''நெய்யும் தொழிலுக்கு நிகரில்லே' அப்படீன்னு வள்ளுவரே சொல்லியிருக்கிருராம் தொத்தா! வள்ளுவர் சொன்னதுனுலே அங்கே போனேன். நான் செய்தது தப்பா, தொத்தா?'' என்று பரிதாபமாகக் கேட்டார் அண்ணு!

பையனின் அமுத மொழிகளைக் கேட்ட தொத்தா வாரியணைத்து''என் துரை செய்யறது தப்பா இருக்குமா? நீ செய்யறது - தப்பில்லையடா - கண்ணு - தப்பில்லே'' என்று கூறி உச்சியில் ஒரு முத்தமிட்டு விட்டு ''என்ன இருந்தாலும் ராத்திரி ரொம்ப நேரம் வெளியே இருக்காதே, அப்பா! மனசு தாங்கறதில்லே'' என்று கூறினுர். அண்ணுவும் சம்மதத்திற்கு அடையாளமாகத் தலையையாட்டினுர்.

✶

தமிழ் இலக்கியங்களில் அளவற்ற காதல் கொண்டதால் அண்ணு அவர்கள் எப்போதும் வீட்டில் அமர்ந்து தமிழ் இலக்கியங்களை உரக்கப் படித்துக் கொண்டிருப்பார்.

அதைக் கேட்டுக் கொண்டிருக்கும் தொத்தா ஒரு நாள் மெதுவாக அண்ணுவிடம் வந்தார்.

''துரை....படிக்கிறியா?''

''ஆமா-தொத்தா!''

''என்ன படிக்கிறே?''

''தமிழ்!''

மனசு விட்டுப் போய், தொத்தா சோகம் ததும்ப நின்றார்.

''ஏன் தொத்தா - நான் செய்யறது உனக்குப் பிடிக்கலையா?''

''இல்லடா - கண்ணு! எவ்வளவு செலவழிச்சுப் படிக்க வைக்கிறோம்! நாலு வார்த்தை இங்கிலீஷில் நீயும் படிக்க வேண்டும் என்பதற்காகத் தான் இவ்வளவு கஷ்டப்படுகிறோம்! நீ......என்னடான்னா நம்ம பாஷை யையே படிச்சிக்கிட்டு இருக்கறே.. நாலு வார்த்தை இங்கிலீஷில் சொல்லப்பா..மனசு ஆறுதலாவது அடையட்டும்.''

அண்ணா உள்ளூற-மெதுவாகச் சிரித்துக் கொண்டு - தன்னை வளர்த்தவர்களின் ஆசை நிறைவேறும் வண்ணம் ''இனிமேல் உனக்காக இங்கிலீஷ் படிக்கிறேன்'' என்று கூறி விட்டு, சத்தம் போட்டு இங்கிலீஷ் பாடத்தைப் படித்தார். ரொம்பச் சந்தோஷத்துடன் தொத்தா அருகிலேயே அமர்ந்து அந்த 'இங்கிலீ'ஷை ரசித்துக் கொண்டிருந்தார். இரவு வெகு நேரமானதால் தொத்தா களைத்துப் போய்த் தூங்கத் தொடங்கிவிட்டார்.

அண்ணாவின் தாயார் பங்காரு அம்மையார்.



'அப்பாடா' என்று பெரு மூச்சு விட்டு விட்டு மறுபடியும் தமிழ்ப் பாடத்தைப் படிக்க ஆரம்பித்தார்.

''துரை...''

தொத்தாவின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போனார் அண்ணா. தொத்தா விழித்துக் கொண்டார்.

''நான் முழிச்சிருக்கிற வரைக்கும் இங்கிலீஷ் படிச்சுட்டுத் தூங்க ஆரம்பிச்சதும் தமிழ் படிக்கிறியா?'' என்று போலி மிரட்டல் குரலில் கேட்டார் தொத்தா.

''மன்னிச்சுக்கோ - தொத்தா! என்னமோ தெரியலே! தமிழ்ன்னா அவ்வளவு இஷ்டம் எனக்கு'' என்றார் அண்ணா. பூரித்து - புளகாங்கிதம் அடைந்து தூணில் சாய்ந்தார் தொத்தா.

உயர்நிலைப் பள்ளியில் பயின்று கொண்டிருந்த வேளையில் அண்ணா ஒரு நாள் வகுப்பறையில் தூங்கி விட்டார்.

திடீரென எழுப்பினார் ஆசிரியர். கடுமையாகக் கடிந்து கொண்டார். ஒரு தண்டனையும் விதித்தார்.

''நான் என்ன பாடம் சொல்லிக் கொண்டிருந்தேன் என்பதை நாளை எழுதிக் கொண்டு வா. இங்குள்ள பையன்கள் யாரும் அண்ணாதுரைக்கு இங்கு என்ன பாடம் நடந்தது என்று சொல்லக் கூடாது'' என்று கூறி விட்டார் ஆசிரியர்.

ஆனால், அடுத்த நாள் அண்ணா மிகச் சரியாகவே அந்தப் பாடத்தை எழுதிக் கொண்டு வந்து காட்டினார்.

''அண்ணாதுரை! நீதான் தூங்கினாயே! எப்படி உனக்கு இந்தப் பாடத்தை இவ்வளவு சரியாக எழுத முடிந்தது?''

''சார்! நான் தூங்கினாலும் நீங்கள் சொன்னது லேசாகக் காதில் விழுந்து கொண்டிருந்தது'' என்றாராம் அண்ணா.

அவர் வளர்ந்து பெரியவராகி, தலைவரான பிறகும் அந்த 'அறிதுயில்' இருந்து கொண்டே இருந்தது. அதனால் அவரது தம்பிகள் அவர் தூங்கும் போது எந்த ரகசியமும் பேசமாட்டார்கள். ஏனென்றால் அவர் தூங்குவது தூக்கமல்லவே; அறிதுயில் அல்லவோ?

✶

**கா**ஞ்சிபுரத்திலிருந்து சென்னைக்குப் பச்சையப்பன் கல்லூரியில்

படிக்க வந்தார் அண்ணா. அந்தப் பச்சையப்பன் கல்லூரி இப்போது சேத்துப்பட்டில் இருக்கும் கல்லூரி அல்ல!

சைனாபஜாரில் கூச்சலும் - சந்தடியும் நிறைந்த இடத்தில் அந்தப் பச்சையப்பன் கல்லூரி இருந்தது.

உள்ளே பொருளாதாரப் பேராசிரியர் 'மால்துஷியஸ்' தத்துவத்தை விளக்கிக் கொண்டிருப்பார். வெளியே ''ஒன்றரையணா; ஒன்றரையணா! எதை எடுத்தாலும் ஒன்றரையணா!'' என்ற கூச்சல் கேட்கும். இருப்பினும் அண்ணா பாடத்திலேயே கவனமாக இருப்பார்.

உலகத்தில் எத்தகைய கூச்சலும், குழப்பமும், அமளியும் ஏற்பட்டாலும் அமைதியாக மனத்தை ஒருமுகப் படுத்தி விஷயத்தில் செலுத்தும் பண்பை அண்ணா இங்கிருந்தே பெற்றார்.

அன்றொரு நாள் வழக்கம் போல் பேராசிரியர் பாடம் நடத்திக்கொண்டிருந்தார். வெளியே கூச்சல் கேட்டுக் கொண்டிருந்தது.

பேராசிரியர் பாடத்தை நிறுத்தி விட்டுத் திடீரென்று ஒரு பையனைப் பார்த்துக் கேள்வி கேட்டார்.

ஆசிரியர் திடு திப்பென்று கேள்வி கேட்டதால் நிலை குலைந்து போன அந்த மாணவன் ''ஒன்றரையணா!'' என்று-தான் வெளியே கேட்டதைக் கூறி விட்டான். வகுப்பறையே சிரித்தது.

அந்தக் கேள்வியை ஒவ்வொருவராகப் பார்த்துக் கேட்டார் பேராசிரியர். வெளியே உள்ள கூச்சலால் சரிவரப் பாடத்தைக் கவனிக்காத மாணவர்கள் விழித்தார்கள் - பதில் சொல்ல முடியாமல்!

அண்ணாவையும் பார்த்துப் பேராசிரியர் கேட்டார். 'பட் பட்' என்று பதில் சொன்னார்.

அந்தப் பேராசிரியர் மனம் மகிழ்ந்து போனார். அவர் வட மொழியிலும் கொஞ்சம் பரிச்சயம் உள்ளவர்; ஆகவே, அவர் மகிழ்ச்சியோடு பேசினார்:

''அண்ணாதுரை! கீதையில் கிருஷ்ண பரமாத்மா சொல்கிறார்: 'எவன் ஒருவன் சுற்றியுள்ள ஆரவாரங்களில் மனத்தைச் செலுத்தாது காரியமே கண்ணாய் இருக்கிறானோ - எவன் ஒருவன் பாவங்களைக் கண்ட போது ஆமை தன் ஓட்டுக்குள் அங்கங்களை இழுத்துக் கொள்வதுபோல் மனத்தை அடக்குகிறானோ - எவன் காரியங்களின் பயனைப் பற்றி யோசிக்காமல் காரியங்களில் ஈடுபாடு கொள்கிறானோ- அவன் ஸ்திதப் பிரக்ஞன் (நிலையான ஞானம் பெற்றவன்) எனப்படுவான்' என்று பரமாத்மா சொல்லியிருக்கிறார். அத்தகைய ஸ்திதப் பிரக்ஞன் ஆவதற்குரிய அறிகுறி உனக்கு இருக்கிறது'' என்று அந்தப் பேராசிரியர் பாராட்டுக்களைப் பொழிகிற போது அடக்கத்துடனும் கூச்சத்துடனும் கண்களை மூடியவாறு அமர்ந்திருந்தார் அண்ணா!

✶

கல்லூரியில் படித்துக் கொண்டு இருந்தபோது அண்ணா அவர்களுக்குப் பொடி போடும் பழக்கத்துடன், வெற்றிலை பாக்குப் போடும் பழக்கமும் வந்து சேர்ந்து கொண்டது.

மோசூர் கந்தசாமி பிள்ளை எனும் தமிழ்ப் பேராசிரியர், அண்ணா அவர்கள் எப்போதும் ஜன்னல் பக்கம் உட்கார்ந்து கொண்டிருப்பதைக் கவனித்து வந்தார். ஒரு நாள் வகுப்பு நடந்து கொண்டிருக்கும்போதே அண்ணா ஜன்னல் வழியாக வெற்றிலை பாக்கு எச்சிலைத் துப்புவதைப் பார்த்து விட்டார் பேராசிரியர்.

வகுப்பு முடிந்ததும் அவரைக் கூப்பிட்டுக் கண்டித்தார். அந்தப் பழக்கத்தை விட்டுவிடும்படி ஆணையிட்டார்.

''ஐயா, உண்மையை ஒளிக்காமல் சொல்லட்டுமா?''

''சொல்லு, அண்ணாத்துரை!''

''என்னால் அந்தப் பழக்கத்தை விட முடியாது. பலமுறை முயன்று பார்த்தேன். முடியவில்லை. மன்னித்து விடுங்கள்.''

பேராசிரியர் அண்ணாவின் வெள்ளையுள்ளத்தை-உண்மையைப் பயப்படாமல் கூறும் ஆண்மையைக் கண்டு புன்னகை பூத்தார்.

✶

கல்லூரி விடுமுறை விட்டதோ இல்லையோ உடனே காஞ்சிபுரத்திற்குப் பஸ் ஏறி விடுவார் அண்ணா.

ஒவ்வொரு கல்லூரி விடுமுறைக்கும் அவர் வீடு சென்ற போது ஒரு மாற்றத்தைக் கூர்ந்து கவனித்து வந்தார்.

ஏழை எளிய குடும்பம் ஆனதால் அண்ணாவின் கல்லூரிச் செலவை அந்தக் குடும்பம் தாங்க முடியவில்லை. ஆகவே, தொத்தா தான் அணிந்திருந்த ஒவ்வொரு நகையாக அடமானம் வைத்து விட்டு அந்தப் பணத்தை அண்ணாவின் கல்லூரிச் செலவுக்குப் பயன் படுத்தி வந்தார்.

கல்லூரி விடுமுறையில் வீட்டிற்குச் சென்றிருந்த அண்ணா - தன்னை அருமையாக வளர்த்த தொத்தாவின் கழுத்தில் நகையே இல்லாதது கண்டு கலங்கிப் போய் விட்டார்.

''தொத்தா..நான் கல்லூரிக்கு இனிப் போகப் போவதில்லை.''

பதறிப் போய் ''ஏன்..ஏன்..துரை! இப்படிச் சொல்றே'' என்று தொத்தா கேட்டார்.

''பின்னே என்ன?..நானும் தான் பார்த்துக்கிட்டு இருக்கேன். உங்க நகைகளை வித்து என்னைப் படிக்க வைக்கிறீங்க! வீட்டை யெல்லாம் வறுமையாக்கி விட்டு நான் படிக்க வேண்டாம்!''

''அப்படிச் சொல்லாதே, அப்பா; நகை இருக்கும்; போகும்;, நீ படிச்சுச் சம்பாதிக்கிறபோது தானாக வரும்! எங்களுக்கு என்ன சொத்து இனி வேணும்? நீயும் உன் படிப்பும் தான் எங்க சொத்து! எவ்வளவு கஷ்டப்படுகிறோம் என்று தெரிஞ்சுகிட்டு நீ படிச்சாப் போதுமப்பா!'' என்று தொத்தா பேசியதைக் கேட்டுக் கண்ணீர் மல்கி நின்ற அண்ணா - அன்றிலிருந்து படிப்பில் அதி தீவிரக் கவனம் செலுத்தினார்.

கல்லூரி வாலிபர்கள் பொழுது போக்கிலும் விளையாட்டிலும் ஈடுபடுவதைப் பார்த்துச் சபலமேற்படுகிற போதெல்லாம் அண்ணா 'தொத்தாவின் நகைகள் அடமானத்தில் இருக்கின்றன' என்பதைப் பற்றியும் வெறுங் கழுத்தோடு தொத்தா இருக்கிற காட்சியையும் நினைத்துக் கொள்வார்.



கல்லூரிச் செலவு அதிகமாகிறது என்ற காரணத்தாலும், அண்ணாவுக்குச் சௌகரியமாக இருக்கட்டும் என்ற காரணத்தாலும் தொத்தா சென்னைக்கே குடி வந்தார். பெத்துநாயக்கன் பேட்டைப் பகுதியில் வாடகை வீட்டில் குடியிருந்தார்கள்.

அந்த வீடு பல குடித்தனங்கள் இருந்த பெரிய வீடாகையால் - குழந்தைகளும் குட்டிகளும் ஏராளமாக இருந்தன. அண்ணா படிப்பதற்கேற்ற சூழ்நிலை அங்கில்லை. இருந்தாலும், அண்ணா எல்லாவற்றையும் சகித்துக் கொண்டே படிக்கத் தொடங்கினார்.

குழந்தைகளும் பெரியவர்களும், பேசி நடந்து ஓய்ந்து தூக்கத்தில் விழும் காலம் வரை அண்ணா அவர்கள் தமது குடும்பத்தாருடன் பேசிக் கொண்டிருப்பார்.

இரவு 12 மணியாகும். எல்லோரும் அயர்ந்து தூங்கி விடுவார்கள். எங்கும் அமைதி நிலவும். அப்போது படிக்க உட்காருவார் அண்ணா.

படித்துக் கொண்டே இருப்பார். விடியற்காலை நான்கு அல்லது ஐந்து மணி வரை படிப்பார்.

வறுமையின் காரணமாகத் தொடக்க காலத்தில் ஏற்பட்ட இந்தப் பழக்கம் அண்ணாவின் கடைசி காலம் வரை இருந்தது.



கல்லூரியில் அண்ணா அவர்கள் 'இண்டர்' வகுப்புப் படிக்கிற போது அந்த வகுப்பு ஆங்கில ஆசிரியர் ஒரு பொருளைப் பற்றி எழுதுமாறு வகுப்பு மாணவர்கள் அனைவரையும் கேட்டுக் கொண்டார்.

இரவில் மாணவர்களுடைய கட்டுரைகளைத் திருத்த உட்கார்ந்த ஆசிரியர் அண்ணாவின் கட்டுரையைப் பார்த்ததும் திகைத்துப் போய் விட்டார்.

தான் இதுவரை கேட்டறியாக் கருத்துக்கள் கூட அழகான ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருப்பது கண்டு அயர்ந்து போனார்.

மறு நாள் அண்ணாவைத் தனியாக அழைத்து ''அண்ணாதுரை! நீ எழுதிய கட்டுரையில் பல அரிய விஷயங்கள் இருக்கின்றனவே. எந்தெந்தப் புத்தகங்களைப் பார்த்து எழுதினாய்?'' என்று கேட்டார்.

அண்ணா மிகவும் பணிவாக ''சார்! அந்தக் கட்டுரை எந்தப் புத்தகத்தையும் பார்த்து எழுதவில்லை. நானாகவே என் சொந்தக் கருத்துக்களைக் கூறியிருக்கிறேன்'' என்றார்.

ஆச்சரியக் கடலில் மூழ்கிய ஆசிரியர், ''அண்ணாதுரை! எதிர்காலத்தில் நீ ஒரு தலை சிறந்த எழுத்தாளனாக

விளங்குவாய்'' என்று ஆசிர்வதித்தார்!

✶

கல்லூரி நாட்களில் அண்ணுவைக் கவர்ந்தவர் லண்டன் பேராசிரியர் லாஸ்கி.

அந்த லாஸ்கியின் கல்லூரியில் படித்து விட்டுப் பச்சையப்பன் கல்லூரிக்கு வந்து பணியாற்றியவர் பேராசிரியர் சி. டி. ராஜேஸ்வரன்.

அவரிடம் வகுப்பிலும் தனிமையிலும் விவாதித்து லாஸ்கியின் கருத்துக்களை முழுவதும் அறிந்து கொண்டார் அண்ணு.

''நான் லாஸ்கியின் வழி வழி வந்த மாணவன்'' என்று பெருமையோடு அண்ணு கூறிக் கொள்வார்.

✶

எழுதும் போது சொந்தக் கருத்துக்களை எழுதிஞலும் ஏராளமான புத்தகங்களைப் படிப்பார் அண்ணு!

தொடக்க காலத்தில் பண்டிட் ஆனந்தம் சென்னையில் நடத்தி வந்த நூலகத்திலும், பல்கலைக் கழக நூலகத்திலும், செயிண்ட் சேவியர் தெருவில் இன்றும் இருந்து வரும் மாநகராட்சி நூலகத்திலும் அண்ணு தனது நேரத்தைச் செலவழிப்பார்.

கல்லூரிப் படிப்பு முடிந்து அரசியலில் புகழ் பெறும் காலம் வரை கன்னிமாரா நூலகம் அவருக்கு முழு நேர ஓய்விடம். ஏறக்குறைய அங்கிருந்த நூல்கள் அனைத்தையுமே படித்து முடித்தவர் அண்ணு.

✶

கல்லூரியில் இண்டர் வகுப்பு முடிந்து குடும்பத்திலுள்ள வசதிக் குறைவு காரணமாக அண்ணு தமது படிப்பைத் தொடருவதில்லை-என்று முடிவு செய்து விட்டார்.

இந்தச் செய்தி அன்றைய பச்சையப்பன் கல்லூரி முதல்வர் சின்னத் தம்பிப் பிள்ளையவர்களின் காதில் விழுந்தது. அண்ணுவை அழைத்து வரச் சொன்ஞர்.

''அண்ணுதுரை! நீ படிப்பைத் தொடரப் போவதில்லை என்று சொன்ஞயாமே?''

''ஆமாம், சார்! குடும்ப நிலை அப்படி!''



கல்லூரி பட்டதாரி உடையில் அண்ணு!

''இண்டரில் பஸ்ட் கிளாசில் பாஸ் செய்த நீ யெல்லாம் இப்படிப் படிப்பைத் தொடராது விட்டால் எப்படி? நீ பி. ஏ. ஆனர்ஸ் படிப்பைத் தொடர்ந்து படிக்க வேண்டும்.''

''பி. ஏ. ஆனர்ஸ் படிப்பதாஞல் மூன்று வருடம் படிக்க வேண்டும். அவ்வளவு வசதி இல்லை.''

சிறிது யோசித்தார் முதல்வர். ஏதோ முடிவு எடுத்தவர் போல் பேசத் தொடங்கிஞர்:

''சரி;...அந்த மூன்று வருடங்களுக்குரிய புத்தகச் செலவை நான் ஏற்றுக் கொள்கிறேன். அப்போதாவது... படிப்பாயா?''

''சரி'' என்று தலையசைத்தார் அண்ணு.

''உன்னைப் போன்ற மாணிக்கங்கள் இப்படி இடைவெளியில் படிப்பை நிறுத்துவது தகுமா? நன்ருகப் படி... போ!'' என்று ஆசிர்வதித்தார் முதல்வர்.

எந்த அண்ணுவுக்காக லட்சோபலட்சம் மக்கள் தங்கள் ஐஸ்வரியங்களை யெல்லாம் கொட்டித் தரத்

தயாராக] இருந்தார்களோ அந்த அண்ணா வறுமை காரணமாகக் கல்லூரி முதல்வரின் கருணையினால் புத்தகங்கள் பெற்றுத் தமது படிப்பைத் தொடங்கினார்.

✶

கல்லூரி நாட்களில் அவர் கல்லூரி மேடையில் ஏறிச் சொற்பொழிவுகள் செய்வார். கல்லூரிப் பொருளாதார மன்றத்தின் செயலாளராகவும் இருந்தார்.

✶

கல்லூரியில் படிக்கும் போது தான் அண்ணா அவர்கள் ராணி அம்மையாரைத் திருமணம் செய்து கொண்டார்.

பிற்காலத்தில் சுயமரியாதை இயக்கத் தளபதியாக இருந்தவர்—சுயமரியாதைத் திருமணச் சட்டம் கொண்டு வந்த முதலமைச்சராக இருந்தவர்—ராணி அம்மையாரைப் பழைய சம்பிரதாய முறைப்படிதான் திருமணம் செய்து கொண்டார்.

✶

அரசியல் - வரலாறு - பொருளாதாரம் ஆகிய பாடங்களில் பி. ஏ. ஆனர்ஸ் பட்டம் பெற்றார் அண்ணா.

பரீட்சை எழுத வேண்டிய நேரத்தில் சிறிது உடல் நலம் குன்றிய தாலும் படிப்பதற்கு வசதியற்ற நிலை அவர் குடியிருந்த வீட்டில் இருந்ததாலும் முதல் வகுப்பில் தேற வேண்டிய அவர் இரண்டாம் வகுப்பில்தான் தேறினார்.

✶

கல்லூரிப் படிப்பை முடித்ததும் அண்ணா எல்லோரையும் போலவே வேலை தேடும் படலத்தில் இறங்கினார்.

- ✶ காஞ்சி நகராட்சியில் கிளார்க் வேலை.
- ✶ காஞ்சிபுரத்துப் பள்ளிக் கூடத்தில் (தனியாருடையது) ஆசிரியர் வேலை.
- ✶ சென்னையில் கோவிந்தப்ப நாயக்கன் பள்ளியில் ஆசிரியர் வேலை.

—என்று சிறிது சிறிது காலம் வேலை பார்த்தார்.

அப்போதுதான் 'சண்டே அப்சர்வர்' என்ற ஆங்கிலப் பத்திரிகையின் ஆசிரியரான பாலசுப்பிரமணியம் அவர்களின் நட்பு அண்ணாவுக்குக் கிடைத்தது.

இன்று உலகிலுள்ள எல்லாத் தமிழர்களாலும் 'அண்ணா' என்று அழைக்கப்படும் அவர், தன் வாயால் 'அண்ணா' என்று அழைத்த ஒருவர் சண்டே அப்சர்வர் பாலசுப்பிரமணியம் அவர்கள்தான்.

✶

''அண்ணாதுரை!''

''என்ன - அண்ணா?''

''ஒரு இடத்திற்குப் போக வேண்டும். நல்ல டிரஸ்ஸாக இருந்தால் போட்டுக் கொண்டு வா!''

'இதுதான் அண்ணா - என்னிடமுள்ள நல்ல டிரஸ்!''

ஒரு கணம் ஏற இறங்கப் பார்த்த பாலசுப்பிரமணியம், அண்ணா இவ்வளவு வறுமையில் இருக்கிறாரே என்று மனம் கலங்கிப் போனார்.

ஆனால், உண்மை என்ன தெரியுமா? நல்ல 'டிரஸ்' இருந்தும் ஆடம்பரமாக இருக்கக் கூடாது என்ற கருத்தில் தான் அண்ணா அவ்விதம் கூறினார்.

''சரி; என் டிரஸ்ஸைப் போட்டுக் கொள்.''

''வேண்டாம், அண்ணா! உங்களுடையது எனக்குத் 'தொள தொள' என்றிருக்கும்.''

நெற்றியைப் பிடித்துக் கொண்டு ''ஓ! அப்பா!... நான் சொல்வது உனக்குப் புரிய மாட்டேன் என்கிறது. நாம் பொப்பிலி ராஜாவைப் பார்க்கப் போக வேண்டும்'' என்றார் பாலசுப்பிரமணியம்.

''ராஜாவையா?''

''ஏன், இவர் ஒன்றும் ஜார்ஜ் மகராஜா அல்ல; ஜஸ்டிஸ் கட்சி ராஜா!''

''அங்கே எதற்குப் போக வேண்டும்? நான் ஏன் வர வேண்டும்?''

''நான் சொல்வதைக் கொஞ்சம் கேளேன். பேசாமல் என்னோடு வா!''

பொப்பிலி ராஜாவைச் சந்தித்து விட்டு வந்த பிறகு அண்ணா பாலசுப்பிரமணியத்தைப் பார்த்துக் கேட்டார்:

''ஏண்ணா - ராஜாவைப் பார்க்கலாம் வா என்று கூறி அழைத்துக் கொண்டு போய் ஜஸ்டிஸ் கட்சிக் காரனாக ஆக்கி விட்டாயே!''

''ஏன் - உனக்கு ஜஸ்டிஸ் கட்சி பிடிக்காதா?''

''பிடிக்கும். ஆனால், யோசித்துச் செய்யலாம் என்றிருந்தேன்.''

''உன்னை யோசிக்க விட்டால் என்ன ஆகும் என்று எனக்குத் தெரியும். சோஷலிசம் பேசும் சிங்காரவேலரையே ஜபித்துக் கொண்டிருக்கும் நீ - வழிமாறிப் போகக் கூடாது என்பதற்காகத்தான் இப்படிச் செய்தேன்.''

இதற்குப் பிறகு ஜஸ்டிஸ் கட்சிப் பேச்சாளராக மாறிய அண்ணா அவர்கள் முதன் முதலாகப் பொதுமேடையேறிக் கட்சிப் பிரசாரம் செய்தது ஆந்திராவிலுள்ள குண்டூர் என்னும் ஊரில்! அந்த ஊரில் நடந்த கூட்டத்திற்குத் தலைமை வகித்தவர் - கிருஷ்ணய்ய சவுத்திரி.

ஜஸ்டிஸ் கட்சிப் பேச்சாளராக அண்ணா அவர்கள் இருந்தாலும், அவர் மனம் ஏனோ தொழிற் சங்கத்தின் பக்கமே இருந்தது.

அப்போது தொழிற் சங்க இயக்க வாதியாகவும், பின்னர் மேயராகவும் இருந்த பாசுதேவுடன் சேர்ந்து கொண்டு சிறு சிறு தொழிற் சங்கங்களை நடத்தி வந்தார். 'நவயுவன்' என்ற பத்திரிகையிலும் ஆசிரியராகப் பணியாற்றினார்.

✶

இரண்டாவது வட்டமேஜை மாநாடு முறிந்து முடிவுற்ற நேரம். இந்தியப் பிரதிநிதிகள் தோல்வியை ஒப்புக் கொண்டு திரும்பி வந்தனர்.

அந்த இந்தியப் பிரதிநிதிகளில் ஒருவராகச் சென்றிருந்தவர் சர். ஏ. ராமசாமி முதலியார்.

அவரும் அண்ணா அவர்களும் ஒரு விழாவில் கலந்து கொண்டனர்.

அந்த விழா, இங்கிலாந்து சென்று வெற்றி பெற்று வந்த கிரிக்கெட் குழுவினரைப் பாராட்டும் விழா.

அண்ணா அவர்கள் அழகான ஆங்கிலத்தில் பேசத் தொடங்கினார்கள்.

வெற்றி பெற்ற கிரிக்கெட் வீரர்களையும்,தோல்வியுற்ற அரசியல் வாதிகளையும் ஒப்பிட்டு ''அரசியல் உலகத்து விவேகிகள் நமக்குத் தேடித் தராத வெற்றியை இந்திய நாட்டு வீரர்களாவது பெற்றுத் தந்தனரே'' என்று குறிப்பிட்டார்.

அப்போது அண்ணாவின் பெயர் அவ்வளவு பிரபலமாகாத நேரம். அவரது அழகு ஆங்கிலத்தையும், நாசூக்கான தாக்குதலையும் கண்டு வியந்த சர். ஏ. ராமசாமி முதலியார் ''யார் இவர்?'' என்று கேட்டு விசாரித்து அறிந்து கொண்டார்.

'வெண்கலக் குரலில் பேசும் தங்கக் கிளி' என்று மேலை நாட்டவராலேயே புகழப்பட்ட சர் ஏ. ஆர்., கூட்டம் முடிந்ததும் அண்ணாவை அழைத்து, அண்ணாவைப் பாராட்டி ''ஆங்கிலப் பேச்சில் எனது வாரிசாக நீதானிருப்பாய்'' என்று ஆசி கூறினார்.

✶

ஜஸ்டிஸ் கட்சியில் அண்ணா சேர்வதற்கு முன் தொழிலாளர் இயக்கங்களில் பங்கு பெற்றிருந்த காலம்.

விம்கோ தொழிலாளர் சங்கம், துறைமுகத் தொழிலாளர் சங்கம் ஆகியவற்றில் அண்ணா அங்கம் வகித்துக் கொண்டிருந்தார்.

ஜபல்பூரில் நடைபெற்ற ஒரு மாநாட்டிற்குப் பிரதிநிதியாக அண்ணா அவர்கள் சென்றார்.

இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸ், இந்தியத் தேசியத் தொழிற்சங்கக் காங்கிரஸ் ஆகிய இரு தொழிற் சங்கங்களை இணைக்க வேண்டும்; ஒற்றுமைப்படுத்த வேண்டும் என்பதற்காகக் கூட்டப்பட்ட மாநாடு அது.

அந்த மாநாட்டில் ஒற்றுமையை வலியுறுத்திப் பேசினார் அண்ணா. அவருடைய அடுக்கடுக்கான வாதங்களையும், அழகு மிகுந்த ஆங்கில நடையையும் கண்டு மாநாட்டினர் வியந்தார்கள்.

மாநாடு முடிந்ததும் ஜம்னுதாஸ் மேத்தா என்பவர் அண்ணாவை வெகுவாகப் புகழ்ந்து குழுவிலும் முக்கியப் பொறுப்பேற்குமாறு வலியுறுத்தினார்.

பொதுக்கூட்டத்தில் ஈ. வெ. கி. சம்பத்துடன் அண்ணா.



,'எனது மாநிலத்தில் நான் ஆற்ற வேண்டிய பணிகள் நிரம்ப உள்ளன. மன்னிக்க வேண்டும்'' என்று கூறி விட்டுத் திரும்பினார் அண்ணா.

*

கோவை மாவட்டத்திலுள்ள காங்கயம் என்ற சிற்றூர். 1934-ம் ஆண்டு.

அங்கு செங்குந்தர் மாநாடு நடக்கிறது. யாரோ ஓர் இளைஞர் வேக வேகமாக—அடுக்குச் சொல் கலந்து வர-சுழலும் காற்றாடியைப் போல் சுழன்று பேசுகிறார். அந்தப் பேச்சில் மயங்கிப் போய், பெரியார் அமர்ந்திருக்கிறார். அவரது காலடியில் அமர்ந்திருந்த சங்கரய்யா என்ற தொண்டரும் மெய்ம்மறந்து உட்கார்ந்திருக்கிறார்.

விழுந்து கொண்டே இருந்த நீர் வீழ்ச்சி திடீரென்று நின்றது போல்—எழுந்து வந்த வீணைகானம் இடையில் நின்று போனது போல்-கூவிக் கொண்டிருந்த குயில் திடீரென எழுந்து பறந்து விட்டது போல் பேச்சை முடித்துக் கொண்டு அந்த வாலிபர் இறங்கிப் போய் விட்டார்.

தன் நினைவுக்கு வந்த பெரியார்—பக்கத்திலிருந்த சங்கரய்யாவைக் கூப்பிட்டு ''அந்த வாலிபன் யார் என்று விசாரித்து, கூட்டிக் கொண்டு வா!'' என்று கட்டளை யிட்டார்.

வாரிச் சுருட்டி எழுந்தவாறு அந்த வாலிபரை நோக்கி ஓடினார் சங்கரய்யா,

அந்த வாலிபரோ — 'விறு விறு' வெனப் பந்தயக் குதிரைமாதிரிநடந்து எங்கோ கூட்டத்தில் மறைந்து விட்டார். பெரிய ஏமாற்றமாகப் போய் விட்டது சங்கரய்யாவுக்கு!

பெரியார் கோபப்படுவாரே என்று திகைத்து நின்ற சங்கரய்யா, கூட்டத்து நிர்வாகிகளிடம் மெதுவாக அந்த வாலிபரின் பெயரைக் கேட்டுத் தெரிந்து கொண்டு அந்தப் பெயரை யாவது பெரியாரிடம் சொல்வோம் என்று பெரியாரை நோக்கி வந்தார்.

''எங்கே அவர்?''-சங்கரய்யாவைப் பார்த்ததும் பெரியார் கேட்டார்.

''அவர்... அவர்... கூட்டத்திற்குள் எங்கேயோ போய் விட்டார். ஏ... அப்பா! என்னமாய் நடக்கிறார்! குதிரை மாதிரி ஓடுகிறாரே!'' என்று பெருமூச்சு விட்ட சங்கரய்யா ''ஐயா! அவர் பேரைக் கேட்டுத் தெரிந்து கொண்டேன்'' என்றார்.

''மகாப் பெரிய புத்திசாலி. அதுக்கு அங்கே போகணுமா என்ன? இங்கிருந்தே கூட்டத் தலைவரைக் கேட்டால் சொல்கிறார்!'' என்று சிறிச் சிறி விழுந்தார் பெரியார்.

''சரி; என்ன பேரு?''—என்று கேட்டார் பெரியார்.

பெரியாரின் கோபத்தால் திணறிப் போன சங்கரய்யா பெயரை மறந்து விட்டார், அந்தக் கணத்தில்!

''என்னமோ...... துரையாம்!''

''நாசமாப் போச்சு! போயும் போயும்... உன்னை அனுப்பினேனே!... நானே இங்குள்ள கூட்டத் தலைவரைக் கேட்டுத் தெரிந்து கொண்டேன். அவரு பேரு அண்ணாதுரை!''

திடீரென்று ஞானம் பெற்றவர் போல் சங்கரய்யா ''ஆமாங்க...... ஆமாங்க...... அண்ணாதுரை! அண்ணாதுரை!'' என்றார்.

''சரி, சரி; அவரு திருப்பூர் கூட்டத்துக்கும் வருகிறாராம். ஏமாந்து கொட்டாவி விட்டுவிடாமல் அவரைக் கூட்டிக்கிட்டு வா!'' என்று ஆணை யிட்டார் பெரியார்.

திருப்பூர் கூட்டத்திலும் அண்ணா பேசினார். அவர் பேசி முடித்ததுமே 'கையும் மெய்யுமாக' சங்கரய்யா அவரைப் பிடித்து விட்டார்.

''ஐயா உங்களைப் பார்க்கணுங்கிறார்.''

''............''

''ஈ. வி. ஆர். உங்களைப் பார்க்கணுங்கிறார்.''

''ஓ! சரி... அதற்கென்ன! இப்பவே பார்ப்போமே!''

''சாப்பிட்ட பிறகு பார்க்கலாம்.''

''சரி; சரி.''

மதியம் மாநாட்டில் நடந்த விருந்துக்குப் பிறகு குள்ளமான உருவத்துடன், அழகிய மீசையுடன், ஜிப்பாவும் நான்கு முழ வேட்டியும் சிரித்த முகமுமாய் கை கூப்பியவாறு அடக்கமாக வந்தார் அண்ணா.

''வாங்க! வாங்க!'' என்று வரவேற்றார் பெரியார்.

''உங்க பேச்சு ரொம்ப நல்லாயிருந்தது. நாங்க கரடுமுரடாச் சொல்றதைக் கண்ணியமா வண்ணமாகச்



**ஓய்வு நேரத்தில் அண்ணா! அருகிலிருப்பவர்கள் சி. வி. ராசகோபால், இரா. செழியன், வி. பி. ராமன், அ. பொ. அரசு.**

சொன்னீங்க! ஆமா... என்ன படிச்சிருக்கீங்க!''

''பி. ஏ. ஆனர்ஸ் பரீட்சை எழுதியிருக்கேன்.''

''நல்லது; நல்லது! இனி என்ன செய்யப் போறீங்க?''

''அரசியலில் ஈடுபடலாமென்று...''

''ஆமா; ஆமா! அதுதான் நல்லது! படிச்சுட்டு இப்படிப் பேசறவங்க வேலைவெட்டின்னு போயிட்டா படிப்புக்கும் படிப்பும் போச்சு; பேச்சுக்குப் பேச்சும் போச்சு!... என்னங்க...... பொன்னம்பலம்! ஐயாவை ஈரோடுக்கு வரச் சொல்லுங்க'' என்றார் பெரியார்.

தானே அழைப்பதற்குப் பதிலாக இப்படி இன்னொருவரை விட்டு அன்பாக அழைப்பது பெரியாரின் பழக்கம்.

''வர்றேனுங்க'' என்று அடக்கமாகப் பதிலளித்தார் அண்ணா!

ஈரோட்டில் அண்ணாவுக்குப் பெரியாரின் தத்துவங்கள் அடங்கிய புத்தகங்கள் தரப்பட்டன. அவற்றை எடுத்துக் கொண்டு அண்ணா சென்னைக்குப் பயணமானார்.

ஜஸ்டிஸ் கட்சிப் பேச்சாளராக அண்ணா அவர்கள் இருந்தபோதுதான் அவர் சென்னை மாநகராட்சி கவுன்சிலர் பதவிக்குப் போட்டி யிட்டார். அவரை எதிர்த்து நின்றவர் காங்கிரஸ்காரர்.

ஒரு காலத்தில், மாநகராட்சியையும், தமிழக அரசையும் பிடிக்கத் தகும் கட்சியை வளர்த்த அண்ணா அன்றைய தினம் ஒரு சாதாரண கவுன்சிலர் பதவிக்கு நின்று தோற்றார்.

தேர்தலில் அவர் தோற்றார் என்றாலும் தேர்தல் பணிகளிலேயே புதிய முறைகளையும், நாகரிகமான வழிகளையும் புகுத்தினார்.

அந்தத் தேர்தலில்தான் தமிழ்த் தென்றல் திரு. வி. க. அவர்களுக்கும், அண்ணா அவர்களுக்கும் சம்வாதம் ஏற்பட்டது.

திரு.வி.க. ஒரு கூட்டத்தில் பேசினார். ''அண்ணாதுரை அவர்கள் காங்கிரஸ் கெட்டுவிட்டதாகக் கூறுகிறார். ஊருக்கு நடுவே எழில்மிக்க நந்தவனம் இருக்கிறது. அதில் புகுந்த

நாய் ஒன்று செத்து விட்டது. நந்தவனத்தில் ஒரு நாய் செத்து விட்டது என்பதற்காக நந்தவனத்தையே அழிப்பதா? அது போல் காங்கிரசில் சில கேடுபாடுகள் இருக்கலாம். அதற்காகக் காங்கிரசையே அழிப்பதா?'' என்று கேட்டார்.

அடுத்த நாள் அண்ணா அவர்கள் கூட்டம் போட்டு, திரு.வி.க.வின் பேச்சுக்குப் பதில் சொன்னார்:

''தமிழ்த்தென்றல் அவர்கள் இலக்கியத்தில் மிகப் பெரியவர்கள். ஆனால், அவர் கூட ஒரு தவறு செய்து விட்டார். காங்கிரசைப் பற்றிச் சொன்ன உவமை சரியில்லை. நந்தவனத்தில் நாய் நுழைந்தது; இறந்தது என்றார். நல்ல நிலையிலுள்ள நாய்-நல்ல நிலையிலுள்ள நந்தவனத்தில் நுழைந்தால் வெளியே வந்திருக்கும்! வெளியேற முடியாதபடி நந்தவனம் இருந்தது. அவ்வளவு கொடிய நச்சுப் பூக்கள் அங்கே இருக்கின்றன. நாய்க்கே இந்தக் கதி என்றால், மனிதர் நுழைய முடியுமா? ஆகவே, அந்த நச்சுப் பூக்கள் உடைய நந்தவனத்தை அழித்து நல்ல பூக்கள் மலரும் நந்தவனத்தை நாம் அமைக்க வேண்டும்'' என்றார் அண்ணா.

அண்ணாவின் திறமை மிக்க பேச்சைக் கண்டு வியந்தார் தமிழ்த் தென்றல்.

'எதிர்க்கட்சியிலிருந்தாலும் இவனே தமிழின் மாலுமி' என்று அவரது தமிழ் உள்ளம் ஆடியது. அதுவே பிற்காலத்தில் கீழ்க்காணும் வெண்பாவாக உருவெடுத்தது:

''அண்ணா துரையென்னும்
அண்ணல் தமிழ்நாட்டு
வண்ணான் அழுக்கெடுப்பில்
வாய்மொழியில் பண்ணவான்
சிற்பன்(எ)ழுத்தோவியத்தில்
செல்வரசு நாவாயின்
அற்புதஞ் சூழ்
மாலுமியென் றூடு.''

✶

மாநகராட்சித் தேர்தலில் அண்ணா கையாண்ட முறைகளே பிற்காலத்தில் நல்ல உருவெடுத்தன.

முன்பெல்லாம் பொதுக் கூட்டம் அதிகம் இருக்காது; அபேட்சகர் ஒவ்வொரு வீடாகச் சென்று மக்களைச் சந்திப்பார்; தேர்தல் நடக்கும்! அவ்வளவுதான்!

ஆனால், அண்ணா அவர்கள் தான் தேர்தல் பிரசாரக் கூட்டங்களுக்கு ஒரு மகிமையை ஏற்படுத்தினார்.

பகலில் ஒவ்வொரு தெருவின் திருப்பத்திலும் ஒரு 'ஸ்டூலை'ப் போடுவார். அதன் மேல் ஏறி நின்று கொண்டு ஓட்டுக் கேட்பார்.

இரவில் பொதுக்கூட்டம் நடக்கும். ''நான் கவுன்சிலராகத் தேர்ந்தெடுக்கப்பட்டால், இன்னின்ன செய்வேன்'' என்று பேசுவார்.

அண்ணாவை எதிர்த்து நின்றவருக்கு அவ்வளவாகப் பேசத் தெரியாது. அண்ணாவின் பேச்சாற்றலைக் கண்டு நடுங்கிப் போன அவர்—காங்கிரசின் மிகப் பெரிய பேச்சாளராக அன்றைய தினம் விளங்கிய சத்தியமூர்த்தி, செங்கல்வராயன் ஆகியோரைக் கெஞ்சிக் கூத்தாடி அழைத்து வந்து பேசச் செய்வார்.

கட்சி—தேர்தல் என்றிருந்தாலும் மனிதரை மனிதர் மதிக்கும் பண்பையும், நட்பையும் வளர்த்தவர் அண்ணா. அந்தப் பண்பு வளர வேண்டும் என்று எதிர்பார்த்தவர்.

பகலில் ஓட்டுக் கேட்டுவிட்டு இரவில் தேர்தல் கூட்டத்திற்குச் செல்வதற்கு முன் அவர் சிற்றுண்டி அருந்துவது, காங்கிரஸ்காரரான செங்கல்வராயன் வீட்டில்தான்!

✶

மாநகராட்சித் தேர்தல் முடிவுகள் வந்த நேரம். அண்ணா தோற்று விட்டார். அவருக்காக உழைத்த நண்பர்கள் அவரைத் தேடி வீட்டிற்குப் போனார்கள். அவர் அங்கே இல்லை. அவர் அடிக்கடி செல்லும் நூலகத்திற்குச் சென்று தேடினார்கள். அங்கேயும் அவர் இல்லை. பதறிப் போனார்கள் நண்பர்கள். ''அண்ணா-தோல்வி வரும் என்று தெரிந்து எங்காவது போய் விட்டாரா?'' என்று பீதியுடன் அவரைத் தேடத் தொடங்கினார்கள்.

அண்ணா அவர்களோ — ரீகல் தியேட்டர் (தற்போது பத்மனாபா தியேட்டர்)ஸில் பட்டினத்தார் படம் பார்த்து விட்டு வெளியே வந்தார்.

''என்ன, அண்ணா! தேர்தல் முடிவு வந்திருக்கிறது. உங்கள் பாட்டுக்கு சினிமா பார்க்க வந்திட்டீங்களே!'' என்று கோபித்துக் கொண்டார்கள்.

''எலெக்ஷன் சுரம் எல்லாம் எலெக்ஷனேடு சரி; அதைப்பற்றி அப்புறம் கவலைப்படக் கூடாது. மக்களுக்கு நாம் அறிந்ததைச் சொன்னேம்; அவர்கள் தமக்குப் பிடித்தவரைத் தேர்ந்தெடுத்தார்கள். அதோடு எலெக்ஷனை மறந்துவிட வேண்டும்'' என்று அண்ணு அவர்கள் சொன்ன விளக்கத்தைக் கேட்டுச் சிலையாகப் போனுர்கள், நண்பர்கள்.

✶

அண்ணு அவர்கள் எளிமையின் உருவமாகத் தொடக்க காலத்திலிருந்தே விளங்கினுர்.

அவர் பணியாற்றிய கட்சியோ ஜரிகைத் தலைப்பாகைக்காரர்களின் கட்சி எனப்படும் ஆடம்பரம் மிகுந்த ஜஸ்டிஸ் கட்சி.

இருப்பினும் அண்ணு அவர்கள் உடையிலும் தோற்றத்திலும் எளிமையுடனேயே விளங்கினுர்.

ஒரு முறை பொப்பிலி அரசருடன் அண்ணு ஆந்திரச் சுற்றுப் பயணம் செய்வதற்காக அழைக்கப்பட்டிருந்தார்.

ரயில் நிலையத்தில் பொப்பிலி அரசர் இவருக்காகக் காத்திருந்தார்.

அண்ணுவோ சாதாரண வேட்டி, ஜிப்பாவுடன் போனுர். அதைப் பார்த்ததும் பொப்பிலி அரசருக்குக் கோபம் கோபமாக வந்தது.

''நல்ல டிரஸ் இல்லையா?''

அண்ணு பேசாமல் நின்ருர்.

உடனே, பொப்பிலி அரசர் பக்கத்திலிருந்த செயலாளரை அழைத்தார்.

''நாளைக்கே இவருக்கு இரண்டு 'செட்' நல்ல டிரஸ் வாங்கித் தந்து உடனே என்னிடம் அனுப்பு'' என்று கூறி விட்டுப் போய் விட்டார்.

புது 'டிரஸ்'கள் வந்தன. ஆனல், அதை அண்ணு போட்டுக் கொள்ளவில்லை. ஒரு 'டிரங்க் பெட்டி' வாங்கி அதில் 'டிரஸ்'களை வைத்து எடுத்துக் கொண்டு புறப்பட்டார், சுற்றுப் பயணத்திற்கு!

பொப்பிலி அரசரைச் சந்திக்கும் இடங்களில் மட்டும் 'டிரஸ்'ஸைப் போட்டுக் கொள்வார்.

மற்ற இடங்களில் எளிய உடையையே அணிந்து கொள்வார்.

பயணம் முடிந்து ஊர் திரும்பியதும் அந்த டிரஸ்களைத் தூக்கி மூலையில் போட்டவர், அதை மறுபடியும் பயன்படுத்தவே இல்லை. அது மட்டுமல்ல; பொப்பிலி அரசருடன் இதுபோன்ற நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதையே தவிர்த்து விட்டார்.

✶

திருச்சி கி. ஆ. பெ. விசுவநாதம் ஓர் இந்தி எதிர்ப்பு மாநாட்டைத் தொடக்க காலத்தில் மிகப் பிரமாண்டமான முறையில் நடத்தினுர்.

அந்த மாநாட்டில் கலந்து கொள்ள வந்த தலைவர்கள் எல்லோரும் ஆங்கிலத்திலேயே பேசுவார்கள். அவர்களுடைய ஆங்கிலப் பேச்சை மொழி பெயர்க்கக் குறித்த நேரத்தில் மொழி பெயர்ப்பாளர் வந்து சேரவில்லை. பதறிப் போனுர் கி. ஆ. பெ.

ஒரு வழக்கறிஞரை அணுகி ''மொழி பெயர்க்கிறீர்களா?'' என்று கேட்டார்.

''ஐயோ... இவர்கள் பேச்சையா? நம்மால் முடியாது!'' என்று கை விரித்து விட்டார். ஒன்றும் புரியாமல் கி.ஆ.பெ. திகைத்தார்.

அப்போது கூட்டத்திலிருந்த சிலர் ''இதோ; இங்கொரு இளைஞர் இருக்கிருர். நன்ருக மொழி பெயர்ப்பார்'' என்ருர்கள்.

''புதிதாக ஆட்களை விட்டால் என்ன ஆகுமோ?'' என்று பயந்தார் கி. ஆ. பெ.

தலைவர்களோ ''எங்கே மொழி பெயர்ப்பாளர்? எங்கே மொழி பெயர்ப்பாளர்?'' என்று அரிக்கத் தொடங்கி விட்டனர்.

வேறு வழியில்லாமல் அந்த இளைஞரை அழைத்து ''மொழி பெயர்க்கத் தெரியுமா?'' என்று கேட்டார் கி. ஆ. பெ.

''ஏதோ கொஞ்சம் தெரியும்!'' என்ருர் அந்த இளைஞர் அடக்கமாக!

'அடக்கம் இருந்தால் விஷயம் இருக்கும்!' என்பதைப் புரிந்து கொண்ட கி. ஆ. பெ., தைரியமாக அந்த இளைஞரை மொழி பெயர்க்க அனுப்பினுர்.

தலைவர்களின் பேச்சு ஆங்கில மொழியின் வெள்ளமாக இருந்தது.

மொழிபெயர்ப்பாளரின் தமிழோ— தேன் மழையாக இருந்தது. பூரித்துப் போனார் கி. ஆ. பெ.

மொழி பெயர்ப்பாளர் மேடையை விட்டுக் கீழிறங்கி வந்தார். கி.ஆ.பெ. விசுவநாதத்தைப் பார்த்து ''எப்படி மொழி பெயர்ப்பு?'' என்று குறும்பாகக் கேட்டார்.

''நன்றாக இருந்தது. கொஞ்சம் பொடியும் கலந்திருந்தது'' என்று கூறிப் பாராட்டினார் முத்தமிழ்க் காவலர் விசுவநாதம்.

அவர் பாராட்டைப் பெற்ற இளைஞர் வேறுயாருமல்ல; அறிஞர் அண்ணா அவர்களே!

✶

எப்படியாவது அண்ணாவை தமது அணியில் சேர்த்து விட வேண்டும் என்று ஈரோட்டிலிருந்தவாறே சிந்தனையில் ஆழ்ந்திருந்தார் பெரியார்.

அப்போது நடைபெறவிருந்த துறையூர் சுயமரியாதை மாநாட்டிற்கு யாரைத் தலைவராகப் போடுவது என்ற பிரச்னையை எடுத்துக் கொண்டு நண்பர்கள் பெரியாரிடம் வந்தார்கள்.

உடனே பெரியார், 'அண்ணாதுரை தான் தலைவர். உடனே தந்தி கொடுத்து ஐந்து நாளைக்கு முன்பே வரச் சொல்லி விடுங்கள். அவரைப் பார்க்க வேண்டும் போல் இருக்கிறது' என்று கட்டளை யிட்டார்.

ஐந்து நாட்களுக்கு முன்பே வந்து விட்டார் அண்ணா. கையில் ஒரு பெரிய புத்தகக் கட்டுடன் வந்து சேர்ந்தார்.

மணிக்கணக்காக ஆங்கிலத்திலும்— தமிழிலும் முன் தயாரிப்பு இல்லாமல் பேசுபவர் என்று பிற்காலத்தில் பெயரெடுத்த அண்ணா அவர்கள், அன்று, தாம் மாநாட்டில் பேசவிருந்த பேச்சை அச்சடித்துக் கொண்டு வந்தார்கள்.

பெரியார் மெதுவாக அண்ணாவிடம் தமது பத்திரிகையான 'விடுதலை'யில் பணியாற்ற வருமாறு கேட்டார். யோசித்துச் சொல்வதாக அண்ணா வழக்கம் போல் பதில் சொன்னார்.

''நீங்க எப்பவும் இப்படித்தான்! என்ன யோசனை... வெங்காயம்...... 'சட்டுபுட்டு'ன்னு ஒத்துக்க வேண்டியதுதானே!'' —என்று சலித்துக் கொண்டார் பெரியார்.

சேலம் பொதுக் கூட்டத்திற்கு வந்திருந்த அண்ணா அவர்களை மிகவும் வற்புறுத்திப் பெரியார் தமது விடுதலைப் பத்திரிகையில் பணியாற்றுமாறு செய்து விட்டார்.

✶

விடுதலையில் அண்ணா அவர்கள் **பரதன், வீரன், சௌமியன்** என்ற புனைப் பெயர்களில் பல கட்டுரைகளை எழுதி, வாலிப உள்ளங்களுக்கு வேகம் ஊட்டினார்.

விடுதலையில் வரும் தலையங்கங்களை மக்கள் விரும்பிப் படித்தனர்.

''கல்கத்தாக் காய்ச்சல்.''

''ஓமான் கடற்கரையில்.''

''ரிப்பன் மாளிகைச் சீமான்கள்.''

''வங்கம் தந்த தங்கம் மறைந்தார்'' ஆகிய தலையங்கங்கள் மிகவும் கீர்த்தி பெற்று விளங்கின.

ரிப்பன் கட்டடத்துச் சீமான்கள் என்ற கட்டுரை பெரியாருக்கு மிகவும் பிடித்து விட்டது. ஒருமுறைக்குப் பலமுறை அந்தக் கட்டுரையைப் படித்துப் பார்த்தார். அண்ணாவைப் பாராட்ட வேண்டும் என்ற எண்ணம் பெரியாருக்கு ஏற்பட்டது. அண்ணாவோ மேல் மாடியில் இருந்தார்.

தமது வயதையும், சிரமத்தையும் பொருட்படுத்தாமல் பெரியார் அவர்கள் ''அண்ணாத்துரை...... அண்ணாத்துரை......'' என்று அழைத்தவாறு மாடிப்படியில் ஏறி வந்தார் பெரியார்.

பெரியாரைக் கண்டதும் எதற்காக இவ்வளவு சிரமப்படுகிறார் என்று வியந்தார் அண்ணா.

''இவ்வளவு கஷ்டப்பட்டு ஏன் நீங்கள் வர வேண்டும்? சொல்லி அழைத்திருந்தால் நானே வந்திருப்பேனே!'' என்று அண்ணா கூறினார்.

''அண்ணாத்துரை! நீங்கள் எழுதிய ரிப்பன் கட்டடத்துச் சீமான்கள் கட்டுரை ரொம்ப... ரொம்ப நல்லாயிருந்தது. அதைப் பாராட்ட வேண்டும்போலிருந்தது. உடனே பாராட்டாவிட்டால் அந்த எண்ணம் மாறிப் போனாலும் போய்விடும். ஆகவே தான் நானே வந்து பாராட்டுகிறேன்'' என்றாராம் பெரியார்.



**அண்ணா நாடக நிகழ்ச்சி ஒன்றுக்குத் தலைமை வகித்தபோது!...**
**அருகிலிருப்பவர்கள் நெடுஞ்செழியன், அன்பழகன்.**

ஈரோட்டில் இருக்கும் போது அண்ணா அவர்கள் அடிக்கடி நாடகம் பார்க்கப் போய் விடுவார். நாடகம் சினிமா என்றால் பெரியாருக்குப் பிடிக்காது.

அதிலும் அண்ணாவுக்கு தெருக்கூத்தில் அலாதியான பிரியம். பெரியாருக்கோ அது கொஞ்சம் கூட பிடிக்காது.

ஒரு முறை ஈரோட்டில் வளையக்காரத் தெருவில் தெருக் கூத்து நடந்தது. அண்ணா அவர்சள் அதைப் பார்க்கப் போய் விட்டார்.

பெரியாரும் அண்ணாவைத் தேடிக் கொண்டு வந்துவிட்டார். ''என்னங்க, தெருக் கூத்தில் வந்து உட்கார்ந்து கொண்டீங்க!'' என்று கேட்டுக் கொண்டே பெரியார் அவர்கள் அண்ணாவின் அருகில் அமர்ந்து கொண்டார். பெரியாருக்குத் தெருக் கூத்தை விளக்கி அண்ணா கூறினார். தெருக்கூத்தை அதற்கு முன் வெறுத்த பெரியார் அதை ரசிக்கத் தொடங்கி விட்டார். தெருக் கூத்தின் முடிவில் பெரியார் ''அண்ணாத்துரை! இதிலேயும் விஷயம் இருக்குதய்யா'' என்று கூறி பாராட்டினார்.

ஈரோட்டில் 'இழந்த காதல்' நாடகத்தைப் பார்த்துவிட்டு வந்த அண்ணா அதைப்பற்றி பெரியதொரு விமரிசனம் எழுதி விட்டார்.

பெரியார் அவர்கள் அதைப் படித்துவிட்டு ''என்ன அண்ணாத்துரை! காதலாவது-கத்தரிக்காயாவது'' என்று சம்வாதம் புரியத் தொடங்கினார்.

அந்தக் ''காதல்'' விவாதத்தில் பெரியாரின் அண்ணன் ஈ. வே. கிருஷ்ணசாமி நாயக்கர் (ஈ.வே.கி. சம்பத்தின் தந்தை) கலந்து கொண்டார்.

விவாதம் சூடு பிடித்தது. பெரியார் கடுமையாகப் பேச ஆரம்பித்தார். அதைப் பொறுக்க முடியாமல் ஈ. வே. கிருஷ்ணசாமி நாய்க்கர் எழுந்தே போய் விட்டார்.

இரவு ஒன்பது மணிக்கு ஆரம்பித்த விவாதம் விடியற்காலை 4 மணி வரை நடந்தது. பெரியாரின் கடுமையான பேச்சுக்களை யெல்லாம் சகித்துக் கொண்டு, அண்ணா அவர்கள், காதலைப் பற்றி நீண்டதொரு விளக்கம் தந்து பேசிய பிறகு பெரியார் ஒப்புக் கொண்டு பாராட்டினார்.

கைவல்யம் சுவாமிகள் என்பவர் அந்தக் காலத்து சுயமரியாதை இயக்க எழுத்தாளர். ஒருநாள் அண்ணாவைப் பார்க்க வந்திருந்தார்.

''அண்ணாதுரை! நீங்க பெரியார் கிட்டே என்ன சம்பளம் வாங்கறீங்க?'

''ஏன்... எதற்காகக் கேட்கிறீர்கள்?''

''ஒன்றுமில்லே. மிகவும் உங்களுக்குக் கஷ்டமா இருக்குமே! எம். ஏ. படித்து விட்டு எழுபத்தி ஐந்து ரூபாய் என்றால் சரியில்லேயே! ஜி. டி. நாயுடு விடம் வந்து விடுங்கள். அவருக்கும் கொஞ்சம் ஆசை இருக்கிறது. நீங்கள் வருவதாக இருந்தால்......''

—என்று இழுத்தவாறு பேசினார் கைவல்யம்.

உடனே அண்ணா ''ஐயா... நாங்கள் இங்கே இருப்பது, கேவலம் பணத்துக்காக அல்ல! பெரியாருடைய இலட்சியங்களும் கொள்கைகளும் நிறைவேறத்தான் இங்கே இருந்து பணியாற்றுகிறோமே தவிர, நாங்களும் எங்கள் குடும்பமும் சுகம் பெற வேண்டும் என்பதற்காக அல்ல!'' என்றார்.

இவ்வளவு தூரம் கொள்கையில் அழுத்தமும் பற்றும் கொண்ட புடம் போட்ட தங்கமாக அண்ணா விளங்குவதைக் கண்டு கண்ணீர் மல்கி கைவல்யம் சுவாமிகள் 'அண்ணாதுரை நீங்கள் ஒரு இலட்சியப் புருஷர்' என்று பாராட்டினார்.

பம்பாய்க்கு ஜின்னாவைப் பார்த்துப் பேச பெரியார் தனது சீடர்களுடன் புறப்பட்டார்.

'சண்டே அப்சர்வர்' பாலசுப்பிரமணியம், இப்போது திருவாசகமணி எனும் புகழ்பெற்றுள்ள கே. எம். பாலசுப்பிரமணியம், டி. ஏ. வி. நாதன், அண்ணா ஆகிய இவர்கள் தான் பெரியாரின் சீடர்கள்.

மற்றவர்கள் எல்லோரும் மேலை நாட்டுப் பாணியில் உடை உடுத்திக் கொண்டு ஜின்னாவைப் பார்க்கப் புறப்பட்டனர்.

''அண்ணாதுரை! சீக்கிரம் டிரஸ் போட்டுக் கொள்! நேற்றுப் பேல் இன்றும் ஜின்னாவைப் பார்க்கப் போக வேண்டும்!''

''டிரஸ் போடாமல் அவரைப் பார்க்க முடியாதா?''

''அது வழக்கமல்ல! சரியல்ல!''

''அப்படியானால் வரவில்லை'' என்று அழுத்தம் திருத்தமாக தமது நண்பரிடம் கூறிவிட்டு ஜின்னாவைப் பார்க்கப் போகாமலேயே அண்ணா தமது அறையில் இருந்து கொண்டார்.



ஜஸ்டிஸ் கட்சியும் அதன் தலைவர்களும் வெள்ளையர்கள்பால் அளவுக்கு மீறிய நம்பிக்கை கொண்டிருந்தாலும் அண்ணா அவர்கள் அவ்வப்போது வெள்ளையருக்கு எதிரான உணர்வைக் காட்டிக் கொண்டுதான் வந்தார்.

சென்னை ராஜதானி கவர்னராக எர்ஸ்கின் பிரபு என்பவர் பதவியேற்றார். அவர் திறமைக் குறைவு உடையவர் என்று அறிந்த அண்ணா அவர்கள் கவர்னரின் திறமைக் குறைவைப்பற்றி பத்திரிகையில் எழுதி விட்டார்.

ஜஸ்டிஸ் கட்சித் தலைவர்கள் மிரண்டு போய் விட்டார்கள். அந்தக் கட்சியின் தலைவர்களில் ஒருவராக இருந்த பன்னீர்செல்வம் ஓடோடி வந்தார்.

''அண்ணாத்துரை; அண்ணாத்துரை! என்ன காரியம் செய்தீர்கள்?''

''என்ன செய்து விட்டேன்?''

''எர்ஸ்கின் பிரபு பற்றி திறமைக் குறைவானவர் என்று எழுதிவிட்டீர்களே?''

''உண்மையைத்தானே எழுதினேன்!''

''என்ன உண்மை? அவர் பதவியேற்பதற்கு முன்பே எப்படி அவர் திறமை தெரியும்? எதையும் யோசித்து கட்சி நலனையும் பார்த்து எழுத வேண்டும்.''

''யோசித்துத்தான் எழுதினேன். கட்சி நலனைவிட நாட்டு நலன் பெரிது என்பதுதான் 'ஐயா' வின் கொள்கை.''

சரி; இவருடன் பேசி ஜெயிக்க முடியாது என்று கண்ட பன்னீர்செல் வம் பெரியாரைப் பார்த்து முறையிட்டார்.

''அண்ணாதுரை எழுதுறதுன்னா... அதிலே விஷயம் இருக்குமுங்க!''—என்று ஒரேயடியாக அண்ணா பக்கம் சாய்ந்து விட்டார் பெரியார்.

மனவருத்தத்துடன் திரும்பிய பன்னீர் செல்வம் ஒரு சில மாதங்கள் கழித்துத் திரும்பி வந்தார். வந்ததும்

வராததுமாக அண்ணுவின் கைகளேப் பிடித்துக் குலுக்கினுர்.

''அண்ணுத்துரை... நீங்கள் சொன்னது சரிதான்! எர்ஸ்கின் நிர்வாகத் திறமையற்றவர் என்று இப்போது தான் கண்டு கொண்டோம். நீங்களோ... பல மாதங்களுக்கு முன் கூறி விட்டீர்கள். உள்ளபடியே...... அண்ணுதுரை நீங்கள் தீர்க்கதரிசி!'' என்று மனம் நெகிழப் பாராட்டினுர் பன்னீர்செல்வம்.

✶

திராவிடர் !இயக்கத்தில் பணியாற்றியபோது அண்ணு அவர்கள் அண்ணுமலேப் பல்கலேக் கழகத்திற்குச் சொற்பொழிவாற்றச் சென்றிருந்தார்.

ஆற்ருேரம் என்ற தலேப்பில் தமிழிலும், உலகம் புதியதும்; பழையதும்— என்ற தலேப்பில் ஆங்கிலத்திலும் அண்ணு சொற்பொழிவாற்றினுர்.

அந்த சொற்பொழிவைக் கேட்டு இரு மாணவர்கள் உள்ளம் பறிகொடுத்து விட்டனர்.

அண்ணுவைத் தனியறையில் அவர்கள் இருவரும் சந்தித்தனர். அளவளாவினர். அண்ணுவினுடைய எல்லா அம்சங்களும் அவர்களுக்குப் பிடித்து விட்டன. ஆனுல்... ஒன்றே ஒன்று பிடிக்கவில்லே. அதை வெளிப்படையாகக் கேட்கவும் செய்தனர்.

''அண்ணு! உங்கள் பேச்சில் சமதர்மக் கருத்துக்கள் இருக்கின்றன. அப்படியிருக்க நீங்கள் ஏன் பிற்போக்கான —பதவி வெறி மிகுந்த—பணக்காரக் கட்சியான ஜஸ்டிஸ் கட்சியில் இருக்கிறீர்கள்.''

இதற்கு அண்ணு, ஜஸ்டிஸ் கட்சி அப்படிப்பட்ட கட்சி அல்ல என்று கூறுவார் என்று அந்த மாணவர்கள் எதிர்பார்த்தனர்.

உண்மையை ஒளிவு மறைவு இல்லாமல் ஒப்புக் கொண்டு தன்னேத் திருத்திக் கொள்ளும் பெருந்தகையாளர் அல்லவா அண்ணு!

ஆகவே, வெளிப்படையாக ''ஆம்; அது அப்படிப்பட்ட கட்சிதான். அதைத் திருத்தி ஜனநாயக சமதர்மக் கட்சியாக்கவே அங்கு இருக்கிறேன். உங்களேப் போன்றவர்களின் துணை கிடைத்தால் விரைவில் என் ஆசை பூர்த்தியாகும்'' என்ருர்.

அந்த மாணவர்கள் பெரிதும் மனம் நெகிழ்ந்து போனுர்கள். அந்தக் கணத்திலிருந்தே அண்ணுவின் 'தம்பி' ஆனுர்கள்.

அந்த மாணவர்கள்தான் இன்று நாடாளுமன்ற தி. மு. க. குழுவின் தலேவராயுள்ள பேராசிரியர் அன்பழகன்—நாவலர் நெடுஞ்செழியன்.

✶

விடுதலேயில் அண்ணு பணியாற்றிக் கொண்டிருந்த நேரம். ஜஸ்டிஸ் கட்சிப் பிரமுகர்களில் ஒருவர் தமது பிறந்த நாளுக்கு-பகுத்தறிவுக் கொள்கைக்கு முரணுக சில தான தர்மங்களேச் செய்தார்.

உடனே அண்ணு அவர்கள் அதைத் தாக்கி விடுதலேயில் தலேயங்கம் எழுதத் துவங்கினுர். பெரியாரும் அதை வெகுவாக ஆதரித்தார். (பெரியாருக்கு) அவருக்கு இருந்த கோபம் எல்லாம் இலட்ச இலட்சமாய் தான தர்மம் செய்பவர், தமது பகுத்தறிவு இயக்கத்திற்கு ஒரு காசு கூட கொடுக்க மனமில்லேயே என்பதால்தான்!

அண்ணு எழுதிய தலேயங்கம் அச்சுகோக்கப்படும் நிலேயில்-விடுதலேக்கு ஆயிரம் ரூபாயை அந்தப் 'பிரமுகர்' அனுப்பி விட்டார்.

உடனே தலேயங்கத்தை மாற்றி பிரமுகரைப் புகழ்ந்து எழுதுமாறு கட்டளே பிறந்தது.

ஆனுல், அண்ணு அவர்கள் 'எழுதியது எழுதியதுதான். என் கையால் அதைத் திருத்த முடியாது' என்று உள்ள உறுதியோடு கூறி விட்டார்.

அண்ணுவின் அருமை நண்பர், காஞ்சிபுரம்
ஏ. கே. தங்கவேலர்.



காங்கிரஸ் கட்சியின் தீர்மானத்திற்கு ஏற்ப சென்னையிலிருந்து காங்கிரஸ் அமைச்சரவை ராஜினாமா செய்தது.

இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஜஸ்டிஸ் கட்சியை அமைச்சரவை அமைக்குமாறு வெள்ளைக்கார கவர்னர் தூண்டினர். ஜஸ்டிஸ் கட்சித் தலைவர்களும் இணங்கி விடுவார்கள் போலிருந்தது. இதை யறிந்த அண்ணு அவர்கள் ஈரோட்டிலிருந்து புறப்பட்டு சென்னை வந்தார்.

சென்னையிலிருந்து பெரியாருக்கு 25 பக்கங்கள் கொண்ட கடிதம் ஒன்றை எழுதினர். அதில் ''காங்கிரஸ் கட்சி சிலபல நியாயங்களுக்காக ராஜினாமா செய்தது. இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு ஜஸ்டிஸ் கட்சி அமைச்சரவைக்குள் புகக் கூடாது. இது ஜனநாயகத்திற்கு விரோதம்; அரசியல் ஒழுக்கத்திற்கும் விரோதம்; இதனை நீங்கள் தடுத்து நிறுத்தாத வரை நான் ஈரோடு வருவதாக இல்லை'' என்று எழுதி—தனது நேர்மைப் பண்பை வெளிக் காட்டினர் அண்ணு.

பெரியார் அவர்கள் அண்ணுவைச் சென்னையில் வந்து சந்தித்தார். அண்ணுவின் கருத்தை ஒப்புக் கொண்டார்.

ஆனால், ஜஸ்டிஸ் கட்சிக்கூட்டத்தில் மந்திரிப் பதவி எற்க வேண்டும் என்பதற்காகப் பலத்த ஆதரவு திரட்டப்பட்டது வெளிப்படையாகவே தெரிந்தது.

கூட்டத்திற்குப் பெரியார்தான் தலைவர். கூட்டத்தின் போக்கைப் புரிந்து கொண்ட பெரியார் மெதுவாக அண்ணுவை அழைத்தார்.

''அண்ணுதுரை... டார்த்தீர்சளா; நம்ம தீர்மானத்திற்கு ஆதரவு இருக்காது போலிருக்கிறது.''

''வேறு ஒரு வழி யோசித்திருக்கிறேன்.''

''என்ன? என்ன?''

''மந்திரி சபை அமைக்கக்கூடாது என்ற தீர்மானத்தை நான் கொண்டு போவதில்லை.''

''பிறகு...?''

''நீங்கள் கொண்டு வாருங்கள். தலைவர் என்ற முறையில் கொண்டு வாருங்கள். தலைவர் தீர்மானத்தை மரபு முறைப்படி தோற்கடிக்கக் கூடாது. அப்படித் தோற்கடித்தால் அது தலைவர் மேல் நம்பிக்கையில்லாத் தீர்மானத்திற்குச் சமம். ஆகவே யாரும் தோற்கடிக்க மாட்டார்கள். அப்படியே தோற்கடித்துவிட்டால் ஜஸ்டிஸ் கட்சியிலிருந்து விலகி சுயமரியாதை இயக்கத்தில் தீவிரமாக ஈடுபடுவோம்.''

''சரி, சரி நல்ல யோசனை'' என்று கூறிய பெரியார் தீர்மானத்தை முன்மொழிந்தார். எதிர்ப்பு வாதங்களையெல்லாம் அண்ணு தமது வாதத் திறமையால் பொடி செய்தார். அந்தத் தீர்மானம் நிறைவேறியது.

காங்கிரஸ் விட்டுப் போன இடத்தில் ஜனநாயகமற்ற முறையில் அமரக்கூடாது என்பதற்காக அண்ணு வாதாடிய போராட்டக் கட்டம் இது.

✶

திராவிட இயக்க காலத்தில் ஒரு மாநாட்டில் 'ஆலயப் பிரவேசம்' அவசியம் என்று கூறிடும் தீர்மானத்தைக் கொண்டு வந்தார் பெரியார்.

உடனே நாவலர் எழுந்து 'நாம் பேசுவது பகுத்தறிவு வாதம். நமக்குக் கோயிலைப்பற்றி அக்கறை இல்லை. அப்படி யிருக்க ஆலயப் பிரவேசம் பற்றி நாம் ஏன் தீர்மானம் கொண்டு வர வேண்டும்?' என்று பல மணி நேரம் தமது வாதத் திறமையைக் காட்டிப் பேசினர்.

அவருடைய வலிமையான பேச்சால் தீர்மானம் தோற்று விடும்போல் இருந்தது. பெரியாருக்குப் பயம் வந்து விட்டது.

''எங்கே அண்ணுதுரை! கூப்பிடு!' என்ருர்.

அண்ணுவோ ஒரு மேஜைக்கடியில் கூனிக் குறுகிப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்தார். அவரை எழுப்பி, நடைபெற்றதைக் கூறினர்.

மேடைக்கு வந்து அண்ணு 'ஆலயப் பிரவேசம் பகுத்தறிவு வாதிகளுக்கல்ல; பாமரர்களுக்கு! ஒரு ஆதிக்கத்தை உடைத்தெறியும் பணியில் நாமும் கை கொடுக்க வேண்டும்; அது தான் நெறி; முறை; பகுத்தறிவு!'' என்று நீண்ட தொரு விளக்கம் தந்தார். பின்னர், தீர்மானம் நிறைவேறியது. பெரியார் ''அப்பாடா......'' என்று பெருமூச்சு விட்டார்.

1937-ம் ஆண்டு அண்ணு அவர்கள் இந்தி எதிர்ப்புப் போரைத் தூண்டி விட்ட காரணத்தால் அவரைக் கைது செய்து தண்டனையும் விதித்தார்கள்.

அண்ணுவுக்கு அதுதான் முதல் சிறைவாசம். அந்தக் காலத்துச் சிறைகளும், அதன் சூழ்நிலையும் அண்ணுவின் மனதை மிகவும் வாட்டி விட்டது.

வெறுந் தரையில் படுத்து உறங்கிக் கொண்டிருந்தார் அண்ணு. அவரைப் பார்க்க அவரது தொத்தாவும் குடும்பத்தினரும் வந்தனர்.

அவர் இருந்த நிலையைப் பார்த்துத் தொத்தாவுக்கு மனம் பொறுக்கவில்லை.

''இதற்காகவா உன்னைப் படிக்க வைத்தேன்!''-என்று அழத் தொடங்கினுர்.

தன்னை வளர்த்த தாய் கண்ணீர் விடுவது கண்டு பொறுக்க முடியாத அண்ணுவும் விக்கி விக்கி அழத் தொடங்கி விட்டார்.

அண்ணு சிறையில் அழுதது அதுதான் முதல் தடவையும்-கடைசித் தடவையுமாகும்! அதற்குப் பிறகு அண்ணு 'சிறை என்பது மாங்குயில் கூவி விடும் பூஞ்சோலை' என்று கூறத் தொடங்கி விட்டார்.

✶

அப்போது நடந்த இந்தி எதிர்ப்புப் போராட்டத்திற்கு ஆள் பஞ்சம்; ஆகவே, வெளியூரிலிருந்துதான் தொண்டர்களைத் தருவித்துப் போராட்டம் நடத்துவார்கள்.

இரண்டு தொண்டர்களை அனுப்புக என்று எழுதினுல் அரசாங்கம் தடுத்து விடும் என்று அறிந்த அண்ணு சாதுர்யமாக ஒரு வழியைக் கையாண்டார்.

''வியாபாரம் மந்தம். இரண்டு—வேட்டி—இரண்டு சேலை மூட்டை அனுப்பவும்' என்று எழுதுவார்.

இதற்குரிய அர்த்தம் ''போராட்டம் பிசுபிசுத்து விடும் போலிருக்கிறது; இரண்டு ஆண் தொண்டர்களும், இரண்டு பெண் தொண்டர்களும் அனுப்புக!' என்பதுதான். இப்படிப் பட்ட சாதுர்ய வழி அன்றைய அரசாங்கத்தால் கடைசிவரை கண்டு பிடிக்கப்படவே இல்லை.

சிறையிலிருந்து வெளி வந்த அண்ணு அவர்களைக் குடும்பத் தொல்லை மிகவும் வாட்டியது. குடும்பத்தாரின் வேண்டுகோளுக்காகத்

சென்னையில் நடைபெற்ற பாராட்டுக் கூட்டத்தில் அண்ணுவுடன் சம்பத், நெடுஞ்செழியன், என். வி. நடராசன்.



தன்னை வளர்த்த தொத்தாவின் கண்ணீர் ததும்பிய வற்புறுத்தலுக்காக அவர் ஒருமுறை மிகப் பெரிய பதவிக்காகச் சிபாரிசுக் கடிதத்துடன் ஒரு பெரிய அதிகாரியைப் பார்க்கச் சென்றார்.

அந்த அதிகாரியிடம் வீட்டு வாசலில் அமர்ந்து கொண்டு, தமது பெயரை எழுதி, வேலையாள் மூலம் உள்ளே கொடுத்து அனுப்பினார் அண்ணா.

'அண்ணாதுரை' என்ற பெயரைக் கண்டதும் அந்த அதிகாரி சட்டைக் கூட போடாமல் விழுந்தடித்து, ஓடி வந்தார்.

''வரணும்! வரணும்!'' என்று கை கூப்பியவாறு நின்றார். அண்ணாவுக்கு என்னவோ போலிருந்தது.

''உங்களைப் பார்க்க நானே வரலாமென்றிருந்தேன். கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது போல் நீங்களே என் வீடு தேடி வந்து விட்டீர்கள்... நான் உங்களைப் பார்க்க விரும்பிய விஷயம் வேறொன்றுமில்லை. எனக்கு வர வேண்டிய பதவி உயர்வு இன்னொருவருக்குப் போய் விட்டது... மிகப் பெரிய அநியாயம் நடந்து விட்டது... உங்களுக்கிருக்கும் செல்வாக்கு எனக்குத் தெரியும்... எப்படியாவது நீங்கள் சிபாரிசு செய்து அந்த வேலையுயர்வை எனக்கு வாங்கித் தரவேண்டும். எனக்கும் என் குடும்பத்திற்கும் பெரிய உதவி செய்தவர்களாக இருப்பீர்கள்'' என்று அவர் கெஞ்சினார்.

அண்ணா மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் தான் சென்ற காரியத்தைப் பற்றி ஒரு வார்த்தை கூட எடுக்காமல், ''சரி; ஆவன செய்கிறேன்'' என்று கூறிவிட்டுத் திரும்பி விட்டார். அந்த நிகழ்ச்சியிலிருந்து அண்ணா அவர்கள் வேலை தேடும் படலத்தை கனவில் கூட நினைத்துப் பார்த்ததில்லை.

✶

ஆங்கிலேயரின் ஆட்சியை ஆதரித்த ஜஸ்டிஸ் கட்சியினரை அந்த ஆட்சியினர் யுத்தப் பிரசாரத்திற்காகப் பயன்படுத்தினர்.

அப்போது காங்கிரஸ், யுத்தத்தை எதிர்த்து வந்த நேரம்.

அண்ணாவிடம் சில அதிகாரிகள் வந்தனர்.

''உங்கள் பேச்சுத் திறனும் வாதத் திறனும் யுத்தப் பிரசாரத்திற்குப் பயன்பட வேண்டும் என்று நினைக்கிறோம்.''

''யுத்தத்திற்காகப் பயன்படும் பேச்சும் வாதமும் என்னுடையதல்ல; மன்னிக்க வேண்டும்.''

''செங்கற்பட்டு மாவட்டம் முழுவதற்குமான பொறுப்பை உங்களிடம் ஒப்படைக்கிறோம்.''

''உலகம் முழுவதற்குமான பொறுப்பை ஒப்படைத்தாலும் சரி; நான் ஏற்க மாட்டேன். மீண்டும் சொல்கிறேன்; மன்னிக்க வேண்டும். போய் வாருங்கள்.''

இவ்விதம் அண்ணா அவர்கள் ஜஸ்டிஸ் கட்சியினரின் போக்கிலிருந்து மாறுபட்டதால் அவரை சில நண்பர்கள் ''நீங்கள் காங்கிரஸ் வழியில் போகிறீர்கள்'' என்று குற்றம் சாட்டினர்.

''நல்ல வழியில் நானும் போகிறேன்; காங்கிரசும் போகிறது! அது நல்ல வழியில் போகிறதுஎன்பதற்காக நான் வேறு வழி நாட மாட்டேன்'' என்று அந்த நண்பர்களுக்கு நெஞ்சுயர்த்தி பதில் தந்தார் அண்ணா.

✶

பெரியார் அவர்களுடன் அண்ணா பணியாற்றியபோது வட நாட்டுப் பயணத்திலும் கலந்து கொண்டார்.

பெரியார் அவர்களின் தமிழ்ச் சொற்பொழிவை ஆங்கில மொழியில் மொழி பெயர்ப்பதே அண்ணாவின் பணி.

வட நாட்டில் இவரது ஆங்கில மொழி அறிவைக் கண்டு வியந்தவர்கள், அண்ணாவை தனிச் சொற்பொழிவு ஆற்றும்படி அழைத்தனர்.

'தலைவர் இருக்க-நான் தனியே சொற்பொழிவாற்ற வர மாட்டேன்'' என்று அடக்கத்துடன் மறுத்து விட்டார் அண்ணா.

வட நாட்டில் பொதுவாக முனிவர்களுக்கு-சாமியார்களுக்கு நல்ல மதிப்பு.

பெரியார் கங்கைக் கரை யோரத்தில் சில சமயங்களில் நடப்பார். அவருடன் அண்ணாவும் குளிரில் நடுங்கிக் கொண்டே பின்னால் செல்வார்.

பொன்னிற மேனியும்-வெண்ணிறத் தாடியும்-கலர் சால்வையும் போட்டுக்



அலங்காரத் தேரில் அண்ணாவுடன் தம்பிகள்!

கொண்டு பெரியார் நடப்பதைப் பார்க்கும் வட நாட்டார் அவரைச் சாமியார் என்று கருதிக் காலில் விழுவார்களாம்.

பெரியாருடன் பய பக்தியுடன் செல்லும் அண்ணாவைப் பார்த்து இவர் 'சின்ன சாமியார்' என்று கருதி இவரையும் தொழுவார்களாம்!

'நாங்கள் சாமியார்கள் அல்ல—' என்று எவ்வளவு சொன்னாலும் இந்த இரண்டு பகுத்தறிவுச் சாமியார்களுக்கு அவர்கள் மரியாதை செலுத்தாமல் விட மாட்டார்களாம்!

*

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து நாற்பத்திநான்காம் ஆண்டு-சேலத்தில் நீதிக் கட்சி மாநாடு நடந்தது.

'ஜஸ்டிஸ் கட்சியிலுள்ள பிரமுகர்கள் வெள்ளையரின் அடிமைகளாகப் போய் விடக் கூடாது; அதைத் தடுக்க வேண்டும்' என்று கருதிய அண்ணா, இந்த மாநாட்டில் அதற்கென்று ஒரு தீர்மானம் கொண்டு வந்தார்.

ஜஸ்டிஸ் கட்சிப் பணக்காரர்களைக் கலக்கிய தீர்மானம் அது.

அந்தத் தீர்மானத்தின்படி ஜஸ்டிஸ் கட்சி என்பது திராவிடர் கழகமாகியது.

திராவிடர் கழகத்திலிருப்போர் வெள்ளையன் தந்த சர்-ராவ்பகதூர்-ராவ்சாகிப் பட்டங்களைத் தூக்கி எறிய வேண்டும் என்று அந்தத் தீர்மானத்தில் கண்டிருந்தது. ஜஸ்டிஸ் கட்சிப் பணக்காரர்கள் இந்த அதிர்ச்சி வைத்தியத்தால் பெரிதும் கலகலத்து விட்டனர்.

வெள்ளையர்களின் அடிமைகள் என்ற பழியைச் சேலம் தீர்மானத்தின் மூலம் துடைத்தார் அண்ணா!

யுத்தப் பிரசாரத்திற்காக 'விடுதலை' வெள்ளை அரசாங்கத்தின் பொறுப்பில் விடப்பட்டதும் விடுதலையிலிருந்து வெளியேறினார் அண்ணா.

இவையனைத்தும் அண்ணாவின் இதயத்தில் கொழுந்து விட்டெறிந்த 'ஆதிக்க எதிர்ப்பு' உணர்ச்சியை எடுத்துக் காட்டுவன ஆகும்!

✶

ஈரோட்டில் அண்ணா அவர்கள் இருந்தபோது ஏற்பட்ட கலைப்பற்று, நாளாக ஆக வளரத் தொடங்கி—அவரைக் கலையுலகில் ஒரு மறு மலர்ச்சியைத் தோற்றுவிக்கிற அளவுக்கு வளர்த்தது.

**சந்திரமோகன்.**

**நீதிதேவன் மயக்கம்.**

**சந்திரோதயம்.**

**ஓர் இரவு.**

**காதல் ஜோதி.**

**வேலைக்காரி.**

போன்ற ஏராளமான நாடகங்களை எழுதினார். எழுதியது மட்டுமல்ல; சில நாடகங்களில் நடிக்கவும் செய்தார்.

எம். ஏ. படித்தவர்-ஓர் இயக்கத்தின் தளபதி—அரிதாரம் பூசி நடிக்க ஆரம்பித்ததும் கலையுலகம் பற்றியும்-கலைஞர்கள் பற்றியும் இருந்து வந்த கேவலமான எண்ணம் மாறத் தொடங்கியது.

✶

ஒரு முறை அண்ணாவின் நாடகத்தைப் பார்த்த பெரியார் வாய் விட்டுப் பாராட்டத் தொடங்கினார்.

''நாம் பேசும் நூறு கூட்டங்களும் சரி; அண்ணாத்துரையின் ஒரு நாடகமும் சரி!''

✶

அண்ணாவின் நடிப்பாற்றலை முத்தமிழ்க் கலா வித்வ ரத்ன டி. கே. சண்முகம் கண்டு வியந்தார்.

''அண்ணா அவர்கள் நாடகத்தில் தொடர்ந்து நடிப்பார்களானால்-எங்களைப் போன்ற தொழில் முறை நடிகர்கள் இந்தத் தொழிலையே விட்டுவிட வேண்டியதுதான்!'' என்று இதயம் திறந்து பேசினார்.

✶

என். எஸ். கே. நாடக சபாவிலிருந்து கே. ஆர். ராமசாமி, எஸ். எஸ். ராஜேந்திரன் போன்றவர்கள் பிரிந்த நேரம். உடனடியாக அவர்கள் ஒரு நாடகம் எழுதித் தரும்படி அண்ணா அவர்களை வேண்டிக் கொண்டார்கள்.

எடுத்தார் பேனா; ஒரே இரவில் ஒரு நாடகத்தை எழுதி முடித்தார். அந்த நாடகத்தின் பெயரே 'ஓர் இரவு!'

நாடகத்தில் அண்ணா காட்டிய நடிப்பாற்றலின் உச்சியைத் தலை சிறந்த நடிகர்களே பாராட்டியிருக்கின்றனர்.

ஒரு பெரிய ஜமீன்தாராக அண்ணா நடிப்பார். ஜமீன்தார்களுக்குள்ள முதலாளித்துவச் சோம்பேறித்தனத்தை அழகாகச் சித்திரிப்பார்.

ஜமீந்தார் (அண்ணா) சோபாவில் அமர்ந்திருப்பார்.

உடனே அவசரமாக குரல் கொடுப்பார். மாடிப்படியிலிருந்து வேலையாள் ஓடோடி வருவான்.

''ஐயா! கூப்பிட்டீங்களா?''

''ஆமா; என் காலை எடுத்து 'ஸ்டூல்' மேலே வை!'' என்பார்.

ஜமீன்தார்களின் சோம்பேறித்தனத்தை இந்தச் சிறிய நிகழ்ச்சி மூலம் அண்ணா அழகாக விளக்குவார்.

✶

நாடகத்தில் ஏதாவது தவறு நேர்ந்து விட்டால் அதைச் சமாளிப்பதில் அண்ணாவுக்கு நிகர் அண்ணா தான்!

வீர சிவாஜியின் குருவாக அண்ணா நடித்துக் கொண்டிருந்தார். அவருடைய சீடருடன், ''கண்ணனின் கோபிகாஸ்திரீகளை''ப் பற்றி பேசிக் கொண்டிருப்பார்.

அப்போது சீடர் கோபிகாஸ்திரீ என்று சொல்வதற்குப் பதில் 'சீதை' என்று கூறி விட்டார்.

உடனே அண்ணா சமாளித்துக் கொண்டு ''ஏண்டா மண்டு! அவருக்கு அத்தனை கோபிகாஸ்திரீ போதாதோ? நீ வேறு அனுப்புகிறாயோ? அபச்சாரமாப் பேசாதே!'' என்று கூறி சமாளித்தார்.

✶

அதே நாடகத்தில் அந்த சீடர் செய்த தவறால் அண்ணா வாய் தவறி, 'எக்ஸ்ட்ரா' என்று ஓர் ஆங்கில வார்த்தையைப் பயன்படுத்தி விட்டார்.



நெடுஞ்செழியனுடன் அண்ணு, துவக்க கால மேடை யொன்றில்.

நாடகத்தைப் பார்க்க வந்தவர் களிடையே சலசலப்பு ஏற்பட்டது.

உடனே அண்ணு சமாளித்துக் கொண்டு, ''என்னடா மண்டு! குரு தேவர் பரங்கியர் பாஷை பேசரூர் ன்னு பார்க்கிறீயா? இப்போது வியா பாரத்துக்குப் பரங்கியர் வந்திருக்கிரு. அவர்களுடன் பழகி அவர்கள் பாஷை யைக் கத்துகிட்டு இருக்கேன்'' என் ருர்.

சிவாஜியின் காலத்தில் ஆங்கிலேயர் வியாபாரிகளாக வரத் தொடங்கினர் என்ற சரித்திர உண்மையைப் பயன் படுத்தி அந்த இக்கட்டான சமயத்தில் அண்ணு சமாளித்தார்.

★

நீதி தேவன் மயக்கம் என்ற நாட கத்தில் அண்ணு-ராவணுகை நடிப் பார்.

நீதி தேவனைப் பார்த்து சரமாரி யாகக் கேள்வி கேட்பார். அப்போது நீதிதேவன் வேடம் போட்டிருந்தவர் பேராசிரியர் அன்பழகன்.

ஒரு முறை......அண்ணு வெகு வேக மாக-சரளமாக பேசுவதைப் பார்த்து மயங்கிப் போயிருந்த அன்பழகன் தனது பாடத்தை மறந்து விட்டு அடுத் துப் பேச முடியாமல் விழித்தார்.

உடனே அண்ணு சமாளித்துக் கொண்டு, ''பேசமாட்டீர்-நீதி தேவனே! நீர் பேசமாட்டீர்! உமக்கு மறந்து போய் விட்டது-நீதியும்-நெறி முறையும்!'' என்று பேச ஆரம் பித்தார்.

நாடகம் பார்க்க வந்த மக்கள் புரிந்து கொண்டு நீண்ட கையொலி எழுப்பினர்.

★

ஆகஸ்ட்-15 மட்டுமல்ல-அண்ணு அவர்களும் பெரியாரும் மோதிக் கொண்ட பிரச்னை.

கறுப்புச் சட்டை கூட அண்ணுவும் பெரியாரும் மோதிக் கொள்வதற் கான பிரச்னையாக உருவெடுத்தது.

திராவிடர் கழகத் தொண்டர்கள் மட்டும் கறுப்புச் சட்டை அணிவர்

என்று முன்பு மாநாட்டில் ஒப்புக் கொள்ளப்பட்டது.

ஆனால், எல்லோருமே கறுப்புச் சட்டை அணிய வேண்டும்; அணியாத வர்கள் துரோகிகள் என்று வெளிப் படையாகவே பெரியாரும் பெரி யாரின் 'சீடர்களும்' பேசத் தொடங் கினர்.

அண்ணா வுக்கு எல்லோரும் கறுப்புச் சட்டை போடுவது என்பது பிடிக்க வில்லை.

ஆனாலும் கட்சியின் போக்கிற்கு ஏற்ப அவர் கட்டுப்பட்டு நடந்து வந் தார்.

1946-ம் ஆண்டு மதுரையில் நடந்த கறுப்புச் சட்டை மாநாட்டில் அண்ணா கலந்து கொண்டார்.

அந்த மாநாட்டுப் பந்தல் தீயிடப் பட்டு மாநாடே குழப்பமடைந்த போது அண்ணா அவர்கள் உறுதியாக நின்று அந்தக் குழப்பத்தைச் சமாளித் தார்.

ஆயினும்......அவர் உள்ளத்தில் கறுப்புச் சட்டையை எல்லோரும் அணிவது என்பதற்கு எதிர்ப்பு வளர் ந்து வந்தது. அவ்வப்போது அதை அவர் எடுத்துக் கூறியும் வந்தார்.

'கறுப்புச் சட்டைக்கு அண்ணா விரோதி' என்று பிரசாரம் வெகு பலமாக நடந்தது.

ஆனால்....என்ன கருத்து மனத்தில் இருந்தாலும் கட்சியின் கட்டுப்பாட் டிற்கு அடங்கி நடப்பவர் என்பதை நிரூபிக்கும் கட்டம் ஒன்று வந்தது.

கறுப்புச் சட்டைக்குத் தடை விதிக் கப்பட்டது. சட்ட விரோதமான அமைப்பு என்று அரசாங்கத்தால் பிர கடனம் செய்யப்பட்டது.

''......அண்ணாதுரைக்கு ஏற்ற மாதிரியே அரசாங்கம் செய்து விட் டது. ''நாம் பெரியாரை அணுகி, இந்தத் தடையை மீற வேண்டும். அப் போது அண்ணாதுரை தடை மீற வர மாட்டார். பின்னர் அவர் செல்வாக்கு அவ்வளவுதான்.''

—என்று நினைத்த சிலர், கறுப்புச் சட்டைக்குத் தடை விதித்ததைக் கண் டிக்கக் கண்டனக் கூட்டம் ஏற்பாடு செய்தனர்.

அண்ணா காஞ்சிபுரத்திலிருந்து சென்னைக்குப் புறப்பட்டு வந்தார். நேராக நாவலர் நெடுஞ்செழியன் தங்கியுள்ள இடத்திற்குப் போனார்.

''வாங்க......அண்ணா''

''சரி; சரி; உன்னிடம் எத்தனை கறுப்புச் சட்டை இருக்கின்றன!''

''இரண்டு மூன்று இருக்கும்.''

''அதில் எனக்கொன்று தா!''

நாவலர் ஒரு கறுப்புச் சட்டையை எடுத்துத் தந்தார்.

நெடுஞ்செழியனோ ஏறத்தாழ ஆறடி உயரமுள்ள ஆஜானுபாகுவான தோற்றம்.

அண்ணாவோ குள்ள உருவம் படைத் தவர். எனவே, நெடுஞ்செழியனின் சட்டையைப் போட்டதும் அண்ணா விசித்திரமாகத் தோற்றம் அளித்தார்.

''அண்ணா! உங்களுக்கு என் சட்டை 'தொள தொள' என்றிருக் கிறது.''

''பரவாயில்லை; ஏதோ ஒரு கறுப் புச் சட்டை! இது போதும்; புறப்படு'' என்றார் அண்ணா.

சென்னை மெமோரியல் மண்டபத் தில் கறுப்புச் சட்டைக்குத் தடை விதித்ததைக் கண்டிக்கும் கூட்டம் நடந்து கொண்டிருக்கிறது. அனைவரும் கறுப்புச் சட்டை அணிந்து வந்திருந் தனர்.

''அண்ணா வர மாட்டார். இது ஒன்றே அவரது அழிவிற்குப் போதும்'' என்ற நம்பிக்கையில் சிலர் சந்தோஷ மாக இருந்தார்கள.

'அண்ணா வர வில்லையே' என்ற ஏக் கத்தோடு பலர்!

கூட்டத்தில் சலசலப்பு!

''அண்ணா வந்து விட்டார். அதோ.. கறுப்புச் சட்டையுடன் வந்து விட் டார்'' ஒரே கரகோஷம்! மகிழ்ச்சி ஆரவாரம்!

அண்ணா மேடை யேறிப் பேசினார். அவர் பேச்சைக் கூட மக்கள் கவனிக்க வில்லை.

கட்சியின் கட்டுப்பாட்டை-கடுமை யான சோதனை காலத்தில் மேற் கொண்ட அண்ணாவின் மேன்மையான உள்ளம்பற்றி மக்கள் மனம் நெகிழ்ந்த வாறு அவரையே கவனித்துக் கொண் டிருந்தனர்.



சிவாஜி கணேசன் நடித்த நாடகத்தில் அண்ணா, கருணாநிதி, அரங்கண்ணல், கண்ணதாசன்.

ஆகஸ்ட் 15 அறிக்கைக்குப் பிறகு அண்ணாவுக்கும் பெரியாருக்குமுள்ள இடைவெளி அதிகரித்துக் கொண்டே வந்தது.

'நான் அண்ணா கருத்தை ஆதரிப்பவன்.'

'நான் பெரியார் கருத்தை ஆதரிப்பவன்.'

—என்று திராவிடக் கழகத்திலேயே இரு கோஷ்டிகள் தலை யெடுக்கத் துவங்கின.

பெரியாரை ஆதரிப்பவர்கள் அண்ணாவைக் கடுமையாக எதிர்க்கத் தொடங்கினார்கள்.

கடுந் தாக்குதல் வரவே அண்ணா தீவிர அரசியல் ஈடுபாட்டிலிருந்து ஒதுங்கத் தொடங்கினார்.

அது மட்டுமா; மாநாடுகளில் கலந்து கொள்வதையே கூட தவிர்த்தார்.

தூத்துக்குடியில் நடந்த மாநாட்டிற்கும் அண்ணா போகவில்லை.

கடலூரில் திரு. வி. க. கலந்து கொண்ட மாநாட்டிற்கும் அண்ணா போகவில்லை.

இதனால் அண்ணா இல்லாத இயக்கம் —அண்ணா இல்லாத மாநாடு எப்படியிருக்கும் என்பதைப் பெரியார் உணர்ந்து கொண்டார்.

அண்ணாவை எப்படியாவது மறுபடியும் இயக்கத்தில் தீவிர ஈடுபாடு கொள்ளச் செய்து விட வேண்டும் என்று பெரியார் எண்ணத் தொடங்கினார்.

"திராவிடர் கழகத் தனி மாநாடு நடைபெறும்."

"அதற்குத் தலைவர் அண்ணாத்துரை."

—என்று ஒரு நாள் திடீரென்று பெரியாரின் அறிக்கை வெளி வந்தது. ஆச்சரியத்தில் மூழ்கினர் பலர்.

ஆச்சரியம் அதில் மட்டும் இருக்கவில்லை. மாநாடு நடப்பதற்கு முன்... மாநாட்டுத் தலைவர் ஊர்வலம் நடந்தது.

மாநாட்டுத் தலைவர் அண்ணா கம்பீரமாகச் சாரட்டு வண்டியில் உட்கார்ந்திருக்கிறார். பெரும் தலைவர் பெரியார் நடந்து வருகிறார். இதைப் பார்த்த மக்கள் எல்லாம் இதயம் நெகிழ்ந்து போனார்கள். 'இனி கழகத்தில் பிளவிருக்காது' என்று நம்பினர்.

அன்றைய மாநாட்டில் பெரியார் 'ஒரு படி' எல்லோரையும் விட முன்னே சென்று பேசினார்.

"எனக்கோ வயதாகி விட்டது. இனி கழகத்தில் உழைப்பாளர்களே கழகத்தை நடத்திச் செல்ல வேண்டும்.

''இந்த மாநாட்டின் தலைவர் அண்ணாதுரை ஒருவர் போதும்—நமது கழகத்தை நடத்திச் செல்ல!

''வயதாகிய தந்தை தன் பொறுப்பை ஒப்படைத்து விடுவதுதான் நியாயம். ஆகவே நான் இன்று எனது பெட்டிச் சாவியை உங்கள் முன்னிலையில் அண்ணாவிடம் ஒப்படைத்து விடுகிறேன்.''

பெரியாரின் இந்தப் பேச்சைக் கேட்டு மக்கள் 'இனி கழகம் வெற்றிப் பாதையில் சுமுகமான முறையில் செல்லும்' என்று நம்பினர்.

ஆனால், இந்த நம்பிக்கை வெகு நாட்கள் நீடிக்காது என்பது அப்போது அவர்களுக்குப் புரியாமல் போய் விட்டது.



ராஜாஜியை 1949-ம் ஆண்டு மே திங்கள் 14ம் தேதி சந்தித்துப் பெரியார் தனியாகப் பேசினார் திருவண்ணாமலையில்!

'இதில் என்னவோ இருக்கிறது'

— என்ற சந்தேகம் அனைவருக்கும் தோன்றியது. அண்ணாவுக்கும் தோன்றியது.

கோவையில் முத்தமிழ் மாநாடு மே திங்கள் இறுதியில் நடந்தது.

அந்த மாநாட்டில் பெரியாரும் அண்ணாவும் கலந்து கொண்டனர்.

அண்ணா பேசும்போது அனைவரும் எதிர்பாராத முறையில் ஒரு கேள்வியைக் கேட்டார்.

''பெரியார் அவர்களே! திருவண்ணாமலையில் ராஜாஜியைச் சந்தித்துப் பேசினீர்களே; என்ன பேசினீர்கள்? அவரைச் சந்திக்க வேண்டிய காரணம் என்ன? சந்தித்துப் பேசிய விவரம் என்ன?''

—அண்ணாவின் இந்தக் கேள்வியைக் கேட்டு பெரியார் திடுக்கிட்டு ஆத்திரமடைந்தார்.

''நான் அவரைச் சந்தித்தது எனது சொந்த விஷயம். அதற்கும் கட்சிக்கும் யாதொரு சம்பந்தமில்லை.''

—என்று வேகமாக பெரியார் பதில் தந்தார். இருந்தாலும் குழப்பமும் கலவரமும் அனைவர் மனத்திலும் அன்றிலிருந்தே தோன்றத் தொடங்கின.

கோவை மாநாட்டுக்குப் பின்னர் 19-6-49 விடுதலை பத்திரிகையில் பெரியார் 'விளக்கம்' என்ற பெயரில் ஒரு அறிக்கை விட்டார்.

''எனக்கு வாரிசாக ஒருவரை ஏற்படுத்தி அவர் மூலம் ஏற்பாடு செய்து விட்டுப் போக வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருக்கிறேன்.

''என்னைப்பற்றி ஒரு ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறேன். அது முடிந்ததும் தீவிரமாக இறங்கி நடத்தப் போகிறேன்.''

பெரியார் 28-6-49ல் மீண்டும் ஒரு அறிக்கை விடுத்தார்.

''நான் ஐந்தாறு வருஷமாகப் பழகி நம்பிக்கை கொண்டதும்-என் நலத்திலும் இயக்க நலத்திலும் உண்மையான பற்றும் கவலையும் கொண்டு நடந்து வந்திருக்கிறதுமான மணியம்மையை எப்படியாவது வாரிசுரிமையாக ஆக்கிக் கொண்டு விடுவது என்று முடிவெடுத்திருக்கிறேன்.''

—இந்த அறிக்கையைக் கண்டு பலர் மனம் பதறிப் போனார்கள். என்ன நடக்குமோ-எது நடக்குமோ என்று கலங்கினார்கள்.



திருச்சிக்கு அண்ணா வந்திருந்தார். வந்தவருக்குத் திடீரென உடல் நலம் கெட்டது. டாக்டர்களிடம் அவரை அழைத்துச் சென்று காட்டினர்.

அவரைப் பரிசோதித்த டாக்டர்கள் அவரது ''உடலில் கோளாறு ஏதுமில்லை'' என்று கூறி விட்டனர்.

ஆனால், உள்ளபடியே அவருடைய உள்ளத்தில்தான் தாங்க முடியாத வேதனை.

'பெரியார் மணியம்மையைத் திருமணம் செய்து கொள்வார்' என்ற உண்மையை அவர் உணர்ந்திருந்தது தான் அந்த வேதனைக்குக் காரணம்.

அந்த உண்மையை அண்ணா எவ்வளவோ மனத்துக்குள்ளே வைத்திருந்தாலும், அது எப்படியோ கழகத் தோழர்களிடையே பரவி, பெரிய குழப்பத்தை ஏற்படுத்தி விட்டது.

அவசரக் கூட்டங்கள்

பிரமுகர்களின் தூது கோஷ்டி

கடிதங்கள்-தந்திகள்

எதுவுமே பெரியாரின் முடிவை மாற்ற முடியவில்லை.

1949 ஜூன் 18ம் தேதி பெரியார் அவர்களுக்கு சென்னை ரிஜிஸ்டிரார் முன்னிலையில் திருமணம் நடந்தது.

அந்தத் திருமணத்தை ரத்து செய்து விடும்படி அண்ணுவும் கழகப் பிரமுகர்களும் கையெழுத்திட்டு ஒரு அறிக்கை விடுத்தனர். பயன் ஏதும் ஏற்படவில்லை.

திராவிட கழகத் தோழர்களின் எதிர் காலத் திட்டம்பற்றி ஆராய 17-9-49அன்று சென்னை பவளக்காரத் தெருவிலுள்ள ஒரு சிறிய அறையில் அண்ணு ஒரு கூட்டத்தைக் கூட்டினுர். புதிய கழகம் அமைப்பதெனத் தீர்மானமாகியது. அதுவே திராவிட முன்னேற்றக் கழகம்.

★

தி.மு. கழகத்தின் துவக்கம் ஆடம்பரமாக இல்லை. கழகத்தின் சட்ட திட்டங்கள் அமைப்பு விதிகள்போன்றவற்றை எழுதக் கூட பெரிய நோட்டுப் புத்தகங்கள் வாங்கப்படவில்லை.

மதியழகன் அவர்களின் கல்லூரி நோட்டுப் புத்தகத்தில்தான் கழகத்தின் துவக்கம் பிறந்தது.

★

தி.மு. கழகத் துவக்கக் கூட்டத்தில் பேசியவர்கள் 'பெரியாருக்கு மட்டுமல்ல திராவிடக் கழகம் சொந்தம்; நமது உழைப்பால் உருவானது; அதனுடைய சொத்தில் நமக்கும் பங்கு உண்டு. ஆகவே, வழக்குப் போட்டு அந்தச் சொத்துகளை அடைவோம்' என்று கூறினுர்கள்.

ஆனுல், அண்ணு அவர்கள் எழுந்து ''நமது திறமையில்-உழைப்பில்நமக்கு நம்பிக்கை இருக்கவேண்டும். துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு வந்தோம். உன்னதமான இயக்கத்தைப் படைத்தோம் என்ற சரித்திரம் உருவாக்குவோம்'' என்றுர்.

தன்னம்பிக்கையின் உருவமாக அண்ணு திகழ்ந்ததைக் கண்டு அனைவர் உள்ளத்திலும் அந்தத் தன்னம்பிக்கை தோன்றத் தொடங்கியது.



காவியம் படைக்கும் மேஜை அருகில் அண்ணுவும் நண்பர்களும்.

தி. மு. கழகம் அமைந்ததையொட்டி அன்று ராபின்சன் பூங்காவில் கூட்டம்.

ஏராளமான மக்கள்! மழையும் ஏராளமாகப் பெய்தது. அண்ணு பேசத் தொடங்கினுர். மழையும் நின்றது.

''நாம் திராவிடக் கழகத்தாருடன் மோதுவதோ-சாடுவதோ கூடாது. திராவிடக் கழகமும் திராவிட முன்னேற்றக் கழகமும் இரட்டைக் குழல் துப்பாக்கிகள்.''

அண்ணுவின் பேச்சு-''பிறரைத் தாக்கி வளராதே; பிறர் தாக்குவதைத் தாங்கி வளர்'' என்று புதிய பாதையை வகுத்துத் தந்தது.

'தி. மு. கழகத் துவக்க காலத்தில் தலைவர் என்ற பதவி இல்லாமலேயே இருக்கட்டும்' என்று அண்ணு கட்டளையிட்டார்.

இதற்கு அவர் கூறிய காரணம்:

''இத்தனை ஆண்டுகளிலும் நான் அறிந்த தலைவர்-தெரிந்த தலைவர்-பார்த்த தலைவர் இவர் ஒருவர்தான். வேறு தலைவரின் தலைமையில் நான் வேலை செய்தது கிடையாது; செய்யவும் மனம் வந்ததில்லை, வராது!

''அதே காரணத்தால்தான் திராவிட முன்னேற்றக் கழகத்திற்குக் கூட தலைவரை ஏற்படுத்தவில்லை. அவசியம் என்று கருதவில்லை.

''நமக்கு நல் வழி காட்டிய பெரியார் அமர்ந்த பீடத்தை-தலைவர்



நாடக வேஷத்தில்......

பதவியை - நாற்காலியைக் காலி யாகவே வைத்திருக்கிறோம்.

''அந்தப் பீடத்திலே-நாற்காலி யிலே வேறு ஆட்களை அமர்த்தவோ- அல்லது நாங்களோ-அல்லது நானோ அமரவோ விரும்பவில்லை.''

கழகத்திலிருந்து பிரிந்து வந்த போதிலும் தலைவரை-தான் பிறந்து வளர்ந்த இயக்கத்தைத் தாக்காமல்- போற்றியே வளர்ந்தார் அண்ணா.

ஆட்சி பீடம் ஏறியதும் பெரியா ரைச் சந்தித்து ஆசி பெற்றார். இது பற்றி பெரியார் (1967-ல்) குறிப்பிடும் போது ''நான் எவ்வளவோ அவர் களைத் திட்டினேன். ஒரு வார்த்தை அவர்கள் திருப்பிச் சொல்லவில்லை. அதிகாரம் கிடைத்த போது தந்தை யிடம் மகன் வருவதுபோல் எந்தவித மான சங்கோஜமும் இல்லாமல் வந் தார்கள். எனக்குத்தான் அவர்கள் முகத்தைப் பார்க்கவே வெட்கமாய் இருந்தது'' என்றார்.

✶

**த**மது கழகத்தை வளர்க்கப் பேச்சையும் - எழுத்தையும் ஆயுத மாகக் கொண்டார் அண்ணா.

அதனால் 'ஆரியமாயை', 'இலட்சிய வரலாறு' ஆகிய புத்தகங்கள் எழுதிய தற்காக அவர் மீது வழக்குகள் போடப்பட்டன.

வழக்குகளை எதிர்த்து எழுத்துரி மைப் போர் நடைபெற்றது.

**அ**ண்ணாவுக்கு தி. மு. கழகத்தை சிறந்த பார்லிமெண்டரிக் கட்சியாக் கிடும் எண்ணம் துவக்கத்திலிருந்தே இருந்து வந்தது.

ஆனால், அதற்காக 'திடுதிப்' என்று முடிவெடுத்து தேர்தலில் குதித்துவிட வில்லை.

தி. மு. கழகம் தேர்தலில் ஈடுபட லாமா? கூடாதா என்பது பற்றிய விவாதத்தை துவக்கி வைத்தார், திருச்சி மாநாட்டில்!

செயற் குழுவும் பொதுக் குழுவும் தேர்தலில் ஈடுபடலாம் என்று முடிவு செய்த போதிலும்-மக்கள் என்ன சொல்கிறார்கள் என்பதைப் பார்க்க விரும்பினார்:

அதற்காக இரு வாக்குப் பெட்டிகள் வைக்கப்பட்டன. வாக்குகள் அளிக்கப் பட்டன.

தி. மு. கழகம் தேர்தலில் போட்டி யிடலாம் என்று வாக்களித்தவர்கள் 56,924 பேர்.

போட்டி யிடக் கூடாது என்று ஓட் டளித்தவர்கள் 4203 பேர்.

பெரும்பான்மை முடிவுக்கு ஏற்ப தி. மு. கழகம் போட்டியிடப் போவ தாக அறிவித்தார்.

மக்களை மதிப்பதிலும்-ஜனநாய கத்தைப் போற்றுவதிலும் தனக்கு இருக்கும் நம்பிக்கையை வெளிப் படுத்தி தான் ஒரு சிறந்த ஜனநாயக வாதி என்பதை அண்ணா நிரூபித்தார்.

✶

**போ**ராட்டங்கள் - கிளர்ச்சிகள்- திடீர் அறிவிப்புகள்-கண்டனங்கள் என்ற அதிர்ச்சி அரசியலில் வளர்ந்தவ ராயினும், அண்ணாவுக்கு, எப்போ துமே அமைதியான கருத்துப் புரட்சி யில் தான் நாட்டம் அதிகம்.

தி. மு. கழகம் துவக்கிய காலத்தி லிருந்தே இத்தகைய அமைதியான கருத்துப் புரட்சியை தி. மு. கழகம் மேற் கொள்ள வேண்டும் என்ற கருத்தை அவர் வலியுறுத்தி வந்தார்.

போராட்டங்களை அவர் வலியச் சென்று நடத்த மாட்டார். தவிர்க்க முடியாத நிலை ஏற்பட்டால் தான் போராட்டங்களைத் துவக்குவார்.

இதை அவரே தனது வாய் மொழியாகக் கூறினார்:

"போராட்டங்களை நான் தேடியும் அலைய மாட்டேன்; கிடைத்தால் விட மாட்டேன்."



போராட்டங்களை எப்படி நடத்துவது? எங்கே நடத்துவது? என்பன போன்ற விஷயங்களை அண்ணா தமது கட்சியிலுள்ள 'போராட்ட வீரர்களை' வைத்துக் கொண்டு கணக்கிடமாட்டார்.

"போராட்டங்களை நடத்துவது கட்சியிலுள்ள 'வீரர்களை' கணக்கில் வைத்துக் கொண்டு நடத்துவது தவறு. கட்சியிலுள்ள கோழையும் தாங்கிக் கொள்ளும் விதத்தில்தான் நடத்த வேண்டும். ஒளிவு மறைவு இல்லாமல் கூறிக் கொள்வேன். எனது கட்சியிலுள்ள கோழை நான்தான்.

ஆகவே, என்னைக் கணக்கில் வைத்துக் கொண்டுதான் போராட்டங்களை நடத்துவேன்" என்பார் அண்ணா.

போராட்டங்களால் தனது கட்சியின் பலம் சிதறிவிடக் கூடாது என்பதில் அவருக்கு இருந்த அக்கறையை இது காட்டும்.

அப்படி அவர் நிதானமாகச் சிந்தித்துத்தான்—

மும்முனைப் போராட்டம்

இந்தி எதிர்ப்புப் போராட்டம்

எழுத்துரிமைப் போராட்டம் ஆகியவற்றை நடத்தினார்.



அரசியலால் பாதிக்கப்பட்ட தியாகிகள், பொருளாதார வசதி இல்லாமல் திண்டாடுவது இயல்பு.

அதை மாற்றியமைக்க முனைந்தார் அண்ணா.

சுய மரியாதை இயக்க காலத்தில் பட்டுக்கோட்டை அழகிரிசாமி காச நோயால் பீடிக்கப்பட்டிருந்தபோது அவருக்கு நிதி சேர்த்துத் தந்தார் அண்ணா.

அவர் மறைந்த பிறகு அவரது குடும்பத்திற்கென நிதி சேர்த்துத் தந்தார்.

இத்தனைக்கும் அந்த அழகிரிசாமி அண்ணாவை கடைசி காலத்தில் ஏளனமாகப் பேசி வந்தவர்தான்.

'என்ன......தளபதி' என்று அண்ணாவின் முகத்திற்கு நேராகவே கேலியாக அழைத்தவர் அவர்.

அண்ணாவின் பெருந்தன்மையைக் கண்டு கடைசி காலத்தில் கண்ணீர் விட்டார் அழகிரிசாமி.

'அண்ணாத்துரை...நான் யாரை யாரையோ நம்பி ஏமாந்தேன்...... மனுஷன்னா நீதானய்யா மனுஷன்" என்றார்.



அடுத்து அண்ணா அவர்கள் பாரதிதாசனுக்கு நிதி சேர்த்துத் தந்தார்.

பாரதிதாசனின் பாடலில் அண்ணாவுக்கு அதிக ஈடுபாடு. அவருடைய பாடல் வரிகளை தமிழகத்தில் கூட்டம் தோறும் எடுத்துச் சொல்லி அவரது பாடலுக்குச் செல்வாக்குத் தேடியவர் அண்ணா.

அண்ணாவுடன் அவரது துணைவியார் ராணி அம்மையார்.



பேரனுடன் கொஞ்சுகிறார் தாத்தா.



அண்ணுவுக்கு முதன் முதலாக அறிஞர் பட்டம் தந்ததும் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன்தான்.

இருப்பினும், கடைசி காலத்தில் பாரதிதாசன் அண்ணுவைக் கடுமையாகத் தாக்கினர்.

அவர் எவ்வளவுக்கு எவ்வளவு தாக்கினரோ அவ்வளவுக்கு அவ்வளவு புரட்சிக் கவிஞரின் மீது அளவிலாப் பற்றுக் கொண்டிருந்தார், அண்ணு.

தனது கட்சியில் உயிர்த் தியாகம் செய்தவர்களுக்கும், வாழ்வில் கீழ்த் தட்டை அடைந்தவர்களுக்கும் நிதி சேர்த்துத் தருவதில் அண்ணு அவர்கள் மும்முரமாக ஈடுபட்டார்.

''தியாகிகளே அவர்கள் வாழும் காலத்தில் மதிக்கவில்லை-என்ற பழிச் சொல்லை நம் காலத்திலாவது நீக்க வேண்டும்'' என்று பகிரங்கமாக அறிவித்துப் பாடுபட்டவர் அண்ணு.

ஆட்சிப் பீடம் ஏறிய பிறகு காங்கிரஸ் தியாகி வாஞ்சுவின் குடும்பத்திற்கு உதவி செய்ய முன் வந்தார் அண்ணு.

வரதராஜுலுவின் குடும்பம் அரசாங்க எஸ்டேட்டில் அவர்கள் விரும்புகிற காலம் வரை இருக்கலாம் என்ற உத்தரவிட்டார் அண்ணு.

தியாகிகளை-அவர்கள் எந்தக்கட்சியிலிருந்தாலும் மதிக்கும் பண்பு பெற்றவர் என்பதைக் கடைசி காலம் வரை நிரூபித்தார்.

✶

தேர்தல் போராட்டத்தில் சுவரொட்டிகளுக்கு ஒரு மவுசு ஏற்படுத்தியவரே அண்ணு அவர்கள்தான்.

சின்னஞ் சிறிய வாசகங்கள்; மனதைத் தொடும் கருத்துக்கள் அமைத்து 1957 தேர்தலில் வெளியிட்டார்.

''காகிதப்பூ மணக்காது
காங்கிரஸ் சோஷலிசம் இனிக்காது''

''நாட்டு வாட்டம் போக்கிட
நோட்டு அடித்தால் போதுமா?''

''அரியலூர் அளகேசனரே!
நீங்கள் ஆண்டது போதாதா?
மக்கள் மாண்டது போதாதா?''

இந்தச் சுவரொட்டிகள் பெரிதும் தேர்தல் போக்கை மாற்றியது கண்டு பிற கட்சிகளும் அந்த முறையைப் பின்பற்றின.

சட்டசபைக்கு அண்ணுவும் 14 தோழர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

சட்ட மன்றத்தில் அண்ணு ஆற்றிய தமிழ் உரையைக் கேட்டு மயங்கிய சட்டசபைத் தலைவர் (காலஞ்சென்ற) டாக்டர் கிருஷ்ணராவ், ''நான் அண்ணுவிடம் மாணவனுக இருந்து தமிழ் கற்றுக் கொள்ள விரும்புகிறேன்'' என்று குறிப்பிட்டார்.

தி. மு. கழகத்தின் சட்டசபை பிரவேசத்திற்குப் பிறகு நேருவுக்குக் கறுப்புக் கொடி காட்டும் கிளர்ச்சி நடை பெற்றது.

நேருவைப் பற்றி அப்போது ஒரு பத்திரிகை ஆசிரியர் மிகவும் மட்டமாக எழுதிய தகவல் அண்ணுவுக்குக் கிடைத்தது.

உடனே அவரை வரவழைத்தார். அவர் எழுதியதைக் காட்டச் சொன்னர். அந்த எழுத்தைப் படித்துவிட்டு ''இதைப் போடாதே!'' என்றர்.

''ஐயோ, அண்ணு! எல்லாம் அச்சாகி விட்டதே!'' என்றர்.

''அச்சானல் என்ன; எல்லாவற்றையும் எரித்து விடு'' என்றர்.

தமது தம்பிகளிடம் எவ்வளவு பரிவு காட்டினலும்-பிற கட்சித் தலைவர்களை மோசமாக எழுதினல் உடனே கூப்பிட்டுக் கண்டிக்கும் பண்பு உடையவர் அண்ணு என்பதற்கு இது மட்டுமல்ல; இன்னெரு உதாரணமும் இருக்கிறது.

கடற்கரைக் கூட்ட மொன்றில் தி. மு. க. தலைவர் ஒருவர் ஆத்திர மிகுதியால் 'காங்கிரஸ் மந்திரிகளைக் கல்லால் அடிக்க வேண்டும்' என்று பேசினர்.

உடனே எழுந்தார் அண்ணு. கடுமையாக, ''என்ன பேசுவது என்று இல்லையா? இப்படிப் பேசலாமா? மன்னிப்புக் கேள்'' என்று லட்சக்கணக்கான மக்களிடையே அவரை மன்னிப்புக் கேட்க வைத்தார்.

✶

காரில் செல்லும்போது அருமையான உரையாடல்களை நிகழ்த்துவார் அண்ணு.

ஒரு முறை அவருடன் காரில் வந்தவர்கள் அகநானூறு-புறநானூறு ஆகியவற்றுக்குப் பொருள் கூறிக்



பெரியாருடன் அண்ணா!



தம்பிரான் தரும் பொன்னுடையை ஏற்கிறார்.



சர். சி. பி. ராமசாமி ஐயருடன்...

சி. சுப்பிரமணியத்துடன்...



கொண்டு வந்தார்கள். கருத்து வேறு பாடு மிகுந்து அண்ணாவிடம் அதுபற்றிக் கேட்டார்கள்.

''புறநானூறு பிறருடன் பகிர்ந்து கொள்ளும் உணர்வுகளை வெளிப்படுத்தும் பாடல்கள்! அகநானூறு-தானே உணர்ந்து கொள்ளத் தக்கவைகளை



அண்ணாவுக்கு முஸ்லீம்கள் தந்த மலர் முடியுடன்.



ம. பொ. சிவஞானத்துடன்.

வெளிப்படுத்தும் பாடல்கள்'' என்றார் அண்ணா.

★

அண்ணா அவர்கள் மிகப் பெரியவர்களின் கருத்துக்களை மறுப்பார்.

ஆனால், ஒரு துளி கூட அவர்களது மரியாதையைக் குறைக்கும் சொல்லைப் பயன்படுத்த மாட்டார்.

துவக்க காலத்தில் 'ராமாயணம்' பற்றி அண்ணா-நாவலர் சோமசுந்திர பாரதியாருடன் வாக்கு வாதம் நடத்தினார்.

அன்று தலைமை வகித்தவர் வாக்கு வாதம் செய்யும் இருவரையும் அறிமுகப்படுத்தும்போது 'இரண்டு பேராசிரியர்கள் இன்று மோத இருக்கிறார்கள்'' என்று கூறி விட்டார்.

அண்ணா அவர்கள் பேச எழுந்த போது—

''தலைவர் அவர்கள்-இரு பேராசிரியர்கள் பேசுவார்கள் என்று கூறினார், அது சரியல்ல; ஒரு பேராசிரியர் வந்திருக்கிறார். அவருடன் வாதம் செய்ய மாணவன் வந்திருக்கிறேன். நான் நாவலரின் கருத்தை மறுப்பவனே தவிர-அவரது வயதை-அறிவை-மதிக்கத் தகுந்த வாழ்வை மறுப்பவன் அல்ல'' என்று கூறியபோது நாவலரே மனம் நெகிழ்ந்து விட்டார்.

முஸ்லீம் லீக்கிலுள்ள அப்துல் சமது அண்ணாவிடம் பேரன்பு கொண்டவர்.

பல ஆண்டுகளுக்கு முன்......ஒரே மேடையில் அண்ணாவுடன் முதன் முறையாக பேசும் வாய்ப்பு கிடைத்தது. அப்போது அப்துல் சமது ''நான் அறிஞர் அண்ணாவின் பேச்சையும் எழுத்தையும் பார்த்துத்தான் பேச்சாளரானேன்.

''துரோணரிடம் நேரடியாகப் பாடம் பெற முடியாத ஏகலைவன் அவரது உருவத்தை வைத்துக் கொண்டு வில் வித்தை கற்றதுபோல் நான் பேச்சாற்றலை அண்ணாவை மனத்தில் வைத்துக் கொண்டு பெற்றேன்'' என்றார்.

அடுத்துப் பேசிய அண்ணா ''அப்துல் சமது என்னை துரோணாச்சாரியாருக்கும் அவரை ஏகலைவனுக்கும் ஒப்பிட்டார். துரோணாச்சாரியார் ஏகலைவனிடம் காணிக்கை கேட்டார். அதுவும் வில் வித்தைக்கு ஆதாரமான கட்டை விரலை காணிக்கை கேட்டார். அதுபோல் நான் அவரிடம் காணிக்கைக் கேட்க மாட்டேன்'' என்றார்.

இவ்விதம் பிற இயக்கங்களில் உள்ளவர்களின் மனதையும் கவர்ந்தவர் அண்ணா.

சென்னை மாநகராட்சித் தேர்தல் நடந்து கொண்டிருந்த நேரம்.

எவ்வளவு இடங்கள் தி. மு. கழகத்திற்கு வரும் என்ற பேச்சு, தலைவர்களிடையே வந்தது.

தேர்தல் கலையில் வல்லவரான கருணாநிதி 40-45 இடங்கள் வரும் என்றார்.

அவ்வளவு வராது என்றார் நிதானத்திற்குப் பெயர் போன அண்ணா.

''எவ்வளவு பந்தயம்?'' என்று கேட்டார் கலைஞர்.

ஒரு பவுன் மோதிரம் போடுகிறேன் என்றார் அண்ணா.

கருணாநிதி சொன்னது போல்-தி. மு. கழகம் 45 இடங்களில் வெற்றி பெற்றது. பேசாமல் அண்ணா ஒரு பவுன் மோதிரம் வாங்கிப் போட்டார் கருணாநிதிக்கு....! அதைப் பற்றி அவரே கூறினார்—கடற்கரைக் கூட்டத்தில்:

''நான் திருமணமாகி இன்னும் என் மனைவிக்கு என் கையால் ஒரு நகை வாங்கிப் போட்டதில்லை. ஆனால், இந்தக் கருணாநிதியிடம் போட்ட பந்தயத்தால் கொளுத்தும் வெயிலில், கடை கடையாகச் சென்று பார்த்து ஒரு மோதிரம் வாங்க வேண்டி வந்தது.''

இவ்விதம் உழைக்கும் தொண்டர்களைத் தட்டிக் கொடுத்து வேலை வாங்கியவர் அண்ணா.



வெற்றிப் பெருமிதத்தில் தன்னை வளர்த்தவர்களை மறந்து விடுவது இயல்பு.

ஆனால், தி. மு. கழகம் மாநகராட்சியில் பெரும்பான்மை பெற்றதும் அண்ணா அவர்கள் இட்ட கட்டளை—பதவியேற்பதற்கு முன் ஜஸ்டிஸ் கட்சியின் பெருந் தலைவர்—ரிப்பன் மாளிகையின் முன் நிற்கும் பி. டி. தியாகராயருக்கு மாலை அணிவித்து நமது நன்றியுணர்ச்சியைத் தெரிவியுங்கள் என்றார்.



ஒரு நாள் அண்ணாவின் இல்லத்திற்கு மாநகராட்சி தி. மு. கழகத்தினர் வந்தனர்.



ஜின்னாவைக் காண பம்பாய் புறப்பட்ட குழு:
தே. மெ. பாலசுப்பிரமணியம், டி. ஏ. வி. நாதன், பெரியார்,
சண்டே அப்சர்வர் பாலசுப்பிரமணியம், அண்ணா.

''அண்ணா''

''என்ன?''

''உங்களுக்கு ஒரு சிலை வைக்கலாமென்று...''

''எனக்கேன் சிலை?... வேண்டாம்.''

''இல்லை; சிலை வைத்துத்தான் ஆக வேண்டும்.''

''அப்படியானால் நான் சொல்வதைக் கேளுங்கள். தமிழ் நாட்டின் புகழை உயர்த்தியுள்ள காமராசருக்கும்—சத்தியமூர்த்திக்கும் சிலை வையுங்கள்'' என்றார் அண்ணா.

பெருந்தன்மையும் — நாகரிகமும் கலந்த தலைவரின் உத்தரவுப்படியே காமராசருக்கும் சத்தியமூர்த்திக்கும் சிலைகள் வைக்கப்பட்டன.

அண்ணாவைத் தலைமையேற்க சம்பத் அழைத்த போது, ''இந்த மாநாட்டில் ஒரு புதுமை. தீர்மானம் என்று எதுவும் இல்லை. அண்ணா அவர்களின் பேச்சே தீர்மானம். அதுவே முன்னுரை—பின்னுரை — ஆதிக்கக்காரர்களுக்கு எச்சரிக்கை உரை'' என்றார்.

அந்த மாநாட்டில் பேசிய ஒருவர் ''இங்கு அசாமில் நடப்பது போல் கலவரங்களையும் நடத்தத் தயார்!'' என்றார்.

உடனே அண்ணா குறுக்கிட்டுப் பேசியபோது, ''அந்த அசாம்கள் நமக்கு வேண்டாம். இது பண்புள்ள தமிழகம். அமைதிக் கிளர்ச்சியே போதுமானது'' என்றார்.

★

இந்தி எதிர்ப்புப் போர் மீண்டும் தொடங்கும் நிலை வந்தது. சம்பத் முன்னின்று கோடம்பாக்கத்தில் இந்தி எதிர்ப்பு மாநாடு நடத்தினர்.

★

தி.மு. கழகம் நடத்திய கிளர்ச்சி-போராட்டத்தின் விளைவாகப் பண்டித நேரு, ஆட்சிமொழி பற்றிய ஓர் உறுதிமொழி தந்தார்.

''இது போதாது; போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டும்'' என்று பல தலைவர்கள் கூறிய போது, அண்ணா அவர்கள் ''பெரியவர்களின் வார்த்தைகளை நம்புவோம்; போராட்டத்தைக் கை விடுவோம்'' என்று கூறிப் போராட்ட எண்ணத்தைக் கைவிடும்படி செய்தார்.

✶

கழகத்தில் சம்பத் - கண்ணதாசன் பிரிந்து போகும் கட்டம் வந்தது.

அவர்கள் எவ்வளவுதான் அண்ணாவை விமர்சனம் செய்தாலும் அவர் திருப்பி விமர்சனம் செய்யாமலேயே இருந்தார்.

கட்சியில் வன்முறை புகுந்துவிட்டது என்று கண்டித்து சம்பத் வெளிப்படையாக உண்ணாவிரதம் இருந்தார்.

அண்ணாவோ-சம்பத் உண்ணாவிரதம் இருக்கிறாரே என்ற ஏக்கத்தில் பல நாட்கள் உண்ணாமலேயே இருந்தார்.

சம்பத் உண்ணாவிரதத்தைக் கைவிடுகிற போது ஓடோடிச் சென்று பழரசம் தந்து உச்சி மோந்து முத்தமிட்டார்.

சம்பத்" பிரிந்து போன நேரத்தில் கூட சம்பத்தைப் பற்றி அண்ணா கூறினார்:

''சம்பத் ஒரு வைரக் கடுக்கன்; காது புண்ணாகியிருப்பதால் அதைக் கழற்றி வைத்திருக்கிறோம். தேவையான போது எடுத்து மாட்டிக்கொள்வோம்.''

✶

கவிஞர் கண்ணதாசனைப் பற்றி ஒரு கவிதை வெளியீட்டு விழாவில் புகழ்ந்தார்:

''என்னை விட்டுக் கண்ணதாசன் போயிருக்கலாம். அதற்காகக் கவிதையுலகைப் பற்றிப் பேசும் போது அவரை மறப்பது என்பது முடியாத காரியம். அவர் இல்லாத கவிதையுலகம் ஒரு சூன்யமாகவே இருக்கும்'' என்றார்.

இந்தப் பேச்சைக்கேட்டுசம்பத்தும் -கவிஞருமே மனம் நெகிழ்ந்துபோனார்கள்.

சம்பத் கட்சியைவிட்டு வெளியேறியபோது-அதுவரை அண்ணாவை 'அறிஞர் அண்ணா' என்று கூறி வந்தவர் 'தோழர் அண்ணாதுரை" என்று கூற ஆரம்பித்தார்.

இதைப் பற்றி ஒரு முறை பேசிய அண்ணா அவர்கள்—''காலமெல்லாம் என்னை வாயார 'அண்ணா, அண்ணா" என்று அழைத்தான் சம்பத். 'நானும் தம்பி சம்பத் வந்தான்; போனான்' என்றுதான் பேசிவந்தேன். இப்போது என்னைத் 'தோழர் அண்ணாதுரை' என்று அழைப்பதாகக் கேள்விப்பட்டேன். பிள்ளை வளர்ந்துவிட்டான் என்பதையே இது காட்டுகிறது; ஆகவே இனிமேல் அவனைப் பற்றிக் குறிப்பிடுகிறபோது தலைவர் சம்பத் என்றே குறிப்பிடுவேன்'' என்றார்.

ஆரம்ப கால நண்பர்களுடன்—வலக் கோடியில் நிற்பவர் சி. பி. சிற்றரசு.





சட்டமன்றத்தில் நிதிநிலை அறிக்கையைச் சமர்ப்பிக்கிறார் நிதியமைச்சர் அண்ணா.

1962 தேர்தல் வந்தது. காஞ்சிபுரத்தில் அண்ணா தோற்றார். அவர் தோல்வியை எப்படிக் கருதினார் என்பதை அவரே பச்சையப்பன் கல்லூரியில் விளக்கினார்.

''புனித ஜெருசலத்திற்காக ஐரோப்பிய நாடுகள் போரிட்டன. ஒப்பந்தம் ஏற்பட்டது. ஒரு நிபந்தனையும் விதிக்கப்பட்டது. ஐரோப்பியப் படைக்குத் தலைமை வகித்த ரிச்சர்டு மன்னன் உள்ளே வரக் கூடாது; மற்றவர்கள் வரலாம் என்பதே அந்த நிபந்தனை. இதைக் கேட்ட அந்த மன்னன் 'நான் உள்ளே போகாவிட்டால் என்ன? என் படை உள்ளே போகிறது' என்றான். அது போல் சட்ட சபையில் என்னை நுழைய விடவில்லை. அதனால் என்ன? என் தம்பிமார்கள் ஐம்பது பேர் உருவில் நான் செல்கிறேன்'' என்றார்.

★

ராஜ்ய சபைக்கு அண்ணா தேர்ந்தெடுக்கப்பட்டுப் போனார். அப்போது தான் அவரது அரசியல் சித்தாந்தத்தில் மாறுதல் ஏற்படத் தொடங்கியது

1962- விலைவாசி எதிர்ப்புப் போராட்டத்தில் அவர் வேலூர் சிறைக்குச் சென்றார்.

சீனாவின் படையெடுப்பும் அப்போது நிகழ்ந்தது. வெளியே வந்தவுடன் கோட்டை மைதானத்தில், இந்திய அரசுக்கு ஆதரவு தந்தார்.

சீனப் படையெடுப்பால் தேச ஒற்றுமைக்கு ஆபத்து என்று கண்டு ''தனி மனிதனை விடக் கட்சி முக்கியம்; கட்சியைவிட நாடு முக்கியம்'' என்ற தத்துவத்தை மேற்கொண்டார்.

நாடு அபாயத்திலிருக்கும்போது பிரிவினை கேட்பது சரியல்ல என்று எண்ணத் தொடங்கினார்.

தனது எண்ணம் மட்டும் போதாது; கட்சியின் எண்ணத்தையும் அறிய அவாக் கொண்டார் அந்த ஜனநாயகவாதி.

ஆகவே, பொதுக் குழுவைச் சென்னையில் கூட்டினார். தமது எண்ணத்தைச் சொன்னார்.

அனைவருக்கும் ஒரு சீட்டு தரப்பட்டது. அதில் அவர்களது எண்ணத்தை ஒளிவு மறைவு இன்றி எழுதச் சொன்னார்.

கட்சியின் எண்ணமும் அவருக்குச் சாதகமாக இருந்தது; திராவிட நாடு பிரிவினைக் கொள்கை கைவிடப்பட்டது.

காலத்தின் அழுத்தத்திற்கேற்பப் பரிணமத் தத்துவ முறைப்படி முடிவு எடுக்கும் போக்கு அண்ணுவுக்குக் கடைசி காலத்தில் ஏற்பட்டதல்ல.

1958-ல் காஞ்சிபுரத்தை அடுத்த தம்மனூரில் விநோபாவும் அண்ணுவும் சந்தித்தார்கள்.

திராவிட நாடு கோரிக்கை பற்றி விளக்கினர் அண்ண.

இந்தியாவின் பலம் குன்ருது திராவிடப் பிரிவினையால்—என்று எடுத்துக் கூறினர் அண்ண.

விநோபா மிகக் கூர்மையான ஒரு கேள்வியைப் போட்டார்:

''திராவிடப் பிரிவினையால் இந்திய ஒற்றுமை பலவீனப் பட்டுவிடும் என்று உங்கள் மனத்தில் பட்டால் என்ன செய்வீர்கள்?''

உடனே அண்ண ''திராவிடப் பிரிவினையைக் கைவிட்டு விடுவேன்'' என்ருர்.

இதனுல் பெரிதும் மனம் மகிழ்ந்து போன விநோபா தமிழிலேயே ''அண்ணுதுரை கள்ளங் கபடமற்ற மனிதர்'' என்று கூறினர்.

✶

விலைவாசிப் போராட்டத்தின் போது சிறையிலிருந்த பலர், சிறைக் கொடுமை தாங்காது மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுத்து விட்டு வெளியே வந்து விட்டனர்.

வெளியே வந்தவர்களுக்கு வெட்கம்; கட்சியோ அவர்கள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இந்த நிலையில் அண்ண அவர்கள் தமது பெருந்தன்மையான உள்ளம் திறந்து சொன்னர்:

''சர்க்காரே அவர்கள் எழுதிய மன்னிப்பை ஏற்று மன்னித்தபோது...... அவர்களின் அண்ணனை நான் மன்னிப்பதில் தவறு என்ன?''

✶

இத்தகைய பெரும் மனதான போக்கு 1967-ல் அவரை வெற்றிக்கு அழைத்துச் சென்றது.

எல்லாக் கட்சிகளின் ஆதரவையும் அவர் திரட்டினர். ஓர் ஓட்டுக் கூடச் சிதறிப் போகாதபடி செய்தார். இதை அவரே கோடம்பாக்கம் மாநாட்டில் கூறினர்:

''அருமையான வலை பின்னியிருக்கிறேன்; அதிலிருந்து யாரும் தப்ப முடியாது.''

✶

ஆட்சி பீடம் ஏறுவதற்கு மக்களால் அவருக்கு அழைப்பு விடுக்கப் பட்டது.

அப்போது அவர் மிக அடக்கத்தோடு கூறினர்:

''இது எதிர்பாராத அழைப்பு!... இன்னும் ஐந்து வருடங்கள் கழித்துத்தான் இந்த அழைப்பு வரும் என்று நினைத்தேன்.''

சம்பத்—அண்ண



ஒருவர் அமர, இன்னெருவர் இழுக்க...





மறைந்த கோ. சு. மணியின் துணைவியாருக்கு ஆறுதல் கூறும் அண்ணா.

மார்ச் ஆறாம் தேதி பதவியேற்பு. முதல் நாள் இரவு முழுவதும் அண்ணாவுக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. காரணம் என்ன? அண்ணாவே சொல்கிறார்:

''கண் மூடித்தான் படுத்திருக்கிறேன். ஆனால், உள் மனத்தில் கண்ணீரும் கம்பலையுமாக உள்ள ஏழை—குடிசையில் வாழ்வோர்—கூனிக் குறுகி வாழ்க்கை நடத்துவோர் வந்து 'என்ன வாழ்வு எங்களுக்கெனத் தரப் போகிறாய், அண்ணா?' என்று கேட்கிறார்கள்.''

★

பதவியேற்பு வைபவம் முடிந்து ராஜாஜி மண்டபத்திலிருந்து கீழே இறங்கி வருகிறார். எதிரே மக்கள் கூட்டம்! தனக்குப் பதவியளித்த தம்பிகளின் கூட்டம்!

அங்கே நான் போக வேண்டும் என்கிறார், ஐ. ஜி.யிடம்.

பிறகு தம்பிமார்களின் கூட்டத்தில் ஐக்கியமாகி விடுகிறார். ஆரவாரம் அளவுகடந்து — உணர்வு பெருக்கெடுக்கிறது.

சட்ட சபையில் அண்ணா செய்த வாதப் பிரதிவாதங்கள் சுவைக்களஞ்சியமாகவே இருக்கும்.

முதலமைச்சரான பிறகு தமது ஆட்சியின் சாதனைகளை எடுத்து விளக்கிக் கொண்டிருந்தார்.

புளி விலை குறைந்தது; மிளகாய் விலை குறைந்தது — என்று அண்ணா கூறிக் கொண்டிருக்கும் போது ஓர் உறுப்பினர் குறுக்கிட்டு—

''புளி விலை குறைந்தது யாரால்? உங்களாலா?'' என்றார்.

உடனே அண்ணா கோபப்படாமல், ''புளி விலை குறைந்தது, புளிய மரத்தினால்!'' என்று கூற - கேள்வி கேட்டவர் கூட சிரித்துக் கொண்டே அமர்ந்தார்.

அண்ணு தமது மனத்துக்குச் சரியெனப்பட்டதை வரவேற்கும் பண்பு படைத்தவர்; பாராட்டும் நெறி கொண்டவர்.

ஓ. பி. ராமசாமி ரெட்டியார் முதலமைச்சராய் இருந்தபோது 'இனம் ஒழிப்புச் சட்டம்' வந்தபோது, மனமுவந்து வரவேற்ருர்.

காங்கிரஸ் கொண்டு வந்த மதுவிலக்குச் சட்டத்தை வரவேற்ருர்; தாம் ஆட்சி பீடம் ஏறிய காலத்திலும் ''அந்தக் கொள்கையை உறுதியாகக் கடைப் பிடிப்பேன்'' என்ருர்.

டாக்டர் சுப்பராயன் காலத்தில் திருவள்ளுவருக்கு ஸ்டாம்பு வெளியிட்டதைப் பாராட்டி வரவேற்ருர்.

டாக்டர் யு. கிருஷ்ணராவின் தந்தை போன்ற பாசத்தை வாழ்த்தினர்.

நேரு மறைந்தபோது ஜனநாயகத்தின் ரட்சகன் என்று மனதாரப் போற்றினர்.

லால்பகதூரைப்பற்றி 'எளிமையும் கடமை யுணர்வும் மிக்க தலைவர்' என்று பாராட்டினர்.

காமராசரைத் 'தமிழ்த் தாயின் தவப் புதல்வர்; தங்கக் காப்புக்கு ஒப்பானவர்' என்று கூறிப் பூரித்தார்.

நாடக வேடத்தில் அண்ணு



இப்படி ஒவ்வொருவரையும் குணம் கண்ட இடத்துப் புகழ்ந்தார்.

✶

தம்மைப்பற்றி அண்ணு குறிப்பிடும் போது 'அறையில் நடப்பதை அம்பலத்திற்குக் கொண்டு வருபவன் அண்ணுதுரை' என்று கூறுவார்.

அதுபோல் பிறர் சொல்லக் கூசும் உண்மையை-நாட்டு மக்களின் நன்மைக்காகத் தயங்காமல் எடுத்துரைப்பவர் அண்ணு.

67-க்குப் பின் காங்கிரஸ் அல்லாத அரசுகள் அமைந்தபோது புதிய புரட்சிகள், புதிய மரபுகள் ஏற்படும் என்று கருதி இருந்தபோது மிகத் தெளிவாகத் தமிழக மேலவையில் அண்ணு பேசினர்.

''புதிய மரபுகளைப் புதிய ஆட்சியால் ஏற்படுத்துவோம்-என்று தான் நம்பி வந்தோம். ஆனல், இன்றிருக்கும் நிலையில் செட்டாகக் குடும்பத்தை நடத்தி நல்ல பெயர் எடுக்க நினைக்கும் குடும்பத்துப் பெண் போன்ற நிலையில் இருக்கிருேம்'' என்று புதிய மரபுகளை ஏற்படுத்த முடியாத தன்மையை— பகிரங்கமாகச் சொன்னவர் அண்ணு.

✶

தஞ்சைப் பொதுக் குழுவில் தி.மு. கழகத்தில் சிலர், நாட்டு மக்கள் மதுவிலக்கை எதிர்க்கிருர்கள் என்று கூறியபோது, அண்ணு அன்று ஆற்றிய உரை ஒரு பேரிலக்கியமாகும்.

மது வேண்டும் என்று கூறுவோரின் காரணங்களை அலசி அலசி ஆராய்ந்தார். அதிலுள்ள பொய்மைகளை விளக்கினர்.

இறுதியாக அவர் பேசினர்:

''எங்கள் வீட்டுக்குப் பக்கத்திலிருந்த பெரியவர்கள் கள் குடித்ததால் கெட்டதை நான் நேரடியாகப் பார்த்திருக்கிறேன். அவர்களது குடும்பம் செழித்திருந்ததையும் கள் குடித்ததால் சீரழிந்ததையும் பார்த்திருக்கிறேன். கள்ளைக் குடித்துவிட்டு வந்து அடிப்பதால் அந்தத் தாய்மார்கள் அடி தாளாமல் எழுப்பிய அழுகுரல் இன்னும் என் காதுகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அந்தக் கூக்குரல் ஒலித்துக் கொண்டிருக்கிறவரை நான் மதுவிலக்கில் அசையாத நம்பிக்கை கொண்டிருப்பேன்'' என்ருர்.



கலைஞருடன் அறிஞர்

ஆட்சிக்குச் சோதனைக் கட்டங்கள் தொடங்கின.

மாணவர்களின் போராட்டம் எழுந்தது. மாணவர்களை அழைத்து விடியும் வரை பேசினார்.

ஒவ்வொரு மாணவரையும் பார்த்து ''தம்பி...என்ன சொல்றீங்க? அந்தத் தம்பி என்ன சொல்லுது?'' என்று கேட்ட பவ்யத்தைக் கண்டு மாணவர்கள் தங்கள் இதயங்களையே அவருக்குக் காணிக்கையாக்கினார்கள்.

தனி நாடு வேண்டும் என்று பிடிவாதமாகக் கூறிய மாணவர்களிடம் காங்கிரஸ் சார்பில் வந்துள்ள மாணவர்களைக் காட்டி 'அவர்களைத் திருப்தி செய்யுங்கள்; பார்க்கலாம்!' என்று கேட்க—அவர் சாதுர்யம் கண்டு வியந்தனர்.

✶

பஸ் தொழிலாளர் — மாணவர் மோதலின் போது ஸ்டிரைக் செய்த டாக்டர் மாணவர்களைக் காண அண்ணா சென்றார்.

ஒரே எதிர்ப்புக் கோஷம்—சரமாரியான கேள்விகள்!

குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டார் அண்ணா. 'கொடுக்காதே!' என்றனர் சிலர்.

மனம் முறிந்து சோர்வடையும் அந்த நேரத்திலும் அண்ணா புன்னகை பூத்து, ''உங்கள் மனக் கொதிப்பை அறிகிறேன். என்ன இருந்தாலும் நான் உங்கள் அண்ணன் அல்லவா?'' என்று இதயம் கரைந்து போகும் விதத்தில் வேண்டுகோள் விடுத்தார்.

✶

அவர் நோய்வாய்ப்பட்ட போதும் சட்ட சபையில் தவறாமல் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் கலந்து கொள்வார்.

திடீரென எழுந்து தனது அறைக்குப் போவார்; தயாராக அங்கு

# இப்பொழுது!

# 12 நாட்களில் வெண்மை பளிச்சிடும் பற்கள்!

சக்தி வாய்ந்த புதிய
செய்முறை.
பனிரெண்டே நாட்களில்
பற்களுக்கு அதி
வெண்மையையும்
ஆரோக்கியத்தையும்
அளிக்கிறது




இப்பொழுது பெப்ஸொடென்ட் மூன்று வழிகளில் மேம்படுத்தப்பட்டிருக்கிறது. புதிய செய்முறை, புதிய சுவை, புதிய பேக். பல ஆண்டு ஆராய்ச்சியின், விளைவாக உருவான புதிய செய்முறையின்படி பெப்ஸொடென்டில் இப்பொழுது இரியம் ப்ளஸ் LD3 என்ற கலவைப் பொருள்கள் சேர்க்கப்பட்டிருக்கின்றன. சக்தி வாய்ந்த இந்தப் பொருள்கள், பற்களின் மீதுள்ள மங்கலான படலத்தைப் போக்கி, பற்களுக்குப் பிரகாசத்தையும் இயற்கையான பளபளப்பையும் அளிக்கின்றன. சக்தி வாய்ந்த அப்பொருள்கள், கேடு விளைவிக்கும் நோய்க்கிருமிகள் உள்ள உணவுத் துகள்களை அகற்றி, பற்சிதைவு நோயைத் தடுக்கின்றன. மேலும் துரிதமாகச் செயலாற்றும் அதன் ஏராளமான நுரை, பற்களுக்கு இடையிலுள்ள எல்லா இடுக்குகளிலும் புகுந்து, நன்கு சுத்தம் செய்கிறது. தவிரவும், பெப்ஸொடென்டின் புதிய சக்தி வாய்ந்த 'மின்ட்' சுவையை நீங்கள் பெரிதும் ரசிப்பீர்கள்! இன்றே புதிய பெப்ஸொடென்ட் வாங்குங்கள். இது பனிரெண்டே நாட்களில், உங்கள் பற்களில் வெண்மை பளிச்சிடச் செய்வதைக் காண்பீர்கள்!

| புதிய செய்முறை | புதிய சுவை | புதிய பேக் |
|---|---|---|

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான
தயாரிப்பு



உலகத் தமிழ் மாநாட்டு ஊர்வலம் காணும் ஜனாதிபதி ஜாகீர் உசேன், கவர்னர் உஜ்ஜல் சிங்குடன் அண்ணா.

டாக்டர் ஊசி மருந்து வைத்திருப்பார். அதைப் போட்டுக் கொண்டு, கையைத் தேய்த்தவாறு வந்து மறுபடியும் சபையில் கலந்து கொள்வார்.

மதியம் ஒரு கொடுமையான நிகழ்ச்சி நடைபெறும். உணவுக்குழாயில் அவருக்கு நோய் இருக்கிறது என்று தெரியாத நேரம். ஆனால் நோய் முற்றிவரும் நேரம்.

சாப்பாட்டு வேளையில் கஞ்சியை எடுத்து வாயில் ஊற்றுவார். கஞ்சி உள்ளே இறங்காது; லேசாகத் தொண்டைக் குழியில் தடவிவிட்டுக் கொண்டு—அந்தக் கஞ்சியை உள்ளே இறக்குவார்.

உடனே புறப்பட்டு சபைக்கு வந்து ஒரு மணி நேரம்—இரண்டு மணி நேரம் என்று உரையாற்றுவார், நோயின் கொடுமையைச் சகித்துக் கொண்டு!

ஏழ்மையிலேயே பிறந்து ஏழ்மையிலேயே வளர்ந்ததால், ஏழை எளியவர்கள்பால் அளவுக்கு அதிகமான பற்று அண்ணாவுக்கு.

அவர் ஆட்சிப் பொறுப்பேற்று ஒரு சில மாதங்களே ஆயின!

அதற்குள் குடிசையில் வாழ்வோரில் சில பகுதியினர் வார்னிஷைக் கள்ளத்தனமாகக் குடித்து அகால மரணமடைந்தனர்.

அவர்கள் தவறு செய்தவர்கள்—சட்டப்படி.

அந்தத் தவற்றால்— பிணமாகிச் செத்துக் கிடக்கிறார்கள்.

அந்த ஏழைகளின் பால் அன்பு கொண்டவரோ-சட்டத்தைக் காக்கும் முதலமைச்சர்!

என்ன செய்தார் முதலமைச்சர் அண்ணா? ஓடோடிச் சென்று அந்தக் குடும்பங்களுக்கு அனுதாபம் கூறினார். மருத்துவ மனையில் இருப்பவர்களுக்குப் புத்திமதி கூறினார்.

'என் ஏழை மக்கள் செத்துக் கிடக்கும்போது சட்டப் பிரச்னைக்கு இடமில்லை; இது மனிதாபிமானப் பிரச்னை' என்று செயலில் எடுத்துக் காட்டினார். இத்தனைக்கும் அவர் சாராயத்தை—கள்ள மதுவை அருந்துவதை வெறுப்பவர்.

# இதோ வருகிறது மாடர்ன் குபு-குபு வண்டி— மகத்தான 5 வகை புதிய ரொட்டிகளுடன்!

**மசாலா ரொட்டி...**
வாய்க்கு விறுவிறுப்பு

**பழவகை ரொட்டி...**
சக்தியோடு சுவை

**இனிப்பு ரொட்டி...**
இன்பக் கனியமுது

**பழுப்பு ரொட்டி...**
நலம் தரும் இனிமை

**பால் ரொட்டி...**
போஷிக்கும் சத்துணவு

ஓடிப பிடியுங்கள் அறுசுவை எக்ஸ்பிரஸ்.

சலிப்புற்ற நாவிற்கு தினமும் ஒருபுதுமையைவழங்குகிறது "மாடர்ன்"! தேர்ந்தெடுக்க 5 நவீனவகைகள். உங்களுக்கு விருப்பமான வகையை எளிதில் தெரிந்தெடுக்க வண்ண வண்ண மேலுறைகள். தவிர நீங்கள் என்றும் விரும்பும் மாடர்ன் வெள்ளை ரொட்டியும் உண்டு. புரதச்சத்து, வைட்டமின்கள், தாதுப்பொருள்கள் ஆகிய-வற்றுடன் இணையற்ற 'மாடர்ன்' முறையில் பக்குவமும் பெற்ற மகத்தான ரொட்டி. அதுவும் சீக்கிரமே புதிய பாக்கெட்டில் வரப் போகிறது. சிறந்தது எதுவோ அதையே உங்கள் அன்புக் குடும்பத்தினருக்கு அளியுங்கள். அவர்களுடைய உணவில் தவறாது தினமும் இடம் பெறட்டும் மாடர்ன்.

**மாடர்ன்** மகத்தான ரொட்டி



மாடர்ன் பேகரீஸ் இந்தியா லிமிடெட்
டெல்லி . பம்பாய் . சென்னை . அகமதாபாத் . கொச்சி

ASP/M-1

எனினும் ஏழைகள் என்றதும்அதை யெல்லாம் மறந்து ஓடோடிச் சென்ருர். கண்ணீர் மல்க நின்று ஆதரவு தந்தார்.

ஏழை மக்களுக்கு உதவும் படிஅரிசி திட்டத்தினுல் நிதிப் பற்ருக்குறை; வேறு உதவியும் இல்லே என்ற இக்கட்டான நிலே உருவான போது வீரஞ் செறிந்த குரலில் முழங்கினுர்:

''ஏழை மக்களேக் காப்பாற்றியே தீருவேன்; மடிப் பிச்சை ஏந்தியாவது பிச்சை எடுத்தாவது ஏழை மக்களேக் காப்பாற்றியே தீருவேன்.''

சட்ட மன்றத்தில் வாழ வசதியற்ற காரணத்தால், ஏழையொருவன் இறந்துவிட்ட காட்சியைப் படமெடுத்து எதிர்க் கட்சியினர் காட்டிப் பேசிய போது அண்ணு— ''இன்னும் இரண்டே ஆண்டுகள்—நான் நினேக்கிற முறையில் ஆட்சி நடக்க அனுமதியுங்கள்! இந்தக் கொடுமைகள் ஏழைகளுக்கு நேராமல் செய்து காட்டுகிறேன்'' என்று முழங்கினுர்.

ஒரு நாள் இரவு — கோட்டையில் முதலமைச்சர் அறையில் விளக்குகள் எரிந்து கொண்டிருக்கின்றன. இன்னுேர் அமைச்சரின் அறையின் விளக்குகளும் எரிந்து கொண்டிருக்கின்றன.

சிறிது நேரம் கழித்து அண்ணு அந்த அமைச்சரை அழைக்கிருர்.

'என்ன கேட்க அண்ணு அழைத்தார்?' என்று யோசித்தவாறு அந்த அமைச்சர், அண்ணுவின் அறையில் நுழைந்தார்.

'வாருங்கள்' என்பது போல் தலேயை அசைத்து விட்டு அண்ணு சிறிது நேரம் யோசனேயில் ஆழ்ந்தார்.

பின்னர், மிகவும் வேதனேயடைந்த குரலில் தனது தம்பியிடம் ''தம்பீ! ஏழைகள் நம்மிடம் நிரம்பவும் எதிர் பார்க்கிருர்கள்; ஏதாவது செய்ய வேண்டும். யோசனேகள் இருந்தால் சொல்'' என்று கூறினுர்.

நள்ளிரவிலும் ஏழைகளேப்பற்றியே சிந்தித்தார் அவர்.

அவரது உயிர் பிரிந்த வேளேயில் லட்சோபலட்சம் ஏழைகள், வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு கதறினர். சிலர் உயிரையே விட்டார்கள்.



அமெரிக்க டாக்டர் மில்லருடன், நியூயார்க் மருத்துவ மனேயில் அண்ணு.

சிகிச்சை முடிந்து தாயகம் திரும்பியபோது அண்ணுவின் இல்லத்தில் வரவேற்பு.





ஓய்வாக அண்ணு படுத்திருக்கிருர். அருகில் விளையாடுவது முரசொலி மாறனின் மகன் புகழ்!

இவையெல்லாம் ஏன் என்பதற்கு, அண்ணுவின் ஏழைகளின் பேரில் காட்டிய வரம்பற்ற பற்றே காரணம்!

அமெரிக்காவிலிருந்து அண்ணு திரும்பி வருகிருர், சிகிச்சையை முடித்துக் கொண்டு!

குளிர் உள்ள அறையும், உலவுவதற்குத் தோட்டமும் உள்ள வீடு தேவை; குளிர்பதனச் சாதனம் பொருந்திய காரும் தேவை—என்று டாக்டர்கள் கூறிய ஆலோசனையின் பேரில் தமிழகத்து அமைச்சர்கள் அப்படிப்பட்ட ஏற்பாடுகளைச் செய்தனர்.

அமைச்சர் கோவிந்தசாமி இருந்த வீட்டைத் தேர்ந்தெடுத்து அவரை வேறு வீட்டுக்குப் போகச் செய்துவிட்டு-அவர் இருந்த வீட்டைக் குளிர்பதனச் சாதனம் அமைத்துத் திருத்தினர். உலவிடத் தோட்டமும் அமைத்தனர். குளிர்பதனச் சாதனம் பொருத்தப்பட்ட காரும் தயாராகியது.

அண்ணுவின் குடும்பத்தாரும் அந்த வீட்டிற்கு முதல் தடவையாக வந்து பால் காய்ச்சிக் குடித்தனர்.

ஆனல், அந்த வீட்டிற்கு வந்து பார்த்த அண்ணு ஒரு கணம் யோசித்தார்.

''எதற்கப்பா இந்த ஆடம்பரம்? பழைய வீடு போதுமப்பா!'' என்று தம்பிகளிடம் உறுதியாகக் கூறி, தனது எளிமைப் பண்பைக் காட்டினுர்.

அந்த நேரத்தில்தான் காங்கிரஸ் தலைவர் காமராசர் கூட அண்ணு, மைசூரிலுள்ள குளிர் பகுதியான நந்தி மலையில் ஓய்வெடுக்கலாம்—என்ற யோசனையை வெளியிட்டார்.

ஆனல் அண்ணுவோ, இவற்ருல் எல்லாம் தமது எளிமைப் பண்பு குலைந்துவிடும் என்று கருதினுரோ என்னவோ-பழைய வீட்டை விட்டுப் போக மறுத்து விட்டார்.

சிகிச்சை பெற்று அமெரிக்காவிலிருந்து திரும்பிய நேரம்.

பொதுக் கூட்டங்களிலோ—சந்தடி நிறைந்த இடங்களிலோ அவர்போகக் கூடாது; பேசக் கூடாது என்று டாக்டர்கள் தடை விதித்திருந்தனர்.

அந்த நேரத்தில் தமிழ் நாடு பெயர் மாற்றத் திருவிழா வந்தது.

அந்த விழாவில் கலந்து கொள்ள வேண்டும் என்று அண்ணு முடிவெடுத்தார்.

டாக்டர்களும் நண்பர்களும் தடுத்தும் கேளாது விழாவில் கலந்து கொண்டு பேசினுர்.

"இந்த விழாவில் கலந்து கொண்டு பேசுவதால் உடலுக்கு ஊறு நேரும் என்று டாக்டர்களும் நண்பர்களும் தடுத்தனர்.

"தமிழ்த்தாய் ஏற்றம்பெறும் இந்த விழாவில்—தமிழ் நாடு பெயர் மாறும் விழாவில் தமிழனுகிய என்னுல் கலந்து கொள்ள முடியவில்லை யென்ருல் இந்த உடல் இருந்தே பயனில்லை என்று டாக்டர்களிடமும், நண்பர்களிடமும் கூறிவிட்டு வந்துவிட்டேன்."

தனது உடலையும் பெரிதெனக் கருதாத 'தமிழ்க் காதல்' கொண்டவர் அண்ணு.

அண்ணு அவர்கள் மருத்துவ மனைக்குப் போவதற்கு முன் திறந்தது கலைவாணர் சிலை.

கலைவாணர் என். எஸ். கே.யும் கடைசி முறையாக மருத்துவ மனைக்குப் போவதற்கு முன் திறந்தது அண்ணுவின் படம்!

கலைவாணர் சிலை திறப்பு விழாவில் எஸ். எஸ். வாசன் பேசுகையில் "கலைவாணரின் சிலையைத் திறக்க, பல ஆண்டு காலம் முயற்சி செய்தோம். ஆனுல், முடியவில்லை. அதற்கும் ஒரு 'காலம்' வர வேண்டும் என்றிருந்தது போலிருக்கிறது" என்ருர்.

அதற்குப் பதிலளித்துப் பேசிய அண்ணு அவர்கள் "வாசன் அவர்கள் காலம் என்று குறிப்பிட்டது-வைதீக முறைப்படி சொல்லும் காலம் அல்ல! கலைவாணரின் நண்பர்களான நாங்கள் ஆள்கின்ற காலம் வர வேண்டும் என்றுதான் வாசன் அவர்கள் குறிப்பிட்டார்" என்ருர்.

தமது கடைசி காலத்திலும் பகுத்தறிவு மணம் கமழப் பேசியவர் அண்ணு!

✶

மருத்துவ மனையில் படுத்துப் பேச முடியாத நிலையிலிருந்தபோதும் காமராசர், சி. சுப்பிரமணியம் போன்றவர்கள் வந்தபோது அன்பின் அறிகுறியாக—அடக்கத்தின் எடுத்துக் காட்டாக—பெருந் தன்மையின் விளைவாக அவர்களுடன் பேச முயன்றிருக்கிருர் அண்ணு அவர்கள்! அவர்கள் கை யமர்த்திப் பேச வேண்டாம் என்று சொல்லி யிருக்கிருர்கள்.

பாஞ்சாலத்திலிருந்து வந்த கவர்னர் உஜ்ஜல்சிங்கும் அவரது மனைவியார் சர்தாரிணியும் மருத்துவ மனைக்கு வருகிற போதெல்லாம் கண்ணீர் விட்டபடி வந்தார்கள்.

அண்ணு இருக்கும் அறைக்குள்ளே கவர்னர் நுழைந்து அண்ணுவைப் பார்க்கும் காலம் முழுவதும் கை கூப்பியபடி-கண்ணீர் தாரை தாரையாக ஒழுகியபடி நின்ருர்.

அண்ணு அவர்கள் மறைந்தபோது, "என் சகோதரனை நான் இழந்தேன்" என்று பாஞ்சாலத்தின் மைந்தர் குமுறி அழுது சொன்னது ஒன்றே அண்ணு — தமிழக எல்லைகளையும் கடந்து தேசியத் தலைவராக உயர்ந்து விட்டார் என்பதைக் காட்டுவதாகும்!

அவரது நோயைப் பற்றியும் முடிவைப் பற்றியும் அறியாத காலத்தில் ஒரு வாக்குவாதம் சட்டசபையில் நடந்தது.

உறுப்பினர்: நீங்கள் மக்களுக்கு நல்லாட்சியைத் தர முடியவில்லை. ஆகவே உங்களுடைய நாட்கள் எண்ணப்பட்டுள்ளன. (Your days are numbered)

அண்ணு: உறுப்பினர் கவலைகொள்ள வேண்டாம். எப்போதும் எனது காலடிகளை அளந்தே எடுத்து வைக்கிறேன். (My steps are measured)

அடையாறு மருத்துவ மனையில், அண்ணுவின் நாற்பதாண்டு கால நண்பர் செங்கல்வராயன் அண்ணுவைப் பார்க்கிருர். துக்கம் பீரிட்டுக் கொண்டு வருகிறது. இருந்தாலும் அடக்கிக் கொண்டு "அண்ணு! உங்களுக்கு ஒன்றுமில்லை! ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள்" என்கிருர்.

அண்ணு வெறுமை கலந்த பார்வையோடு அவரைப் பார்த்துக் கூறுகிருர்:

"என்ன ஓய்வு...செங்கல்வராயன். இனி நிரந்தர ஓய்வுதான்! (What rest Chengalvarayan, except eternal rest?)"

✶ ✶ ✶

# அண்ணாவும் பத்திரிகையாளரும்

"காலஞ்சென்ற அண்ணா, பத்திரிகையாளருடன் பழகுவதில் தனித்ததொரு சக்தியைப் பெற்றிருந்தார்" என்று கூறுவது மிகையாகாது. தானே ஒரு பத்திரிகையாளன் என்று சொல்லிக் கொள்வதில் மிகுந்த பெருமை கொண்டிருந்தார்.

தேர்தல் அலுவல்களும், அதனையொட்டிய பல பிரச்னைகளும் அவரது முழுக் கவனத்தையும் ஈர்த்து வந்த சமயம்.

அப்போது "நான் நிருபராகப் பணிபுரியும் 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' பத்திரிகைக்காக அண்ணாவைச் சந்தித்தேன். அவருடன் திரு நெடுஞ்செழியனும், திரு கருணாநிதியும் இருந்தனர். நான் கேட்ட கேள்விகளுக்குக் கொஞ்சமும் தயக்க மின்றிப் பதிலளித்து வந்தார். சந்தேகம் நேரும்போது தனது சகாக்களைப் பார்ப்பார். அவர்கள் கூறும் விளக்கத்தைக் கேட்டுவிட்டுத் தானே மேலும் தொடர்ந்து பதிலளிப்பார்.

திராவிட முன்னேற்றக் கழக ஆதரவாளர்களைப் பற்றிச் சிறிதும் தயக்கமின்றி "என்னிடம் பூரா நம்பிக்கை வைத்துள்ள சில நூற்றுக் கணக்கான படித்தவர்களைத் தவிர 1962 தேர்தல் வரை பாமர மக்களின் ஆதரவினாலேயே எங்கள் கழகம் வளர்ந்து வந்தது. ஆனால் 1962-ல் கிடைத்த ஐம்பது ஸ்தானங்கள், பலதரப்பட்டவர்களை எங்கள் பக்கம் ஈர்த்து விட்டது. ஆதலால் இனி எங்கள் கழகத்தை எந்தக் காரணத்தைக் கொண்டும் குறைவாக மதிப்பிடுவது நியாயமில்லை" என்றார்.

மற்றொரு சமயம். டில்லியிலிருந்து வந்த பிரபல பொருளாதார அறிஞர் திரு இ. பி. டபிள்யூ டகாஸ்டா அண்ணாவைப் பார்க்க விரும்பினார். பல அலுவல்களினால் அவர் காரியஸ்தர்கள் இந்த வாய்ப்பை அளிக்க இயலாதவர்களாக இருந்தனர். இருந்தாலும் பத்திரிகையாளரான எங்களுக்காக, விசேஷமாக பேட்டி தந்தார்.

சில நிமிஷங்களுக்குள்ளாகவே, பல நாட்கள் தொடர்பு உள்ளவர்கள் போல உரையாட ஆரம்பித்து விட்டனர் இருவரும்.

"மிஸ்டர் டகாஸ்டா, உங்களை நான் சந்திக்க இதுவரை வாய்ப்பு நேரவில்லை. எனினும் உங்கள் கட்டுரைகளை நிறையப் படித்துப் பலன் கண்டவர்களில் நானும் ஒருவன்" என்று அண்ணா சொன்னதைக் கேட்டு, திரு டகாஸ்டாவிற்கு விசேஷ மகிழ்ச்சி. யாரைப் பார்த்தாலும் நல்ல வார்த்தைகளைப் பேசித் தன் வசமாக்கிக் கொள்ளும் மன இயல்பை இயற்கையாகப் பெற்றிருந்தார், அண்ணா.

ஜனவரி 25, 1968. இரவு 11 மணி இருக்கும். சென்னை வந்திருந்த பிரபல சினிமா பத்திரிகை 'பிலிம் பேர்' ஆசிரியர் திரு பி. கே. கரஞ்சியா அண்ணாவைச் சந்திக்க விரும்பினார்.

அவர் மறுநாள் பகலில் பம்பாய்க்குத் திரும்ப வேண்டும். அதற்குள் அண்ணாவைச் சந்திக்க வேண்டும். எனக்கு அது சாத்தியமா என்று சந்தேகமாக இருந்தது.

இருந்தாலும் விட்டுக் கொடுக்காமல் "காலை 8-30 மணிக்கு வாருங்கள். அண்ணாவிடம் அழைத்துச் செல்கிறேன். பார்க்க முயல்வோம்" என்றேன்.

8-30 மணிக்கு அண்ணாவின் இல்லத்திற்குப் போனோம். அப்போதுதான் குடியரசு தின விழாவில் கலந்து கொண்டு விட்டுக் களைப்புடன் இருந்தார்.

இருந்தும் எங்களுக்குத் தயங்காமல் பேட்டி கொடுத்தார். பத்திரிகையாளரிடம் அவருக்கு அவ்வளவு பரிவு.

பதட்டப்படாத குணம்; பண்பு மிகுந்த உபசரிப்பு; அவசரப்படாத சூழ்நிலை. ஒளிவு மறைவு இல்லாத பதில்கள்...பொது வாழ்வில் முழுமையாக ஈடுபட்டிருக்கும்-பெரும் பதவியிலிருக்கும் அரசியல் தலைவரிடம் இவை அமைவது எளிதல்ல.

கே. எஸ். ராமானுஜம்



'ரிப்போர்ட்டர்ஸ் கில்ட்' ஆண்டு விழாவிற்குத் தலைமை வகித்துப்பேசு கையில் தன்னைப் பத்திரிகையாளருள் ஒருவராகவே உணர்ந்து உரையாற்றினார். அவர்களுடைய அன்றாடப் பிரச்னைகளைப் பூராவாக உணர்ந்துள்ள தன்மையை அவர் தனக்கே உரிய விதத்தில் விளக்கியபோது அங்கு குழுமி யிருந்த ஒவ்வொரு பத்திரிகையாளரும் பெரிதும் வியந்தனர்.

அண்ணா, தானாக எந்தப் பத்திரிகையிலும் விளம்பரம் தேடிக் கொள்ள முயன்றதாக நான் கேள்விப்பட்டதே கிடையாது.

பத்திரிகையாளர் தன்னையும் தன் கருத்துக்களையும் புகழ்ந்து எழுதினாலும், இகழ்ந்து எழுதினாலும் அவர்களிடம் ஒரே மாதிரி பழகும் இயல்பு கொண்டிருந்தார்.

பத்திரிகைச் சுதந்திரத்தை-பத்திரிகைகளின் ஜனநாயகத்தை-தர்மத்தை உண்மையாக, தீவிரமாக உணர்ந்து நடந்து கொண்ட பெரிய தலைவர்களில் அண்ணாவும் ஒருவராவார் என்று நிச்சயமாகச் சொல்லலாம்.

கோட்டையில் ஒரு நாள் நாங்கள் அண்ணாவைச் சந்தித்தபோது, விளையாட்டாக ஒரு நிருபர் ''அண்ணா, நீங்கள் எங்களுக்கு ஒரு விருந்து கொடுக்க வேண்டும்'' என்று சொன்னார்.

அதை அலட்சியப்படுத்தாமல் 15 நாட்களுக்குப் பிறகு தன் இல்லத்தில் பெரியதொரு தேநீர் விருந்தாகவே நடத்தி விட்டார்!

அண்ணா இரண்டு ஆண்டுகள் கூட முதல்வராகப் பணியாற்றவில்லை. முடிந்தவரை மக்களின் பிரச்னைகளை உணர்ந்து, பணியாற்ற முற்பட்டாரென்றே நான் உறுதியாகக் கூறுவேன். அரசாங்கத்தில் பணியாற்றும் பல பெரிய அதிகாரிகளும் அண்ணாவைப் பற்றிய இந்த அபிப்பிராயமே கொண்டிருந்தனர். ''நிறை குடம் தளும்பாது'' என்கிற வாக்குப்படி நடந்த தலைவர், அண்ணா.

# ரூ. 10,000 சேமித்த ஒரு விவசாயி ஒவ்வொரு ஆண்டும் ரூ. 600 நஷ்டமடைந்து வந்த செய்தி உங்களுக்குத் தெரியுமா?

அவருடைய பணத்தை பாங்கில் போட்டு வைத்தால், அது பத்திரமாக இருப்பதுடன் வட்டியோடு வளரவும் செய்யும் என்பதை அவருக்குப் புரிய வைப்பதற்குள் பாங்க் அதிகாரிக்கும் அவருடைய விளம்பர அலுவலர்களுக்கும் மிகவும் சிரமமாகப் போய் விட்டது.

பிறகு தான் அவர் அதிகாரியை தமது வயலுக்கு அழைத்துச்சென்ருர். அங்கே மண்ணைத் தோண்டி, நோட்டுகளாகப் புதைத்து வைத்திருந்த 10,000 ரூபாயை எடுத்து, ஸ்டேட் பாங்கிலே ஒரு சேமிப்புக் கணக்கைத் தொடங்கினுர்—பி.டி.ஐ.

ஸ்டேட் பாங்கில் போட்டுவைத்திருந்தால் இந்த ரூ. 10,000-ன் மீது கிடைத்திருக்கும் வட்டியான ரூ. 600/-, அவருக்கு இப்போது நஷ்டம். ஏன். இந்த ரூபாய் பத்தாயிரத்தையும்கூட அவர் இழந்திருக்கக்கூடும். ஏனெனில் கரையான்களும் மற்ற பூச்சிகளும் ரூபாய் நோட்டுக்களைக் கொண்டு ஒரு விருந்தே நடத்தியிருக்கலாமே! இந்த விவசாயிக்குக் கிடைத்த அதிருஷ்டம் உங்களுக்கு இல்லாதிருக்கலாம். எனவே உங்கள் பணத்தை ஸ்டேட் பாங்கிலே போட்டுவையுங்கள்! நாடெங்கும் 2,300-க்கு மேலான ஆபீசுகளை உடைய ஸ்டேட் பாங்கும், அதன் சப்ஸிடியரிகளும் உங்கள் ஒவ்வொருவருக்கும் அருகிலேயே சேவை செய்யக் காத்திருக்கின்றன.

ஸ்டேட் பாங்கின் வெளி அதிகாரிகள் தடமற்ற கிராமங்களுக்கும் சென்று கிராமவாசிகளுக்கு யோசனைகள் கூறி, சேவை செய்து வருகிருர்கள். ஸ்டேட் பாங்க் மூலம் சேமித்து நலம் பெறுங்கள்.

நீதி: உங்கள் பணத்தை ஒளித்து வைக்காதீர்கள். ஸ்டேட் பாங்கில் போட்டு அதை வளரச் செய்யுங்கள். இது உங்களுக்கும் உதவி, நாட்டுக்கும் நல்லுதவி.

**சேவை புரிவதற்கே ஸ்டேட் பாங்க்**

# சென்னையில் பிரார்த்தனைக் கூட்டம்

1946 பிப்ரவரி 3-ம் தேதி விகடன் இதழில் வெளியான கட்டுரை:

பிரதி தினம் மாலை மகாத்மா, பிரார்த்தனைக் கூட்டத்தை நடத்தி வைத்தார். உண்மையில் இந்தப் பிரார்த்தனைக் கூட்டங்களே பொது ஜன வைபவமாக இருந்ததென்றால், அது மிகையாகாது. பொது ஜனங்கள் காந்திஜியைத் தடையின்றி தரிசிப்பதற்கும், அதே சமயத்தில் தங்களுடைய எல்லை மீறிய விசுவாசத்தைத் தெரிவிப்பதற்கும் பிரார்த்தனை ஸ்தலம் ஏற்ற இடமாயிருந்தது. பிரார்த்தனை மாலை 5-30 மணிக்குத்தான் என்றாலும், பகல் ஒரு மணியிலிருந்தே மைதானத்தில் ஜனங்கள் கூட ஆரம்பித்தார்கள். நாளுக்கு நாள் எண்ணிக்கை லட்சம், ஒன்றரை லட்சம், இரண்டு லட்சம் என்று அதிகரிக்க ஆரம்பித்தது. சென்னையில் ஒரு புறம் லவண சமுத்திரம் இருந்ததென்றால், காந்திஜியின் பிரார்த்தனைக் கூட்டத்தில் ஒரு ஜன சமுத்திரம் இருந்தது. அலை மேல் உதயமாகும் சூரியநாராயணனை இந்தத் தலைகள் மேல் தோன்றிய மகாத்மா ஞாபகமூட்டினார்.

பேசுவார். பிறகு அமைதியாக ஆர்ப்பாட்டமின்றி ஜனங்களைக் கலைந்து செல்லும்படி கூறுவார். பிரார்த்தனை ஸ்தலத்திலிருந்து கூட்டம் முழுமையும் கலைவதற்கு மட்டில் இரண்டு மணி நேரத்திற்கு மேல் செல்வது உண்டு. இந்த சமயத்தில் பிரார்த்தனையின் போது ஏற்பட்ட ஓர் அற்புதப் பொருத்தத்தையும் சொல்ல வேண்டும். அன்று மாலை காந்திஜி, பிரார்த்தனை ஆரம்பத்தில் தியாகய்யர் கீர்த்தனம் ஒன்றைக் கேட்டுவிட்டு அவருடைய மகிமையைப் பற்றியும், அதிலுள்ள தெய்வாம்சமான சங்கீதத்தைப் பற்றியும் விளக்கிக் கூறினார்.

ஹிந்தி பிரசார வைபவம், பிரார்த்தனை இவற்றைத் தவிர மகாத்மாஜி






பிரார்த்தனை மேடைக்கு மகாத்மா வந்த உடனே நின்றவாறே சுற்று முற்றும் ஒரு தடவை பார்த்துவிட்டு, 'பேசக் கூடாது' என்று சைகை மூலம் உத்தர விடுவார். அந்த உத்தரவுக்கு அத்தனை லட்சம் பேர்களும் உடனே கீழ்ப்படிந்து விடுவார்கள். அப்புறம் மகாத்மா 'உட்காரு' என்றால் உட்கார்ந்துவிட வேண்டியதுதான். 'பேசாதே' என்றால் அப்புறம் பேசவே முடிவதில்லை, 'தாளம் போட்டுக் கொண்டு பாடுங்கள்' என்றால், அதைத் தவிர வேறு ஒன்றும் செய்ய இயலுவதுமில்லை.

பிரார்த்தனை ராம பஜனையுடன் ஆரம்பமாகும். மகாத்மா சிறிது நேரம்

ஒவ்வொரு நாளும் ஊழியர் கூட்டங்களில் கலந்து கொண்டு வந்தார். பல மகாநாடுகளிலும் கலந்து கொண்டார். இதைத் தவிர அவகாசம் கிடைத்த நேரங்களில் ஹரிஜனங்களுக்குப் பணம் வசூலித்தார். மகாத்மா தம்முடைய இருப்பிடத்தை விட்டுத் தாமாகவே சென்று ஒருவரைப் பார்த்தார். அவர்தான் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வரும் மகாகனம் சீனிவாஸ சாஸ்திரியார் ஆவார். மகாத்மாவைப் பார்த்த ஆறுதலைவிட, கனம் சாஸ்திரியாரின் நோயைத் தீர்க்கக் கூடிய மருந்து ஜெனரல் ஆஸ்பத்திரியில் எங்கே இருக்கப் போகிறது?

மறக்க முடியாத நிகழ்ச்சி



# நீங்காத நினைவு

என்னுடைய தந்தை ஆஸ்த்மா நோயால் பாதிக்கப்பட்டவர். எங்களுக்கு நிலபுலன் இருந்தும், அதைப் பராமரிப்பதில் அவருக்கு அவ்வளவாக விருப்பம் கிடையாது. அவர், சங்கீதம், ஓவியம் மற்றும் கம்பராமாயண விரிவுரை சொல்வது இவற்றிலேயே முழு நேரத்தையும் செலவு செய்பவர்.

இவர் தரும் ஓர் உருண்டை சோற்றுக்காக ஓர் விலாசமில்லாத 'நாய்' எங்கள் வீட்டுக்கு வரும். அவர் வைக்கும் சாப்பாட்டை விழுங்கி விட்டுப் போய்விடும். பின்பு அதை மறுநாள்தான் பார்க்கலாம்.

ஒரு நாள் வீட்டில் ஏதோ மனக்கசப்பில் என் தகப்பனார் குடையை எடுத்துக் கொண்டு நான்கு மைல்கள் தள்ளி மலையடிவாரத்தில் இருந்த வயலுக்குப் புறப்பட்டுப் போய் விட்டார். அவர்போய் சிறிது நேரத்திற் கெல்லாம் மழை வேறு ஆரம்பித்து விட்டது.

இரவு மணி பத்தாகியும் அவரைக் காணவில்லை. நாங்கள் வீட்டு வாசலிலேயே எதிர்பார்த்துக் காத்து நின்றோம்.

பின்பு எங்கள் தாயார் பக்கத்து வீட்டு எங்கள் மாமாவிடம் ஒரு போர்வையும், அரிக்கன் விளக்கும் கொடுத்துப் போய் பார்த்து வரும்படி கூறினார்கள். அவரும் புறப்பட்டுப் போய் விட்டார்.

சற்று நேரத்தில் எங்கள் வீட்டிற்கு வரும் அந்த விலாசமில்லாத நாய் வந்தது. எங்களை ஒவ்வொருவராகச் சுற்றியது. எங்களுக்கு எரிச்சல் உண்டு பண்ணியது. அதன் மேலெல்லாம் ஒரே தண்ணீர். எங்களுக்கிருந்த வேதனையில் அதை உதைத்துத் துரத்தினோம்.

மணி பதினொன்று இருக்கும்; எங்கள் மாமா என் தகப்பனாரைப் போர்வையால் போர்த்திக் கூட்டிக் கொண்டு வந்தார். எங்களுக்கு மன நிம்மதி ஏற்பட்டது. சற்று நேரம் ஓய்வெடுத்த பின், மேல் மூச்சு வாங்குவது நின்ற பின், அவர் வந்து சேர்ந்த கதையைச் சொன்னார்:

''மலையடிவாரத்தில் இருந்து புறப்படும் போதே மழை நீர் வயல்களின் வரப்புகள் தெரியாமல் மூடிவிட்டது. நேரம் ஆக ஆக மூச்சு வேகமாக இழுக்க ஆரம்பித்து விட்டது. என்ன செய்வதென்று அறியாமல் உட்கார்ந்து விட்டேன். இருட்டோ முன்னும் தெரியவில்லை பின்னும் தெரியவில்லை. என் கண்ணெதிரே ஒரு வெள்ளை உருவம் ஆடுவது கண்ணுக்குப் புலப்பட்டது. அது என்னை நெருங்கியது! யாரது என்று உரக்கக் கூப்பிட்டேன். வேறு யாருமில்லை. நான்கொடுக்கும்சோற்றுக்காகத் தினம் வரும் நாய்தான் அது. அதை அருகில் வரச் சொல்லி அதனுடைய கழுத்தில் என் மேல் துண்டை சுற்றிக் கட்டினேன். கழுத்தில் சுற்றியுள்ள துணியில் குடையின் முன் பாகத்தைச் செருகிக் கொண்டேன். அது முன் செல்ல, நான் பின் தொடர்ந்தேன். ஒரு வரப்பு விட்டு மறு வரப்பு தாண்டும் சந்தர்ப்பம் வரும்போது அது தானாகவே நின்றுவிடும். நான் தாண்டி மறுபக்கம் வந்தபின் அது புறப்பட்டுச் செல்லும். இப்படியாகச் சிவன் கோவில் வரை வந்து சேர்ந்து விட்டேன். பின்பு, நாய் வந்து விட்டது'' என்று கூறி முடித்தார்.

அவர் குறிப்பிட்ட சிவன் கோயில் எங்கள் வீட்டிலிருந்து ஒரு பர்லாங் தூரத்தில் இருக்கிறது. நாங்கள் துரத்திய அன்றிரவு போன அந்த நாய் இன்னும் காணவில்லை. ஒரு முறை வீடு பழுது பார்க்கும்போது சிமெண்ட் பூசிய காயாத ஈரத் தரையை அது மிதித்துச் சென்று விட்டது. அந்தக் கால் சுவட்டை அப்படியே விட்டு வைத்திருக்கிறோம்.

—மா. அய்யாவு.

# திக்குத் தெரியாத வீட்டில்..

## 10

சென்னை சென்ட்ரல் ரயில்வே ஸ்டேஷன். பெங்களூர் செல்லும் வண்டியின் முதல் வகுப்புப் பெட்டி ஒன்றில்-












மீசைக்காரன்,
எதிரில்
உட்காருகிறான்—

பக்கம்
தானுங்க!
அடுத்த
டேஷன்!
தம்பி
யாருங்க?

உன் மூப்
பாட்டன்!
முதலில் எழுந்
திருய்யா!
மீசையே
பயங்கரமாக
இருக்கிறது!

ஹி..ஹி..
தம்பிக்கு
கோபம்
போல் இருக்கு!
பாத்ரூம்
எந்தப்
பக்கம்..?

இப்படித்
தான்
வழி
போய்யா!

இறங்கவேண்
டிய வாசலுக்கே
வழிகாட்டி
விட்டாயே!

இவன்
எதற்கோ
இங்கே வந்
திருக்கிறான்!
இவனை உங்
களுக்குத்
தெரியுமா?

அதற்குள்—

பாபு, அவனை
வெளியே
போக விடாதே!
பெட்டியைத்
தூக்கிக்
கொண்டு
ஓடுகிறான்!

கதை: பி.டி.சாமி.
சித்திரம்:ஜெயராஜ்...

தொடரும்.

# அதிர்ஷ்டம் செய்தவர்

கஸ்தூரி பஞ்சு

கல்யாண வீட்டு வாசலில், வரவேற்பு வரிசையில் நின்று கொண்டிருந்தவர்கள், விஸ்வத்தைத் தடபுடலாக வரவேற்றார்கள்.

''டேய், நம்ம சர்மா சாருடைய பிள்ளை வந்திருக்கார், பார்! 'கூல்ட்ரிங்க்' கொண்டா. உள்ளே அழைத்துக் கொண்டு போய் டிபன் கொடு''... என்று தலைக்குத் தலை ஆசார உபசாரம் செய்தார்கள்.

அவனுடைய கைப்பிடியிலிருந்த ஆறு வயது ரமேஷ், அப்பாவின் முகத்தை நிமிர்ந்து பார்த்தான்.

அவனுடைய பிஞ்சு மனத்தில் பரவிப் பாய்ந்த வியப்பு, விரிந்த விழிகளில் துல்லியமாகத் தெரிந்தது.

''என்னடா ரமேஷ், அப்படிப் பார்க்கிறே? உனக்கு உன் தாத்தாவைப் பற்றி எதுவுமே தெரியாது, இல்லையா? வீட்டிற்குப் போகும் போது விவரமாக எல்லாம் சொல்கிறேன்''—குழந்தையின் காதருகே குனிந்து சொன்னான் விஸ்வம்.

டிபன், காபி எல்லாம் முடிந்து, கல்யாண வீட்டிலிருந்து கிளம்பி நாலெட்டுக்கள் நடப்பதற்குள்ளேயே, ஞாபகமாக அப்பாவைப் பிடித்துக் கொண்டான் ரமேஷ், ''அப்பா, தாத்தாவைப் பற்றிச் சொல்லுப்பா!'' என்று.

ஆறு மாதக் குழந்தையாக இருந்த போதே மாமா வீட்டிற்குப் போய் விட்ட ரமேஷ், ஆறு வருடங்களுக்குப் பிறகு, இப்போதுதான் பெற்றோரிடம் வந்திருக்கிறான். அதனால்தான் அவனுக்குத் தன் தாத்தாவைப் பற்றி அதிகம் தெரிந்து கொள்ள முடியாமற் போய் விட்டது.

விஸ்வம், மகனிடம் தன் தந்தையைப் பற்றிக் கொட்டி அளந்தான். அவன் சொன்னதை யெல்லாம் 'அளப்பு' என்று சொல்லிவிடக் கூடாதுதான். உண்மையை ஓரளவுக்கு மிகைப்படுத்திக் கூறியிருக்கலாமே யொழிய, பொய் அதில் கொஞ்சமும் இல்லை.

விஸ்வத்தின் தந்தை சர்மா, சாகும் வரையில் செல்வாக்கு குன்றாமலேயே தான் வாழ்ந்தார். ஊரில் மிகவும் முக்கியமான பிரமுகராகத்தான் திகழ்ந்தார். 'எட்டுக்கண் விட்டடிக்க' என்கிற மாதிரி, உட்கார்ந்தபடியே நினைத்ததைச் செயல்படுத்தும் சக்தியுடையவராகத்தான் இருந்தார். அவர் 'திடு'மெனக் கண்ணை மூடி விடவே, விஸ்வத்திற்கு உத்தியோக விஷயத்தில் உருப்படியாக ஒன்றும் செய்ய முடியாமற் போய் விட்டது.

தாத்தாவைப் பற்றித் தந்தை சொன்னதை யெல்லாம் வியப்புடன் திறந்த வாயை மூடாமல் கேட்டுக் கொண்ட ரமேஷ், ''அடேயப்பா, தாத்தா ரொம்பப் பெரியவர்தான்'' என்றான்.

''அது உனக்கும் எனக்கும் தெரிந்து என்ன பிரயோசனம்? உன் அம்மாவிற்கும், என் அம்மாவிற்கும் தெரியவில்லையேடா?'' என்று விஸ்வம் முணுமுணுத்ததும், ''என்னப்பா, சொல்றே?''... என்று கேட்டான் ரமேஷ்.

''உனக்கு ஒன்றுமில்லை, ரமேஷ்... கொஞ்சம் பேசாமல் வா'' என்று மகனின் வாயை மூடின விஸ்வத்தின் மனம், மத்தியானம் நடந்த நிகழ்ச்சிகளை அசை போட்டது.

மத்தியானம் மட்டும் என்றில்லை. தினமுமே பொழுது விடிந்து பொழுது போனால் வீட்டில் ஒரே வாக்குவாதம் தான்.

இந்தக் கல்யாணத்திற்கு வரவேண்டும் என்பதற்காக இப்போது போட்டுக் கொண்டு வந்துள்ள இந்த ஷர்ட்டைக் கொஞ்சம் கூடுதலான விலையில் வாங்கினதற்காக அன்று மத்தியானம் அவனைச் சாடின அவனுடைய அம்மாவும் மனைவியும், அதற்கு முதல்தான், அவன் வேலையை விட்டு விட்டதற்காகச் சத்தம் போட்டார்கள்.

அவன் மனைவிதான் மாமனாரின் அந்தஸ்தைச் சரிவர அறிந்து கொள்ளவில்லையென்றால், அவனுடைய அம்மாவாவது தன் கணவரின் கௌரவத்தைப்

# அப்பாதான்

போற்றிப் பாதுகாப்பதில் குறியாக இருக்க வேண்டாமோ என்று நினைத்துக் கொண்டான் விஸ்வம்.

சர்மாவின் மகனாக இருந்து கொண்டு இந்த 'ஷர்ட்'டை விட மட்டமானதைப் போட்டுக் கொண்டு வந்திருந்தால் நன்றாக இருந்திருக்குமோ? இதே மாதிரியானதொரு காரணத்திற்காகத்தான் இரண்டு மாதங்களுக்கு முன்னால் கிடைத்த உத்தியோகத்தையும் உதறிவிட்டு வந்து விட்டான். அவனுடைய அப்பாவிற்குக் கீழ் வேலை பார்த்து வந்தவர், இப்போது இவனுக்கு மானேஜராக இருப்பதற்காக, எது வேண்டுமானாலும் பேசிவிடலாமா? அவர் கடுமையாக ஏதோ ஒரு வார்த்தை சொன்ன அடுத்த கணமே, கால் கடுதாசியை எழுதி வீசிவிட்டு வந்து விட்டான்.

அவன் செய்தது தவறு என்றும், காலத்திற்குத் தகுந்த மாதிரி அவனுக்கு நடந்து கொள்ளத் தெரியவில்லை என்றும் மாமியாரும் மருமகளும் ஒரு கட்சியாக நின்று அவனைக் குற்றம் சாட்டினபோது, அவன் அதைக் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை. அவர்களுக்காக அவனுடைய கொள்கையை விட்டு விடுவதா என்ன?



விஸ்வமும் ரமேஷும் வீட்டுப் படியேறினபோது, உள்ளே அவன் மனைவி தன் மாமியாரிடம் ''பால்காரி, என்ன பேச்சுப் பேசி விட்டுப் போகிறாள், பாருங்கள். அவளுக்குக் கொடுக்க வேண்டும் என்று எடுத்து வைத்திருந்த பணத்தில், இவர் பாட்டிற்கு ஷர்ட் வாங்கிப் போட்டுக் கொண்டு போய் விட்டார். இப்போது நாளைக் காலை பாலுக்கு நாம்தானே யார் காலையாவது பிடித்தாக வேண்டியிருக்கிறது?'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

விஸ்வம் அவர்களின் பேச்சையோ பொருமலையோ சிறிதும் பாராட்டாமல், 'விடுவிடெ'ன்று உள்ளே போய் உடுப்புகளை மாற்றிக் கொள்வதில் முனைந்தான். ஆனால், குழந்தை ரமேஷின் நெஞ்சத்தில் அவன் அறியாமலேயே ஒரு நெருடல் ஏற்பட்டது.

'குடுகுடு' வென்று ஓடிப் போய், அவர்களிடையே நின்று கொண்டு, அவர்களின் முகங்களை மாறி மாறிப் பார்த்தான். அவன் கண்களில் தெரிந்த குழப்பத்தைக் கண்ட தாயும் பாட்டியும் நீண்ட வருடங்களுக்குப் பிறகு வந்துள்ள குழந்தைக்கு எந்த விதக் கலக்கமும் ஏற்படக் கூடாது என்கிற எண்ணத்துடன், சிரித்தபடி குழந்தையை இழுத்து அணைத்து முத்தமிட்டனர்.

மறு நாள் காலையில் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைத் தட்டியெழுப்பினான் விஸ்வம்.

''ரமேஷ்! எழுந்திரு, எழுந்திரு. இன்றைக்கு உன்னைப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப் போகிறேன். சீக்கிரமாக குளித்துவிட்டு 'ஜம்'மென்று டிரஸ் பண்ணிக் கொண்டு கிளம்ப வேண்டாமா?'' என்று சொல்லிக் கொண்டே எழுப்பினான்.

படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டு கண்களைக் கசக்கிய ரமேஷ், ''எந்த ஸ்கூல்லேப்பா என்னைச் சேர்க்கப் போறே?'' என்று கேட்டான்.

''இந்த ஊரில் உள்ள மிகப் பெரிய 'கான்வெண்ட்'டில் உன்னைச் சேர்க்கப் போகிறேனாக்கும். சர்மாவின் பேரன் சாதாரணப் பள்ளிக்கூடத்தில் படிக்கலாமா? உம்... உம்... எழுந்து போய்ப் பல் தேய்'' என்று அவன் சொல்லிக் கொண்டிருந்த போதே, காப்பி தம்ளருடன் அங்கு வந்த அவன் மனைவி,



தகப்பனார்:—மாப்பிள்ளே அடிக்கடி ரேஸுக்குப் போறாராமே .. உண்மையா?

பெண்:— அடிக்கடி எங்கேப்பா போறா? . ஏதோ வாரத்துக்கு ஒரு தடவைதான் போறார்!..

---

''இதென்ன பிடிவாதம், உங்களுக்கு? அந்தக் கான்வெண்ட்டில் பீஸிற்கும் புத்தகத்திற்கும் மட்டுமே மாதம் ஒன்றுக்கு...'' என்று ஆரம்பித்தவளை ''உஸ்ஸ்...'' என்று உதட்டில் விரலை வைத்து அடக்கின விஸ்வம், ''சீதா! ஸ்கூல் விஷயமா நீங்க யாருமே பேசக் கூடாதுன்னு நான் சொன்னது நினைவில்லை உனக்கு? உள்ளே போ'' என்று அழுத்தமாக அதட்டி அனுப்பினான்.

பிறகு பீரோவைத் திறந்து அதிலிருந்து புத்தம் புதிய எவர்சில்வர் டிபன் பாக்சும், அலுமினியப் புத்தகப் பெட்டியையும் எடுத்துக் கொடுத்தபடி ''ரமேஷ், உனக்காகத்தான் வாங்கி வைத்திருக்கிறேன். சீக்கிரமாகக் குளித்து, சாப்பிட்டு விட்டு வா. பூட்ஸ், சாக்ஸ் போட்டு விடுகிறேன். உன்னைப் பார்த்தவுடனேயே சர்மாவின் பேரன் என்று எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டாமா?'' என்றான் விஸ்வம்.

ரமேஷை அழைத்துக் கொண்டு, கான்வெண்ட்டின் ஆபீஸ் அறைக்குள் நுழைந்தான் விஸ்வம். பிரமாண்டமான அந்தக் கட்டடத்தையும் பெரிய

பெரிய வகுப்பறைகளையும் வியப்புடன் பார்த்தான் ரமேஷ்.

கட்டடத்திற்கு வெளியே எறும்புச் சாரிகளாக கார்கள் வந்து நின்றன. அவற்றிலிருந்து தும்பைப் பூப்போல் வெளுத்த உடை அணிந்து குழந்தைகள் குதித்தோடி வந்தன.

தந்தையின் செல்வாக்கை உபயோகித்து, மகனை அங்கு சேர்த்து விட்டுத் திரும்பினான் விஸ்வம்.

அன்று மாலை கான்வெண்டிலிருந்து ரமேஷ் வீடு திரும்பினபோது, முதல் நாளைப் போலவே, அவன் அம்மாவும் பாட்டியும் சமையலறையில் பேசிக் கொண்டிருந்தார்கள்.

''சீதா, இந்த விஸ்வம் இப்படி உலகம் தெரியாதவனாக இருக்கிறானேடி! அவனுடைய அப்பாவின் அந்தஸ்தைப் பற்றி எனக்கில்லாத அக்கறையா இவனுக்கு? அவர் எத்தனை பாடுபட்டு இப்படிப்பட்ட பெரிய பதவிக்கு வந்தார் என்பதைச் சிறிதும் எண்ணிப் பார்க்க மாட்டேன் என்கிறானே!... அப்பாவின் கௌரவம் என்று சொல்லிக் கொண்டு சக்திக்கு மேல் செலவழித்தால், குடும்பத்தின் கதி என்னவது? கிடைக்கும் வேலைகளையும் உருப்படியாகக் காப்பாற்றிக் கொள்ள மாட்டேன் என்கிறான். பால்காரிக்கு வைத்த பணத்தில் சட்டை வாங்கிப் போட்டுக் கொண்டு விட்டான். இந்த மாத அரிசி ரூபாயை, பள்ளிக்கூடச் சம்பளம், டிபன் பாக்ஸ் என்று செலவழித்தாகி விட்டது. இந்த ரீதியில் போய்க் கொண்டிருந்தால்...''- அதற்கு மேல் பாட்டி பேசினதைக் கேட்டுக் கொண்டு நிற்கவில்லை ரமேஷ்.

வந்த சுவடு தெரியாமல் திரும்பி வாசல் திண்ணையில் உட்கார்ந்து கொண்டான். சின்னக் கண்களை மூடித் திறந்தும், சிவந்த உதடுகளை அழுந்தக் கடித்துக் கொண்ட விதத்திலிருந்தும் அவனுடைய பிஞ்சு உள்ளத்தில், பெரிய திட்டம் உருவாகி விட்டது தெரிந்தது.

அவன் உட்கார்ந்த சிறிது நேரத்திற்கெல்லாம் வெளியிலிருந்து வந்த விஸ்வம்,''அடேடே, ரமேஷ்! எப்போ வந்தே, கான்வெண்டிலிருந்து? எப்படி யிருக்கிறது ஸ்கூல்? என்ன சொன்னார்கள் எல்லோரும்?'' என்று அடுக்கடுக்காகக் கேள்விகளைக் கேட்டபடி அவன் அருகில் வந்து அமர்ந்து கொண்டான்.

தந்தையிடம் நெருங்கி வந்த ரமேஷ், ''இப்போதான் வந்தேன்... ஸ்கூல் ரொம்ப ஜோராக இருக்குப்பா...... வந்து......பாடம் சொல்லிக் கொடுக்க வந்த 'மிஸ்' எல்லாம் தாத்தாவைப் பற்றி ரொம்ப ரொம்பச் சொன்னாங்க'' என்றான்.

பெருமையுடன் நெஞ்சை நிமிர்த்தி பூரிப்புடன் தோள்களை உலுக்கிக் கொண்ட விஸ்வம், ''உங்க தாத்தாவைப் பற்றி யாராவது பேசாமல் இருக்க முடியுமா? அங்கே இருக்கும் அத்தனை பேருமே உன் தாத்தாவினால் உயர்ந்தவர்கள்தான்டா. ரமேஷ்... அந்தத் தாத்தாவிற்குப் பேரனாகப் பிறந்த நீ மிகவும் அதிர்ஷ்டசாலி'' என்றான்.

அதைக் கேட்ட ரமேஷ் தலையை ஆட்டிக் கொண்டு, அவசரமாக...... ''ஊஹூம். நீ சொல்றது தப்புப்பா. நான் ஒண்ணும் அதிர்ஷ்டசாலி யில்லை'' என்றான்.

விஸ்வத்திற்குத் தூக்கி வாரிப் போட்டது. ''ரமேஷ், என்னடா சொல்றே நீ? நீ அதிர்ஷ்டசாலியில்லையா?'' என்று பரபரப்புடன் கேட்டான்.

''ஆமாம். எங்கப்பா பேரைச் சொல்லி அவருடைய பிள்ளை நான் என்றால் யாருக்குமே தெரியவில்லையே! ஆனால், உங்கப்பா பேரைச் சொன்னால் எல்லோருக்கும் தெரிகிறது. அத்தனை பேரும் மரியாதை செய்கிறார்கள். இல்லையாப்பா? அதனாலே நீதான் அதிர்ஷ்டம் செய்தவர்'' என்றான் கணீரென்ற குரலில்.

அதைக் கேட்ட விஸ்வம் நிலை குலைந்து நின்று விட்டான். அவனுக்குத் தன் கண்ணெதிரில் இருப்பது சாதாரண ஆறு வயதுக் குழந்தையாகத் தெரியவில்லை. உலகத்தையே ஆட்டிப் படைக்கும் அந்த உமாகாந்தனுக்கு 'ஓங்'கார மந்திரத்தை உபதேசித்த 'தகப்பன்சாமி'யாகத்தான் தோற்றமளித்தான். கரிய இருளிலிருந்து கண்ணைப் பறிக்கும் ஒளிக்கு முன்னால் வந்து விட்டது போன்றதோர் உணர்வு அவன் உள்ளத்தில் உண்டாயிற்று.

மறுநாள் காலையில், 'சர்மாவின் மகன் பார்க்கக் கூடிய வேலையில்லை' என்று உதறிவிட்டு வந்த உத்தியோகத்தைத் தேடி, அவனாகவே வலுவில் புறப்பட்ட போது அவன் தாயும் தாரமும் அயர்ந்து நின்றார்கள்.

உயர்ந்த பானங்கள், தின்பண்டங்களுக்கு

# வின்ஸென்ட்




- நாகரீக பார்ட்டிகளுக்கேற்றது பெப்பியோ & ஜூலா-கோலா
- உற்சாகத்துடன் சுவைக்க மாங்கோஸிப், விடோலா, வின்கோலா
- ஆரோககியமும், சந்துஷ்டியும் அளிக்க நான்கு வகை பழரச பானங்கள ஆரஞ்சுவின், மாங்கோவின், பைனேவின், கிரேப்வின்
- மேலும் சுவைமிகுந்த ஜிஞ்சர், ஆரஞ்சு, லெமன் எல்லாம் உண்டு.

## வின்ஸென்ட்

சத்துள்ள ரொட்டி, கேக், பிஸ்கட வகைகள் ஒவவொருவரையும மகிழ்விககிறது

VC: 108

---

## தவளதந்த்

பற்பொடி

பறகளை வலுவுடனும், உறுதியாகவும், பளிச் சென்றும் வைத்திருக் கிறது. பற்சிதைவைத் தடுக்கிறது.



## அபயாஸன

டேப்லெட்டுகள்

வயிற்றுக் கோளாறுகளுக்குச் சிறந்த மருந்து



## பஞ்சாரிஷ்டா

ஜீரணசக்தியை விருத்தி செய்யவும், சக்தியை மீட்டளிக்கவும், சிபாரிசு செய்யபபடும் டானிக். இது பசியை அதிகரித்து, நரம்புத் தளர்ச்சியைச் சமனப் படுத்துகிறது.






ஸாண்டு பார்மஸூடிகல் ஒர்க்ஸ் லிட்.,

பம்பாய்-25.

காட்சி–8.

இடம்: மூர்மார்க்கெட் சமீபம்.
நேரம்: நல்ல உச்சி வேளை.

[ராமு முத்துவைத் தேடித் தேடிக் களைப்புற்றவராய் ஒரு சோடாக் கடையில் நின்று கொண்டு, சோடா குடிப்பதற்காக நிற்பவர் போல் பாவித்துக் கொண்டு அங்கு வருவோரையும் போவோரையும் நோட்டம் விட்டபடி இருக்கிறார். வேதனையும் விரக்தியும் அதிகமான நிலையில் தனக்குத்தானே பேசிக் கொள்ள ஆரம்பித்து விடுகிறார்.]

ராமு:—மனுஷனுக்கு எந்த மாதிரி கஷ்டமும் வரலாம்! ஆனா, இந்த மாதிரி ஒரு கஷ்டம் வரக் கூடாதுப்பா! இதை விதின்னு சொல்றதா? தலையெழுத்துன்னு சொல்றதா? நாலு மணி நேரமா மெட்ராஸ் வெய்யில் பூரா என் தலை மேலே! இந்த மூர்மார்க்கெட்டை முப்பது தடவை சுத்தி சுத்தி

# ஆசை இருக்கு



வரணும்னு என் தலையிலே ஆண்டவன் எழுதிட்டான் பார்ரேன்? அப்பனே! ஏழுமலையானே! மலைக்கு நடந்தே வந்து உன்னை ஒரு தடவை தரிசிக்கி றேன்னு சொன்னேனே, அதை இன்னும் இவன் நிறைவேத்தலையேன்னு என்னைப் பழி வாங்கறியா? அந்தத் தாடிக்காரன் கிடைச்சுடட்டும்! மலைக்கு நடந்தே வர்றது மட்டுமில்லே... அங்கப் பிரதட்சணமே பண்றேம்பா!

[என்று பேசிக் கொண்டே இருந்தவரின் பேச்சு, ஏதோ ஒன்றைப் பார்த்தவுடன் சட்டென்று நிற்கிறது. சோடாக் கடையினுள் தாடியுடன் இருக்கும் ஒருவரின் போட்டோ மாட்டப்பட்டிருக்கிறது. கடைக்காரரிடம் நெருங்க...]

**ராமு:**—அய்யா, கடைக்காரரே! அந்தப் போட்டோவிலே இருக்கிறது யாரு? அவன் பேரு என்னன்னு தெரியுமா?

**கடைக்காரன்:**—பேரு 'முத்து'ங்க!

**ராமு:**—முத்துவா? முத்துன்னு சொன்னே? அந்தப் பாவி எங்கே இருக்கான்? சட்டுன்னு சொல்லேன்!

# தாசில் பண்ண...

## கே. பாலசந்தர்



**கடைக்காரன்:**—என்ன சாமி! உடம்பு எப்படி இருக்கு?

**ராமு:**—ரொம்பக் களைச்சுப் போயிருக்குப்பா!

**கடைக்காரன்:**—என்ன, பாவி கீவின்னு நல்ல உச்சி நேரத்திலே வம்புக்கு இழுத்துக்கிட்டு? ஆளைப் பார்த்துப் பேசு! போட்டோவிலே இருக் கிறது நான்தான் சாமி!

**ராமு:**—அப்போ...உன் பேரு...என்ன முத்து? நல்ல முத்துவா...? காத்த முத்துவா...? வெறும் முத்துவா...?

**கடைக்காரன்:**—காளிமுத்து...... ஏன் சாமி, எதுக்குக் கேட்கிறீங்க?

**ராமு:**—என் தலையெழுத்துப்பா—கேட் கிறேன்! சரி...! தாடி மீசையோட போட்டோ எதுக்குப்பா?

**கடைக்காரன்:**—ஒரு ஆசைதான்! ஒரு காலத் திலே தாடி வளர்த்தேன்! தாடியோட ஒரு போட்டோ எடுத்து மாட்டிக்கணும்னு ஆசை! போட்டோ எடுத்துக்கிட்டேன்! ஏன் சாமி இதெல் லாம் கேட்கிறே?

**ராமு:**—ஒரு தாடிக்காரனைத் தேடி அலைய றேம்ப்பா!

**கடைக்காரன்:**—ஏன் சாமி? அவன் உனக்கு ரூபா குடுக்கணுமா?

**ராமு:**—அவனுக்கு நான் திருப்பிக் குடுக்க ணும்பா, அஞ்சாயிரம் ரூபா! அதான் அவனைத் தேடறேன்!

**கடைக்காரன் (சிரித்து) :**—என்னு சாமி! ரூபாயைத் திருப்பிக் குடுக்கவா ஒருத்தன் பேயா அலேவான். போ சாமி!

**ராமு:**—அதிலே உள்ள 'லீகல் பாயிண்ட்' உனக்குத் தெரியாதுப்பா. நீ சும்மா இரு?

**கடைக்காரன்:**—என்ன பாயிண்டு சாமி? சொல்லேன்......!

**ராமு:**—ஏற்கெனவே ஒருத்தன் கிட்டே சொல்லிட்டு மாட்டிண்டு நான் முழிக்கிறது போருதா? உன் கிட்டே வேறே சொல்லணுமா? உன்னேயும் சாட்சியாக்கிக்கணுமா? கடைத் தொழிலேக் கவனிப்பா! நான் வரேன்!

**கடைக்காரன்:**—திரும்பி எப்போ வர்றீங்க சாமி?

**ராமு:**—திரும்பி இன்னொருதடவை இந்தப் பக்கம் வரணுங்கிறியா? அந்த தாடிக்காரன் என் கையிலே கிடைக்கவே மாட்டான்னு நினேச்சுண்டிருக்கியா?

**[அங்கிருந்து ராமு நகருகிருர். ஒரு பஸ் ஸ்டாப் சமீபம். ராமு போய்க் கொண்டிருக்கிருர். எதிரில் அவரது வக்கீல் நண்பர் சோமு வந்து கொண்டிருக்கிருர்.]**

**சோமு:**—என்ன, மிஸ்டர் ராமு! கவனிக்காம போயிண்டிருக்கீங்க?

**ராமு:**—உம்மைக் கவனிக்கிறதுக்கு உமக்கு என்ன தாடியா இருக்கு?

**சோமு:**—என்னய்யா உளர்றீங்க? ஒரு விஷயம் கேள்விப்பட்டீரா?

**ராமு:**—உம்ம 'கிளேயண்ட்' எவனுவது மண்டையைப் போட்டுட்டானு?

**சோமு:**—'கிளேயண்ட்' இல்லேய்யா; ஒரு காலேஜ் மாணவி...மர்டர்! இன்னும் கேள்விப்படலியா?

**ராமு (தூக்கி வாரிப் போட):**—மர்டரா? கொலேயா? மேலே சொல்லா தீங்கோ!

**சோமு:**—ஏனய்யா இப்படி கத்தறீங்க, நீங்களே கொலே பணின மாதிரி! மிஸ்டர் ராமு! அவன் என்ன புத்திசாலித்தனமா கொலே பண்ணியிருக்கான் தெரியுமா? அடாடா! பிரமாதம்ய்யா.....பிரமாதம்!

**ராமு:**—கொலேயைப் போய் ரசிக்கிறீரா? நாட்டிலே கொலேயெல்லாம் மலிஞ்சுண்டு வருதேன்னு வேதனேப் பட்டுண்டிருக்கேன். நீர் என்னடான்னு ரசிச்சுண்டு இருக்கீர்!

**சோமு:**—வேறே எதுவும் மலியலேன்னுலும் கொலேயாவது மலிஞ்சுண்டு வருதேன்னு நான் சந்தோஷப்படறேன். மேலே கேளுய்யா? அவன் கொலேயை எப்படிப் பண்ணியிருக்கான் தெரியுமா? தலே வேறே... பாடி வேறே!

**ராமு: (திகிலடைந்தவராக) :**—வெட்டு ஒண்ணு, துண்டு ரெண்டா? அப்புறம்......?

**சோமு:**—பாடியை கடல்லே போட்டுட்டான்...

**ராமு:**—தலேயை புதை குழியிலே போட்டுட்டானு...? மேலே சொல்லாதய்யா...! மேலே சொல்லாதய்யா...!

(ஓட ஆரம்பிக்கிருர்.)

**சோமு :**— ஏனய்யா இப்படிக் கிடந்து அல்லாடறீங்க?

**[அடுத்த நிமிடம் ராமு அந்த இடத்தில் நிற்காமல் ஓடிக் கொண்டே இருக்கிருர். ஓடிக் கொண்டே இருப்பவர் யார் மீதோ மோதிக் கொள்ள, ராமு தலே நிமிர்ந்து பார்க்க, அங்கு அவர் தேடி வந்த முத்து நிற்கிருன்...!]**

**ராமு:**—ஏண்டாப்பா! நீதானு?... கும்பிடப் போன தெய்வம்ப்பா நீ!... உன்னேத் தேடித் தேடி காலேயிலேருந்து அலேயறேன்ப்பா! வீடு வரையிலே கொஞ்ச நேரம் வந்துட்டுப் போப்பா! உன் கிட்டே ரகசியமா கொஞ்ச நேரம் பேசணும்! மாட்டேன்னு ஒரே வார்த்தையிலே சொல்லிடாதேப்பா!

**[என்று கைகளேப் பிடித்துக் கொண்டு கெஞ்சுகிருர்.]**

**முத்து:**—உங்க கூட நான் பேசறதுக்கு ஒண்ணுமில்லே சார்!

**ராமு:**—ஏண்டாப்பா! அந்தக் கொலேயை நீ இன்னும் பண்ணலேயே!

**முத்து:**—இன்னிக்கு ராத்திரி எட்டு மணிக்குத்தான் செய்யப் போறேன்!

**ராமு:**— செஞ்சுடாதேப்பா! உன் பணத்தை நான் திருப்பிக் கொடுத்துடறேன்! வீட்டுக்கு வாப்பா! உன் காலேப் பிடிச்சுக்கிட்டு கெஞ்சறேன்... வாப்பா என்கூட. **[கையைப் பிடித்து இழுத்தபடி போகிருர்.]**

**(அடுத்த இதழில் முடியும்.)**

# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

பிரைவேட் லிமிடெட்

(ஸ்தாபிதம்: 1947)

"வீணு விகார்" – 17-A, ஃபிளாங் ரோடு,

ஷண்முகானந்தா ஹாலுக்கு அருகில்

சயான் (கிழக்கு) பம்பாய் - 22. D. D.

டெலிபோன்: 471455 :: தபால் பெட்டி: 6759 :: தந்தி: 'GROWRICH'

1969 ஏப்ரலுக்குரிய கீழ்கண்ட சீட்டுகள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன

ஏலம் கேட்ட பிறகு டிவிடெண்டு அடையும் வசதியுடைய குருப்புகள்

| குறுகிய காலம்: 25 மாதங்கள் ஏலத் தேதி: 13—4—1969 | | | நீண்ட காலம்: 40 மாதங்கள் ஏலத் தேதி: 27—4—1969 | | |
|---|---|---|---|---|---|
| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
| | ரூ | ரூ. | | ரூ. | ரூ. |
| A | 200-00 | 5000-00 | | | |
| B | 100-00 | 2500-00 | E | 500-00 | 20000-00 |
| C | 50-00 | 1250-00 | F | 250-00 | 10000-00 |
| F | 25-00 | 625-00 | | | |
| G | 20-00 | 500-00 | G | 125-00 | 5000-0[illegible] |

நீண்ட காலம்: 50 மாதங்கள்: ஏலம் எடுக்காத சீட்டுதாரர்களுக்கு மட்டும் டிவிடெண்டு உண்டு

ஏலத் தேதி: 20—4—1969

| வகுப்பு | தவணை | சீட்டுத் தொகை |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| LTA | 100-00 | 5,000-00 |
| LTB | 50-00 | 2,500-00 |
| LTD | 20-00 | 1,000-00 |

வேலை நேரம் { காலை 8 மணி முதல் 10-30 வரை
மாலை 4 மணி முதல் 7-30 வரை

வார விடுமுறை: திங்கட்கிழமை

தலைமை அலுவலகம் & பதிவு செய்யப்பட்ட அலுவலகம்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி,

தபால் பெட்டி நெ. 414

மதறாஸ் – 5.

கிளைகள்: பங்களூர் - கல்கத்தா - புது டில்லி

பிரகடனம் இலவசம் — சீட்டுகள் ஒதுக்குதல் கம்பெனியின் உரிமையைப் பொறுத்தது

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**